# வீடும் வெளியும்

## ரவீந்திரநாத் டாகுர்

கி. சாவித்ரி அம்மாள்
மொழிபெயர்த்தது



உரிமை பதிவு]

கலைமகள் காரியாலயம்
மயிலாப்பூர் :: சென்னை

[விலை ரூ. 3/8

இரண்டாம் பதிப்பு : மே. 1951.

## குறிப்பு

வீடும் வெளியும் என்ற இந்த நாவலைத் தமிழில் மொழிபெயர்த்து வெளியிட எங்களுக்கு உரிமை அளித்த விசுவ பாரதி நிலையத்தாருக்கு எங்கள் நன்றி.

—பதிப்பாளர்.

PRINTED AT
THE MADRAS LAW JOURNAL PRESS,
MYLAPORE, MADRAS.

# வீடும் வெளியும்

## விமலா

### 1

அம்மா! நீ நெற்றியில் அணிந்திருந்த குங்குமம், நீ வழக்கமாக உடுத்துக்கொள்ளும் அகன்ற சிவப்புக் கரையோடு கூடிய அந்தப் புடைவை, ஆழ்ந்த அமைதியோடு விளங்கிய உன் கண்கள் எல்லாம் இன்று எனக்கு ஞாபகம் வருகின்றன. என் வாழ்க்கை யாத்திரையின் ஆரம்பத்தில் அவைகளே அருணோதயம்போல் எனக்கு வெளிச்சத்தை அளித்து உதவின.

வெளிச்சத்தைக் கொடுக்கும் ஆகாயம் எப்படி நீலமோ அப்படியேதான் அம்மாவின் முகமும் கறுப்பு. ஆனால் அதில் புனிதத்தின் ஒளி திகழ்ந்தது. அம்மாவின் அழகு அதி ரூபலாவண்யம் வாய்ந்தவர்களைக்கூடத் தம் செருக்கை இழந்து தலை குனியச் செய்வதாக இருந்தது.

நான் அம்மாவின் சாயல் என்று எல்லோரும் சொல்லுகிறார்கள். குழந்தைப் பருவத்தில் எனக்கு அதைக் கேட்கப் பிடிக்கவில்லை. கண்ணாடியில் என்னைப் பார்த்துக் கொள்ளும்போதெல்லாம் எனக்கு எரிச்சல் வரும். 'தெய்வம் அநியாயமாக இவ்வாறு என்னைப் படைத்து விட்டதே' என்று எண்ணினேன். எனக்குத் தகாத இந்தக் கறுப்பு நிறம் ஏதோ தவறாகவே எனக்கு வாய்த்து விட்டதுபோல் தோன்றிற்று. இனிமேல் அதற்குப் பரிகாரமாக நான் தெய்வத்தை வேண்டிக்கொள்வதெல்லாம், புராணங்களில் வர்ணித்திருப்பதுபோல், பெண் குலத்துக்கே ஒரு சிறந்த லக்ஷ்யமாக விளங்கவேண்டும் என்பது தான்.

கல்யாணத்துக்காகப் பிள்ளைவீட்டார் வந்து என்னைக் கேட்டபோது ஜோசியனைக் கூப்பிட்டுக் கேட்டார்கள். அவன் என் கையைப் பார்த்துவிட்டு, 'இந்தப் பெண் ணின் கையில் சுபமான ரேகைகள் அமைந்திருக்கின் றன. இவள் பதிவிரதையாக இருப்பாள்' என்றான். அதைக் கேட்டுக்கொண்டிருந்த பெண்டுகள் அனைவரும், 'தோற்றத்தில் தாயைக் கொண்டிருப்பவள் குணத்திலும் அப்படியே இருப்பதில் ஆச்சரியம் ஒன்றும் இல்லை' என்று சொன்னார்கள்.

ஒரு ஜமீன்தாரின் குடும்பத்தில் எனக்குக் கல்யாணம் ஆயிற்று. சிறு பிராயத்தில் கதையில் வரும் ராஜகுமா ரர்களைப்பற்றிப் படித்து எனக்கு நல்ல பழக்கம் உண்டு. ஆனால் அந்த ராஜகுமாரர்களுடையது போன்றது அல்ல என் கணவருடைய உருவம். என்னைப்போல் அவரும் கறுப்பு. அதனால் என் ரூபக் குறைவை எண்ணி நான் கொண்டிருந்த வெட்கம் கொஞ்சம் குறைந்தது. ஆனா லும் அதே சமயத்தில் ஏதோ ஒரு வருத்தமும் என் உள்ளத்தில் குடிகொண்டது.

ரூபமானது புலன்களுக்கு விஷயமாகாமல் நம் புனித மான உள்ளத்தில் பிரவேசிக்கும்போதுதான் தன்னை மறக்க முடியும். அன்புதான் அழகு என்பதைக் குழந் தைப் பருவம் முதலே நான் அறிவேன். அப்பா சாப்பி டும்போது அம்மா மிகவும் சிரத்தையுடன் தன் கைகளி னாலேயே பழங்களை நறுக்கி வைத்து ஈ மொய்க்காதபடி மெதுவாக விசிறிக்கொண்டிருப்பாள். அப்போது அப் பணிவிடையில் வெளியாகும் அழகு புறப்பொலிவுக்கு மேற்பட்டது. குழந்தையாக இருக்கும்போதே அதன் சக்தியை நான் உணர்ந்துகொண்டேன். சந்தேகங்கள், வாதங்கள் யாவற்றையும் மீறியது அந்த அழகு. அதுதான் பரிசுத்தமான இனிய சங்கீதம்.

எனக்கு நன்றாக ஞாபகம் இருக்கிறது: விவாகமான பிறகு ஒவ்வொரு நாளும் விடியற்காலையில் சப்தம் செய்யா மல் நான் மெதுவாக எழுந்து தூங்கிக்கொண்டிருக்கும் என் பதியின் பாததூளியை எடுத்துத் தலையில் அணிந்து கொள்வேன். அப்போதெல்லாம் என் நெற்றியிலுள்ள

குங்குமம் வானத்தில் வெள்ளியைப்போல் ஒளிவிட்டுப் பிரகாசித்துக்கொண் டிருப்பதுபோலத் தோன்றும்.

ஒரு நாள் அவர் விழித்துக்கொண்டாற்போல் இருக்கிறது. புன்னகையுடன், 'என்ன அது, விமலா? என்ன செய்கிருய்?'' என்று கேட்டார். ஐயோ! அன்று நான் பட்ட அவமானம்! ஒருவரும் அறியாமல் ரகசியமாக ஏதோ நான் புகழ் சம்பாதிக்க முயலுவதாக அவர் நினைத்திருப்பார். ஆகா! புகழ் சம்பாதிக்கவா முயன்றேன்! என் பெண் உள்ளம் அல்லவா அவ்வாறு தன் பிரேமையைச் செலுத்தியது?

•

நான் ஒரு ஜமீன்தார் வீட்டில் வாழ்க்கைப்பட்டேன். என் புக்ககத்தார் பாதுஷாக்கள் காலத்திலிருந்து கௌரவமாக வாழ்ந்து வருபவர்கள். அவர்களிடையே சில வழக்கங்கள் மொகலாயர் பட்டாணியர் இவர்களைப் பின்பற்றியவையாகவும், சில மனு பராசரர் வகுத்த விதிகளை அநுசரித்தவையாகவும் இருந்தன. ஆனால் என் கணவரோ முற்றும் நவீன நாகரிகத்தைச் சேர்ந்தவர். அந்தக் குடும்பத்தில் அவர்தாம் முதல்முதல் காலேஜில் படித்து எம்.ஏ. பட்டம் பெற்றவர். அவருடைய தமையன்மார் இருவரும் குடிப்பழக்கத்தினால் இளவயசிலேயே காலமாகிவிட்டார்கள். அவர்களுக்குக் குழந்தை குட்டிகள் இல்லை. என் கணவரிடம் குடி முதலிய துர்க்குணம் எதுவும் இல்லை. அவருடைய நடத்தையில் சஞ்சலத்தன்மை இல்லை. அந்தக் குடும்பத்தில் அவர் குடிக்காதது மிகவும் அதிசயமாகிப் பல பேர்களுக்கு மதிப்புக் குறைவாகக் கூடத் தோன்றிவிட்டது. வயிற்றுக்கு இல்லாதவன் அல்லவா ஒழுங்காக இருப்பான் என்பது அவர்கள் எண்ணம்! சந்திரனிடம் அல்லாமல் நக்ஷத்திரங்களிடத்தில் எங்கேயாவது களங்கம் தோன்றுமா?

என் கணவரின் பெற்றோர்கள் வெகு நாளைக்கு முன்னமே இறந்துவிட்டனர். அவர் பாட்டிதான் வீட்டின் தலைவி. என் கணவர் அவள் கழுத்துக்கு ஆரமாகவும் கண்ணின் மணியாகவும் விளங்குகிறார். ஆகவே பழைய வழக்கங்களை மீறி ஒரு காரியம் செய்வதில் அவருக்குக் கஷ்டம் இல்லை. என்னுடன்கூட இருந்து எனக்கு

ஆங்கிலம் கற்றுக்கொடுக்கும்படி மிஸ் இல்பி என்பவளை நியமித்தார். அதைப் பார்த்து வீட்டிலும் வெளியிலும் ஜனங்கள் பெரிதாக வம்பளந்ததை அவர் பொருட்படுத்த வில்லை.

அப்போதுதான் பீ.ஏ. யில் தேர்ச்சிபெற்று, என் கணவர் கல்கத்தாவில் எம்.ஏ.க்குப் படித்துக்கொண் டிருந்தார். அவரிடமிருந்து நித்தியம் எனக்குக் கடிதம் வரு வது உண்டு. ஐந்தாறு வரிகளே எழுதுவார். பெரிய சமாசாரம் ஒன்றும் இருக்காது. ஆயினும் பளிச்சென்ற அவர் கையெழுத்து என்மேலுள்ள அவர் அன்பை விளக்கு வதுபோல் தோன்றும். அந்தக் கடிதங்களை ஒரு சந்தனப் பெட்டியில் வைத்து, தினமும் தோட்டத்திலுள்ள மலர்களைக் கொண்டுவந்து அவைகளின்மேல் தூவி வைப்பேன்.

காலையில் சந்திரன் ஒளி மங்கிப்போவதுபோல் நான் கதையில் வாசித்த ராஜகுமாரனும் என் நினைவி னின்றும் மங்கி மறைந்துவிட்டான். இப்போது என் நிஜமான ராஜகுமாரனை என் இருதய சிம்மாசனத்தில் ஏற்றிவைத்தேன். நான்தான் அவருடைய ராணி; அவ ருக்குப் பக்கத்தில் வீற்றிருக்கக்கூடியவள். ஆயினும் என் னுடைய இடம் அவர் மலரடிகளே என்பதில்தான் எனக்குப் பூரணமான ஆனந்தம்.

நான் முறையாகக் கல்வி பயின்று நவீன நாகரிகத் துடன் அதற்கு உரிய பாஷையில் பரிசயம் செய்து வைக் கப்பட்டேன். நான் எழுதும் இவ்வார்த்தைகள் இப்போது தாமே வெட்கத்தினால் குன்றியவைபோலத் தோன்று கின்றன. ஆனால் இந்த நவீன வாழ்க்கை முறையை நான் ஏற்றுக்கொள்ள இசைந்தாலும் ஸ்திரீயாகப் பிறப் பது எப்படி என் கையில் இல்லையோ அப்படியேதான் ஸ்திரீயின் பிரேமையிலுள்ள பக்தியும் ஏதோ கற்பனைக் காவியத்தினின்றும் மேற்கோளாக எடுத்துப் பள்ளியில் படிக்கும் பெண்ணின் காபிப் புத்தகத்தில் எழுதிவைப்பது போன்றது அல்ல என்பது எனக்குத் தெரியாதா?

ஆயினும் என் கணவர் நான் தம்மைப் பூசிப்பதற்கு இடம் கொடுப்பதில்லை. அதுதான் அவருடைய தனிப்

பெருமை. தம் மனைவியிடமிருந்து பூஜையை மட்டுமே எதிர்பார்க்கும் சில அற்பமான கணவர்களும் இருக்கிறார்கள் அல்லவா? அது கணவன், மனைவி இருவருக்குமே அவமானந்தான்.

அவர் என்மேல் கொண்டிருந்த அன்புவெள்ளம் நான் கட்டியிருந்த வரம்பையெல்லாம் மீறிச் சென்றுவிட்டது. ஆனால் என் குணம் என்னவோ பெற்றுக்கொள்வதைக் காட்டிலும் கொடுப்பதில்தான் பிரியமுடையது. காதலின் குறும்புத்தனமோ வீட்டில் பளிங்கு ஜாடிகளில் வைத்துக் காப்பாற்றுவதைக் காட்டிலும் புழுதி படிந்த சாலையோரங்களில்தான் தன் மலர்களைப் பின்னும் நன்றாக மலரும்படி செய்கிறது.

பழைய சம்பிரதாயங்களையும் வழக்கங்களையும் அடியோடு தொலைத்துவிட என் கணவரால் முடியவில்லை. ஆதலால் நாங்கள் விரும்பியபோதெல்லாம் ஒருவரை ஒருவர் சந்தித்துக்கொள்வது என்பது சாத்தியம் அல்ல. அவர் வரும் நேரம் எனக்கு நன்றாகத் தெரியுமாதலால் அதற்கு வேண்டிய ஏற்பாட்டுடன் நானும் தயாராக இருப்பேன். ஆகவே விருத்தத்தில் அமைத்து எழுதும் ஒரு கவிபோல் இருந்தது எங்கள் சந்திப்பு.

பகல் வேலையெல்லாம் முடிந்து ஸ்நானம் செய்த பிறகு தலையைப் பின்னிக் கட்டிக்கொள்வேன். பிறகு நெற்றியில் புதிதாகக் குங்குமம் அணிந்து வேறு புடைவை உடுத்துக் கொண்டு வீட்டுவேலைகளின் நினைவை அறவே ஒழித்து மிகச் சிரத்தையுடன் ஒரே ஒரு மனிதர்பால் என் உள்ளத்தை முற்றும் அர்ப்பணம் செய்திருப்பேன். அப்படிப் பட்ட நேரம் மிகவும் சொற்பந்தான். ஆயினும் அது முடிவற்றதாகத் தோன்றிற்று.

புருஷன், மனைவி இருவரும் ஒருவருக்கு ஒருவர் கடமைப்பட்டவர்கள்; அன்பிலும் ஒருவருக்கு ஒருவர் தாழ்ந்தவர்கள் அல்ல என்று என் கணவர் கூறுவார். அவ்விஷயத்தைப்பற்றி நான் ஒன்றும் வாதாடுவதில்லை. இருவரும் உண்மையில் சமம் என்பது மனைவியின் பக்தியினால் ஒரு நாளும் மாறுபடாது. அது அங்நிலையை இன்னும்

உயர்த்துமேயொழிய வேறில்லை என்று நான் மனத்துக்குள் கூறிக்கொள்வேன். அந்த உயர்நிலை என்றும் நிலையானது. ஒரு நாளும் அந்த ஸ்தானத்தை விட்டு அது கீழிறங்கிக் குன்றிப்போகும் என்ற பயம் இல்லை.

என் அன்பே! உம்மை மேலாக மதித்து நான் பூஜிக்க வேண்டும் என்று நீங்கள் எதிர்பாராதது மிகவும் உயர்வுதான். ஆயினும் என் பூஜையை நீங்கள் ஏற்றுக்கொண்டால் எனக்கு அது உண்மையான உபகாரமாகும். என்னை அலங்கரித்துக் கல்வி கற்கும்படி செய்து நான் கேட்டது, கேட்காதது யாவற்றையும் அளித்து நீங்கள் உங்கள் அன்பை வெளியிட்டீர்கள். நீங்கள் என்னைப் பார்க்கும்போது அந்தப் பார்வையில் விளங்கும் பேரன்பு எவ்வளவு என்பதை நான் கண்டிருக்கிறேன். என்மீதுள்ள பிரேமையில் நீங்கள் உங்கள் வருத்தத்தைக்கூட ஒருவரும் அறியாமல் உங்களுக்குள்ளேயே பெருமூச்சு விட்டு அடக்கியதை நான் அறிவேன். தேவலோகத்துமலர்போல் இந்தச் சரீரத்தை நீங்கள் பாராட்டினீர்கள். ஏதோ தெய்வ அருளால் பெற்றதுபோல் என் குணத்தையே நீங்கள் மேலாகப் போற்றினீர்கள்.

நீங்கள் தேடிவந்த செல்வம் யாவும் என்னுடையதே என்று நினைத்து நினைத்துச் செருக்கடையும்படி செய்தது உங்களுடைய இந்தப் பேரன்பு. ஆயினும் இத்தகைய வீண் பெருமை ஒரு பெண்ணுக்கு உரியதல்ல. வலுவில் அளிக்கும் அன்பின் பெருக்கை அது அணைபோட்டுத் தடுத்துவிடும். ஒரு ராணிபோல் என்னை மதித்துக் கொண்டாட வேண்டும் என்று நான் விரும்பினால் அப்புறம் அந்த விருப்பத்துக்கு எல்லை ஏது? அது மேன்மேலும் வளர்ந்துகொண்டு தானே போகும்? புருஷன் தன் வசத்தில் இருப்பதனால் ஒரு ஸ்திரீக்கு உண்மையான சந்தோஷம் ஏற்படுமா? தான் என்ற செருக்கை முற்றும் பிரேமைக்கு அடைக்கலமாகச் செய்வதல்லவா ஸ்திரீகள் அடையும் உயர் நிலை?

எனக்கு இப்போது ஞாபகம் வருகிறது: நாங்கள் சந்தோஷமாக இருப்பதைக் கண்டு பொறாமைத் தீ எவ்வாறு நாலு புறமும் சூழ்ந்தது! ஆனால் அது நியாயந்

தான். ஏனெனில் ஒரு தகுதியும் இல்லாமல் அகஸ்மாத்தாக எனக்கு இந்த அதிருஷ்டம் வாய்த்ததல்லவா? ஓர் அதிருஷ்டம் வாய்த்தது என்ருலும் அது என்றும் நிலைத்திருக்கும்படி தெய்வம் செய்வதில்லை; அதற்கு முற்றும் பதில் செய்து நாம் அதைப் பாதுகாத்துத்தான் நம்முடையதாகச் செய்துகொள்ள வேண்டும். தெய்வம் நமக்குச் சிறந்த வரங்களை அளித்தாலும் அவற்றை ஏற்றுக்கொள்ள நமக்குத் தகுதி இருக்க வேண்டாமா? ஐயோ! கிடைத்த அதிருஷ்டத்தை வகிக்கத் திறமை இல்லாமல் இழப்பவர்களை என்னென்று சொல்வது!

என் கணவரின் அன்னையும் பாட்டியும் அழகுக்குப் பேர்போனவர்களாம். விதவைகளான என் ஓரகத்திகள் இருவருங்கூட அவ்விதமே ஒப்பற்ற அழகிகளே. விதி அவர்கள் இருவரையும் முறையே கைம்பெண்களாக்கி விடவே என் கணவரின் பாட்டி, தன் கடைசிப் பேரனுக்கு அழகான பெண்ணைத் தேடிக் கல்யாணம் செய்வதில்லை என்று பிரதிக்கினை செய்துகொண்டாளாம். அதிருஷ்டசாலியாக இருப்பதற்கு வேண்டிய லக்ஷணங்கள் என்னிடம் அமைந்திருந்தமைதான் நான் இவ்வீட்டில் புகுந்ததற்குக் காரணம். இல்லையென்ருல் இவருக்கு நான் வாழ்க்கைப்பட்டிருக்க முடியாது.

இவ்வளவு செல்வமும் சம்பத்தும் உடைய வீட்டில் ஸ்திரீகள் கௌரவமாக நடத்தப்படுவது மட்டும் மிகவும் அரிதாக இருந்தது. ஆயினும் அவர்கள் ஒருவாறு சமாதானம் செய்துகொண்டார்கள். வீட்டிலுள்ள குடியிலும் கேளிக்கையிலும் தினசரி அவர்கள் வடிக்கும் கண்ணீர் அமிழ்ந்து மறைந்துபோனாலும் ராணிகள் என்ற அந்தஸ்தை எண்ணி அவர்கள் மனம் தேறினார்கள். என் கணவர் குடிப்பழக்கம் இல்லாமலும் ஸ்திரீ தோஷம் இல்லாமலும் இருந்த பெருமை என்னைச் சேர்ந்ததா? கண்டபடி அலையக்கூடிய புருஷர்களின் மனத்தை அமைதியாக்கக்கூடிய மோகன சக்தியைப்பற்றி எனக்கு என்ன தெரியும்? கேவலம் என் அதிருஷ்டம் என்றுதான் சொல்லவேண்டும். என் ஓர்ப்படிகள் விஷயத்தில் விதி குரூரமாகிவிட்டது. இளமை இன்னும் அகலாதிருக்கும்

போதே சூன்யமான இடத்தில் ஏற்றிவைத்த விளக்கைப் போல் அவர்கள் அழகு வீணுகி, அவர்களின் சந்தோஷம் முற்றும் குலைந்துபோயிற்று,

என் கணவரின் நவீன நாகரிகக் கொள்கைகளைக் கண்டால் அவர் மதனிகள் இருவருக்கும் ஒருவிதப் பரிகாசந்தான். இவ்வளவு பழமையான அந்தஸ்தும் கௌரவமும் உடைய ஒரு பெருங் குடும்பத்தை ஒன்றும் அறியாத ஒரு பேதைப் பெண்ணை வைத்துக்கொண்டு நடத்த எண்ணுவதா? என்ன அறியாமை! அவர்களின் இகழ்ச்சியை நான் எவ்வளவோ அநுபவித்திருக்கிறேன். கணவரின் காதலைத் திருடியவள் என்றும், நவீன அலங்காரத்தில் மறைந்த வெறும் மேல்மினுக்கி என்றும் அவர்கள் என்னை இகழ்வார்கள். நாகரிகமான விதவித வர்ணப் புடைவைகளை என்னை உடுத்துக்கொள்ளச் செய்து என் கணவர் சந்தோஷப்படுவதைக் காண அவர்களுக்குப் பொருமையும் கோபமும் மண்டின.

"அப்பா! இந்த அழகான ரூபத்துக்கு என்ன அலங்காரம்! கடையில் அடுக்கிவைப்பதுபோல் இவள் உடம்பை அலங்கரித்துக்கொள்கிருளே. கொஞ்சமாவது வெட்கம் இருந்தால்தானே!" என்பார்கள் அவர்கள்.

என் கணவருக்கு இது எல்லாம் நன்ருகத் தெரியும். ஆனுல் அவர் பெருந்தன்மைக்கு அளவே இல்லை. அவர்கள் கூறுவதையெல்லாம் பாராட்டாதிருக்கும்படி என்னை வேண்டிக்கொள்வார்.

"ஸ்திரீகளுக்கு ரொம்ப அற்ப மனசு. எதிலும் கோணல்தான்" என்று அவரிடம் ஒரு தடவை சொன்னேன்.

"ஆம்: சீனப்பெண்களின் பாதங்களைப்போல்" என்ருர் அவர். "சமூகம் அல்லவா அவர்களை இவ்வாறு அற்பமாக அடித்திருக்கிறது? விதி அவர்களைச் சூதாட்டக் காய்கள்போல் உருட்டி விளையாடுகிறது. சுயமாக அவர்களுக்கு என்ன அதிகாரம் இருக்கிறது?" என்று அவர் பின்னும் சொன்ஞர்.

என் ஓர்ப்படிகள் எது கேட்டாலும் என் கணவர் இல்லை என்று சொல்வதில்லை. அவர்கள் கேட்பது சரியா தவறு என்றுகூட அவர் யோசிக்கமாட்டார். ஆயினும் அவர் இவ்வளவு செய்வதற்கு அவர்களுக்குத் துளிகூட நன்றி இல்லாமல் இருப்பதைக் காணும்போதுதான் எனக்கு மிக்க ஆத்திரமாக இருக்கும். ஜபதபங்களிலும் விரத உபவாசங்களிலும் மூழ்கியிருந்த என் பெரிய ஓர்ப்படி கண்டபடி என்னை ஏசுவாள். நான் பதிலுக்கு ஒன்றும் சொல்வதில்லை என்று அவரிடம் வாக்களித்திருந்தேன். ஆனால் அப்போதெல்லாம் உள்ளூற என் மனம் கொதித்துக்கொண்டே இருக்கும். நல்லதனத்துக்கும் ஓர் எல்லை இல்லையா? அந்த எல்லையை மீறிவிட்டால் அப்புறம் புருஷர்கள் வெறும் கோழைகள் போலத்தான் ஆகிவிடுவார்கள் என்று தோன்றும். ஏன்? உண்மையைக் கூறினால் என்ன? என் கணவர் இவ்வளவு சாந்தமாக இராமல் இன்னும் கொஞ்சம் ஆண்மையோடு இருக்கக்கூடாதா என்று நான் விரும்பியது உண்டு.

என் சிறிய ஓர்ப்படி வேறு விதம். இன்னும் இளமை மாறாமல் இருந்ததால் அவளுக்கு மன அடக்கம் ஏற்படவில்லை. அவள் கேலிப்பேச்சும் சிரிப்பும் கொஞ்சம் அதிகமாகவே இருக்கும். அவளைச் சுற்றிலும் இருந்த பணிப் பெண்களும் சற்று வாய்த்துடுக்காகவே இருப்பார்கள். ஆயினும் அவளை எதிர்த்துப் பேச ஒருவருமே இல்லை. இந்த வீட்டு வழக்கமே இப்படித்தானும்! நிர்த்தோஷமான கணவனைப் பெற்ற என் அதிருஷ்டத்தைக் காண அவளுக்குச் சகிக்கவில்லை. ஆனால் என் கணவரோ அவள் குற்றங்களைத் தள்ளிவிட்டு அவளுடைய விதியை நினைந்து வருந்துபவராக இருந்தார். "முழுக் குற்றத்துக்கும் சமூகமே பொறுப்பாக இருந்தால்தான் என்ன? அதற்காக அவர்களிடத்தில் இவ்வளவு இரக்கப்பட வேண்டிய அவசியம் என்ன? மனிதப் பிறவி எடுத்தவர்கள் கொஞ்சம் கஷ்டத்தைச் சகித்துக்கொண்டால்தான் என்ன?" என்பேன் நான். ஆனால் அவரிடம் வாய் கொடுத்து யாரால் வெல்ல முடியும்? அவர் சும்மா சிரித்து மழுப்பிவிடுவார்.

## 2

என் கணவர் தாராளமாக என்னை வெளியில் அழைத்துச் செல்ல விரும்பினர். "வீட்டைவிட்டு வெளியிலே எனக்கு என்ன ஆகவேண்டும்?" என்று ஒரு நாள் நான் அவரிடம் சொன்னேன்.

"உனக்கு வேண்டாதிருக்கலாம். ஆனல் அந்த வெளி உலகுக்கு நீ வேண்டியிருந்தால்?" என்ருர் அவர்.

"இவ்வளவு காலம் நான் இல்லாமல் அது இருக்க முடியும் என்ருல் இன்னும் கொஞ்ச நாட்கள்தாம் அப்படி இருக்கட்டுமே! எனக்காக அது எதற்கு உயிரை விடவேண்டும்?"

"அது எக்கேடாவது கெட்டுப் போகட்டும். அதைப் பற்றி நான் கவலைப்படவில்லை. நான் என்னைப்பற்றி அல்லவா நினைத்துக்கொண் டிருக்கிறேன்?"

"ஓகோ! உங்களைப்பற்றியா? என்ன? கொஞ்சம் சொல்லுங்கள்."

அவர் புன்னகையுடன் சற்றுப் பேசாதிருந்தார். அவருடைய குணம் தெரியுமாதலால் நான் உடனே, "இல்லை, இல்லை, இப்படிப் பேசிவிட்டு ஓடிப்போய்விடக்கூடாது. இந்த விஷயத்தை ஒரு வழியாகப் பேசித் தீர்க்கவேண்டும்" என்றேன்.

"வெறும் வார்த்தைகளினல் ஒரு விஷயம் பேசித் தீர்ந்துவிடுமா?" என்ருர்.

"இந்தப் புதிர் போடுவதை நிறுத்திவிட்டுச் சற்றுத் தெளிவாகச் சொல்லுங்கள்."

"நீயும் நானும் வெளியுலகில் பின்னும் அதிகமாக ஒருவருக்கொருவர் வேண்டியவர்களாக வேண்டும். அதுதான் நான் விரும்புவது. அங்கேதான் நாம் ஒருவருக்கு ஒருவர் செலுத்தவேண்டிய கடன் இன்னும் பாக்கி இருக்கிறது."

"அப்படியானல் வீட்டில் நம் அன்புக்கு ஏதாவது குறை இருக்கிறதா?"

"இங்கே நீ என்னிடத்தில் ஒரேயடியாக அமிழ்ந் திருக்கிறுய். உன்னிடத்தில் என்ன இருக்கிறது, இன்னும் என்ன வேண்டும்? ஒன்றும் உனக்குத் தெரியாது."

"நீங்கள் இந்த மாதிரி பேசுவதைக் கேட்கச் சகிக்க வில்லையே!"

"நீ வெளியில் போய் உண்மை எது என்பதைக் கண்டு தெரிந்துகொள்ளவேண்டும். இங்கே வீட்டில் உட்கார்ந்து கொண்டு பொழுது விடிந்தால் பொழுது போனல் ஒரே வேலையைச் செய்துகொண்டு வேறு ஒன்றும் தெரியாமல் இருந்தால்...! அது கூடாது. உண்மையான வெளியுலகில் நாம் சந்திக்கும்போதும் ஒருவர்மேல் மற்றவருக்கு மதிப்பு ஏற்பட்டால் அப்போதுதான் நம் அன்பு உண்மை ஆகும்!"

"இங்கே இருவருக்கும் சரியான மதிப்பு ஏற்பட வில்லை என்றுல் அப்புறம் நான் என்ன சொல்ல முடியும் ? என்மட்டில் ஒரு குறையும் இருப்பதாக எனக்குத் தோன்றவில்லை."

"நல்லது, என்னிடந்தான் அந்தக் குறை இருப்பதாக வைத்துக்கொள்ளேன். நீ அதைத் தீர்க்க முயல வேண்டாமா?"

எங்களுக்குள் இம்மாதிரி சர்ச்சைகள் அடிக்கடி நடக் கும். "மீன் குழம்பில் ஆசை உள்ளவன் மீனே இரக்கமில் லாமல் இஷ்டப்படி நறுக்கி வைப்பான். ஆனுல் அந்த மீனிடம் நிஜமாக அன்புடையவனே அதை நீரிலேயேதான் பார்த்துக் களிப்பான். அது கண்ணுக்குத் தென்படும் வரையிலும் கரையில் உட்கார்ந்து காத்திருப்பான். அது தென்படாமலே போய்விட்டாலும் மீன் குளத்து நீரில் சௌக்கியமாக இருக்கிறது என்ற திருப்தியுடன் வீட்டுக் குத் திரும்புவான். கிடைத்தால் முற்றும் கிடைக்க வேண் டும். இல்லாவிட்டால் அடியோடு இல்லாமல் இருப்பதே மேல்" என்று ஒரு நாள் சொன்னுர்.

அவர் இவ்வாறு பேசுவது எனக்குக் கொஞ்சமும் பிடிக்கவில்லை. ஆனுல் நான் அந்தப்புரத்தை விட்டு வெளியே வர மறுத்ததற்கு அது காரணம் அல்ல. என்

கணவரின் பாட்டி இன்னும் உயிருடன் இருந்தாள். அவளுக்கு விரோதமாக என் கணவர் வீட்டை ஒரே நவீன நாகரிகத்தில் ஆழ்த்தியிருந்தார். அதற்கெல்லாம் அவள் ஒன்றும் ஆக்ஷேபிக்கவில்லை. வீட்டு நாட்டுப்பெண் திரையை விட்டு வெளியே செல்வதைக்கூட அவள் அப்படியே பொறுத்துக்கொண் டிருப்பாள். அதற்குக்கூட அவள் தயார்தான். ஆனால் அவளுடைய வருத்தத்தைக் கூடச் சட்டை செய்யாமல் இருப்பதற்கு அது என்ன அவ்வளவு உயர்ந்த காரியம் என்று எனக்குத் தோன்றிற்று.

'கூட்டில் அடைபட்ட பறவைகள்' என்று எங்களைப் பற்றி நான் புத்தகங்களில் படித்திருக்கிறேன். மற்றவர்களைப்பற்றி எப்படியோ தெரியாது; ஆனால் இந்தக் கூடு தான் எனக்குச் சகலமும். அதற்கு இந்த உலகமெல்லாம் பற்றாது. ஏதோ அப்படித்தான் எனக்கு அந்தக் காலத்தில் தோன்றிக்கொண் டிருந்தது.

என் கணவரின் பாட்டி என்மேல் ஆசையாக இருந்தாள். அந்த ஆசைக்குக் காரணம் என் அதிருஷ்ட ஜாதகத்தின் மூலம் என் கணவரின் அன்பை நான் எப்படியோ கவர்ந்துவிட்டேன் என்பதுதான். புருஷர்கள் தீய வழியில் இறங்கிவிடுவது மிகவும் சகஜம் அல்லவா? அவ்வீட்டில் வாழ்க்கைப்பட்ட மற்றப் பெண்களுக்கு எவ்வளவோ அழகு இருந்தும் கணவர்கள் படுகுழியில் விழுந்து மாய்வதைத் தடுக்கும் விஷயத்தில் அது சற்றும் பயனற்றதாகப் போயிற்று. குடும்பத்தை நாசம் செய்துகொண் டிருந்த அந்தப் பாழும் நெருப்பு அணைந்து சாம்பலானதற்குக் காரணம் நான்தான் என்பது அவள் நம்பிக்கை. ஆகவே அவள் என்னைக் கண்ணுக்குள் வைத்துக் காப்பாற்றத் தொடங்கினாள். எனக்கு ஏதாவது உடம்பு கொஞ்சம் அசௌகரியம் என்றால் அவளுக்கு நடுக்கந்தான்.

வெள்ளைக்காரர் கடைகளிலிருந்து என் கணவர் எனக்காக வாங்கிவந்த துணிமணிகள், நகைகள் ஒன்றும் பாட்டிக்குப் பிடிக்கவில்லை. ஆனால், 'அதிகப் பணச் செலவுள்ள இம்மாதிரிப் பைத்தியம் ஏதாவது புருஷர்களுக்கு இல்லாமல் இராது. அதைத் தடுப்பதில் பிரயோஜனம் இல்லை; பணத்தை முற்றும் இம்மாதிரி விஷயங்களில்

தொலைக்காமல் இருந்தாலே போதும். தன் பெண்டாட்டியை அலங்கரித்துப் பார்ப்பதில் மனத்தைச் செலுத்தவில்லை என்றால் அப்புறம் நிகில் அந்தப் பணத்தைக் கொண்டு வேறு எவளையாவதுதானே அலங்கரிப்பான்?' என்று அவள் நினைத்துக்கொண்டாள். ஆகவே எனக்குப் புதிய புடைவை ஏதாவது கடையிலிருந்து வந்தால் என் கணவருடன் சேர்ந்து பாட்டியும் சந்தோஷப்படுவாள்.

அதனால் மெள்ள மெள்ள அவளுக்கே ருசி மாறிவிட்டது. பிரதிதினமும் மாலை நேரத்தில் என்னிடம் ஆங்கிலக் கதைகள் கேட்காமல் அவளுக்குப் பொழுது போகாது. புது நாகரிகம் அவளை அப்படித் தன் வசத்தில் ஆழ்த்திவிட்டது.

**பா**ட்டி இறந்துபோன பிறகு என் கணவர் என்னைத் தம்மோடு கல்கத்தாவில் வசிக்கும்படி விரும்பினார். ஆனால் அப்படிச் செய்ய என் மனம் ஒப்பவில்லை. 'கஷ்டத்திலும் சுகத்திலும் பாட்டி இருந்து பாதுகாத்து வந்த வீடு அல்லவா அது? அப்படிப்பட்ட வீட்டை விட்டு நான் கல்கத்தா செல்வது பாவமாகாதா?' அவள் வீற்றிருந்த இடத்தைப் பார்க்கும்போதெல்லாம் எனக்கு இந்த எண்ணம் தோன்றித் தடுத்தது. எட்டு வயசில் அந்த வீட்டில் புகுந்த அந்தப் புண்ணியவதி எழுபத்தொன்பது வயசு வரையிலும் அதில் வசித்திருக்கிறாள். அவள் வாழ்க்கை சந்தோஷகரமாக இல்லை. துக்கத்தின் மேல் துக்கம் அவளுக்கு வந்தும் அவள் மனசு ஓய்ந்து போகவில்லை. அவள் கண்ணீரால் அவ்வீடு பரிசுத்தமாகியிருக்கிறது. அதை விட்டுக் கல்கத்தாப் புழுதியில் எனக்கு என்ன வேலை?

நான் கல்கத்தா சென்றால், என் ஓர்ப்படிகள் வீட்டில் தனியே இருந்து ஆட்சி செலுத்தும் சந்தோஷத்தை அநுபவிப்பார்கள்; நாங்களும் கல்கத்தாவில் சுயேச்சையுடன் இருக்கலாம் என்பது என் கணவரின் நினைவு. ஆனால் அது எப்படி எனக்குத் திருப்தியாக இருக்கும்? அவர்கள் என்னை எவ்வளவு படுத்தியிருக்கிறார்கள்? என் கணவர் அடையும் சந்தோஷத்தைக் கண்டால் தான் அவர்களுக்கு என்ன கரிப்பு! அந்த நன்மைக்கெல்லாம் கைம்மாறு வேறு செய்யவேண்டுமா? பிறகு நான்

திரும்பி வந்தால் அன்று மீண்டும் நான் யஜமானி ஸ்தானத்தை அடைய முடியுமா?

"யஜமானி ஸ்தானம் இல்லாவிட்டால் என்ன? வாழ்க்கையில் அதைக்காட்டிலும் உயர்ந்த விஷயங்கள் இல்லையா?" என்று என் கணவர் கேட்பார்.

'புருஷர்களுக்கு இவ்விஷயங்களைப்பற்றி என்ன தெரியும்? அவர்களுக்கு வீடுதான் என்று இல்லை; வெளியிலும் இடம் இருக்கிறது. வீட்டின் பெருமையெல்லாம் அவர்களுக்குத் தெரியாது. இத்தகைய விஷயங்களில் அவர்கள் ஸ்திரீகள் கூறுகிறபடிதான் நடக்கவேண்டும்.' இவ்வாறெல்லாம் அந்தக் காலத்தில் என் எண்ணங்கள் ஓடும்.

என் உரிமையை நான் எளிதில் கைவிடக்கூடாது என்று எனக்குத் தோன்றிற்று. யாவற்றையும் என் பகைவர் கைகளில் விட்டுச் செல்வதென்றால் அது தோல்வியை ஒப்புக்கொள்வது ஆகாதா?

ஆனால் என் கணவர் தம்மோடு கல்கத்தாவுக்கு வரும்படி என்னை ஏன் கட்டாயப்படுத்தவில்லை? அதன் காரணம் எனக்குத் தெரியும். அவருக்கு அவ்வாறு செய்யச் சக்தி இருந்ததனாலேயே அவர் அதைச் செலுத்தவில்லை.

## 3

இருட்டைப் போக்கி வெளிச்சமாக்கவேண்டும் என்றால் நம்மால் முடியுமா? அதற்கு எவ்வளவு காலம் ஆகும்? ஆனால் சூரியோதயம் ஆகவேண்டியதுதான்; இருட்டு உடனே மறைந்துவிடுகிறது. ஒரு கணநேரம் போதும், உலகம் முழுவதும் பிரகாசமாவதற்கு. ஒரு நாள் வங்காளத்தில் சுதேசி இயக்கம் பிறந்தது. அது எப்படி வந்தது என்பதைப்பற்றி எங்களுக்குத் தெளிவாகத் தெரியவில்லை. கடந்த காலத்தையும் நிகழ்காலத்தையும் சேர்த்துப் பிணைத்துக்கொண்டு அது மெதுவாக வரவில்லை. ஒரே வெள்ளம்போல் பெருகிக் கரையையெல்லாம் உடைத்துக்கொண்டு எங்கள் பயம், நிதானபுத்தி யாவற்றையும் அடித்துக்கொண்டு போயிற்று. அதைப்பற்றி யோசிப்

பதற்கோ என்ன நடந்தது அல்லது என்ன நடக்கப் போகிறது என்பதை அறிந்துகொள்வதற்கோ எங்களுக்கு அவகாசமே இல்லை.

என் கண், என் மனசு, நம்பிக்கை, ஆசை எல்லாம் இந்தப் பைத்தியத்தில் ஈடுபட்டுவிட்டன. இதுவரையில் என் உலகமாக இருந்த என் வீட்டுச் சுவர்கள் இடிந்து போகாமல் அப்படியே இருந்தும் நான் அவற்றைத் தாண்டி வெளியே நோக்கினேன். எங்கேயோ வெகு தூரத்திலிருந்து ஒரு குரல் கேட்டது. அதன் பொருள் ஒன்றும் எனக்கு நன்கு விளங்காவிட்டாலும், அது என் மனத்தில் சென்று பதிந்துவிட்டது.

காலேஜில் படித்துக்கொண்டிருக்கும் நாளிலேயே என் கணவர் நமக்கு வேண்டிய சாமான்களை நம் தேசத்திலேயே உற்பத்தி செய்வதற்கு முயன்றுகொண்டிருந்தார். எங்கள் ஜில்லாவில் பேரீச்சமரங்கள் ஏராளமாக இருந்தன. பேரீச்சம்பழங்களின் சாற்றைப் பிழிந்து எடுத்துச் சர்க்கரையும் பாகுவெல்லமும் செய்வதற்கான கருவி ஒன்றைத் தயார் செய்ய அவர் முயன்றார். அவர் முயற்சி நன்றாகப் பலித்தது என்றுதான் சொல்லிக்கொண்டார்கள். ஆனால் அது சாற்றைக்காட்டிலும் பணத்தைத் தான் மேன்மேலும் பிழிந்து எடுத்துக்கொண்டிருந்தது.

கொஞ்ச காலத்துக்குப் பிறகு சொந்தமாக ஒரு பாங்கி இல்லாததனால்தான் நம் தொழிற்சாலைகள் விருத்திக்கு வரவில்லை என்று அவர் நிச்சயித்தார். அச்சமயம் அவர் எனக்கு அர்த்த சாஸ்திரத்தைப் போதித்துக்கொண்டிருந்தார். அதோடு மட்டும் அல்ல. பாங்கி ஏற்படுத்துவதற்கு முன் அவசியமான செட்டுக்குணத்தைப்பற்றி ஊர் ஜனங்களுக்கு உபதேசிக்க வேண்டும் என்றும் அவர் மனத்தில் தோன்றிவிட்டது. கடைசியில் ஒரு சிறிய பாங்கியையும் ஆரம்பித்தார். வட்டி நிறையக் கிடைப்பதைக் கண்டு உற்சாகத்துடன் ஊர்க்குடிகள் தம் பணத்தையெல்லாம் கொண்டு வந்து போட்டவுடன் பாங்கியே அடியோடு போய்விட்டது.

ஜமீனைப் பார்த்து வந்த காரியஸ்தர்களுக்கு இதனால் கவலை, பயம் இரண்டும் உண்டாயின. விரோதிகளுக்கோ

ஒரே ஆனந்தம். என் ஓரகத்திகள் என்னை அரித்துப் பிடுங்கினார்கள். பாட்டி ஒருத்திதான் மனம் கலங்காமல் இருந்தவள்.

"ஏன் இப்படி எல்லாரும் அவன் பிராணனை வாங்குகிறீர்கள்? ஜமீன் முழுகிப் போய்விடுமே என்று பயமா? அது எவ்வளவோ தடவை கோர்ட்டு ரிஸீவர் கைகளில் சென்று நான் பார்த்திருக்கிறேன். புருஷர்கள் என்ன பெண்பிள்ளைகளா? அவர்கள் அப்படித்தான் செலவழிப்பார்கள். அவர்கள் அதற்காகத்தானே பிறந்திருக்கிறார்கள்? இந்தாடி பெண்ணே! உன் கணவன் கெட்டலைந்து தன் உடம்பை வீணாக அடித்துக்கொள்ளாமல் இருக்கிறானே, அதுவே உன் பெரிய அதிருஷ்டம் என்று நினைத்துக்கொள். நீ அந்தத் துன்பத்தை அநுபவிக்காததனால்தான் இவற்றை எல்லாம் மறந்துவிடுகிறாய்" என்று என்னைக் கடிந்துகொள்வாள்.

என் கணவரின் பரோபகாரச் செயல்களுக்குக் கணக்கு இல்லை. அரிசி மில்லோ நெசவுத் தறியோ புதிய முறையில் செய்வதாக யாராவது கிளம்பினால் இனிமேல் முடியாது என்று கைவிடும் வரையில் அவர்களுக்கு உதவி புரிந்துதான் தீருவார். சீமைக் கம்பெனிக்குப் போட்டியாகப் புரி யாத்திரைக்குக் கப்பல்கள் விடுவதற்காக ஒரு சுதேசிக் கம்பெனியை ஏற்படுத்தினார். கம்பெனியின் கப்பல் ஒன்றாவது மூழ்கவில்லை! ஆனால் இவருடைய பங்குகளில் பெரும் பகுதி மூழ்கியே போயிற்று.

சுதேசி என்ற வியாஜத்தைக் கொண்டு ஸந்தீப் பாபு இவரை உறிஞ்சிக்கொண்டிருந்த மாதிரிதான் எனக்கு மிக்க எரிச்சலை மூட்டியது. தினசரிப் பத்திரிகை ஏதாவது ஆரம்பிக்க வேண்டும் என்றாவது சுதேசி இயக்கத்தைப் பிரசாரம் செய்யவேண்டும் என்றாவது உடம்புக்காக டாக்டர் சொற்படி ஊர் மாற்ற வேண்டும் என்றாவது எது சொன்னாலும் என் கணவர் மறுவார்த்தை சொல்லாமல் ஸந்தீப் பாபுவுக்குப் பணத்தை மூட்டை கட்டிக் கொடுப்பார். இதைத் தவிர அவர் தினசரிச் செலவும் என் கணவரைச் சேர்ந்தது தான். இவ்வளவுக்கும் மேல் ஓர் அதிசயம் என்னவென்

றுல் இவ்விஷயங்களில் அவ்விருவரின் அபிப்பிராயங்களும் வேறு வேருக இருந்தன.

இந்தச் சுதேசி மயக்கம் என் ரத்தத்திலும் ஏறியவுடன் என் கணவரிடம், "என்னிடம் இருக்கும் விதேசித் துணிகளை யெல்லாம் எரித்துவிடப் போகிறேன்" என்றேன்.

"எரிப்பானேன்? எவ்வளவு நாள் வேண்டுமோ அவ்வளவு நாள் அவைகளை அணிந்துகொள்ளாமல் இருந்துவிட்டால் போகிறது" என்ருர்.

"எவ்வளவு நாளா? இனிமேல் இந்த ஜன்மத்தில் இல்லை."

"சரி; அப்படியானுல் நீ இனிமேல் அவைகளை அணிந்துகொள்ள வேண்டாம். ஆனுல் அவைகளை எரிப்பானேன்?"

"என்னை அவ்வாறு செய்ய விடமாட்டீர்களா?"

"பயனுள்ளதாக ஏதாவது செய்யக் கூடாதா? இந்தப் பாழாக்குகிற உற்சாகத்தில் நீ உன் சக்தியை வீணுக்குவானேன் என்றுதான் நான் சொல்கிறேன்."

"இம்மாதிரியான உற்சாகம் பயனுள்ள காரியத்தைச் செய்யவும் சக்தி அளிக்கும்."

"நன்ருயிருக்கிறது! வீட்டைக் கொளுத்தாமல் வீட்டுக்கு எப்படி வெளிச்சம் உண்டாக்குவது என்று கூறுவதுபோல் இருக்கிறது உன் வார்த்தை!"

எனக்கு மற்ருெரு சங்கடம் ஏற்பட்டது. மிஸ் கில்பி எனக்குக் கற்றுக்கொடுப்பதற்காக முதல் முதல் வந்தபோது வீடு முழுவதும் ஒரே அமளியாக இருந்தது. அவள் பழக்கமானதும் மெள்ள அது சாந்தமாயிற்று. அது பழையபடி வேறுவிதமாகக் கிளம்பலாயிற்று. மிஸ் கில்பி வெள்ளைக்காரச்சியா இந்திய ஸ்திரியா என்றெல்லாம் நான் முன்பு கவலைப்பட்டதே இல்லை. எனக்கு அது இப்போது மனத்தில் உறுத்தத் தொடங்கிற்று.

"மிஸ் கில்பியைப் போகச் சொல்லவேண்டும்" என்று என் கணவரிடம் சொன்னேன்.

அவர் பேசாமல் இருக்கவே நான் வாய்க்கு வந்தபடி எல்லாம் பேசத் தொடங்கினேன். அவர் உள்ளூற வருத்தத்துடன் அவ்விடத்தைவிட்டுப் போய்விட்டார்.

சற்று நேரம் அழுது ஓய்ந்த பிறகுதான், அவரை இரவு மீண்டும் பார்த்தபோது, என் மனம் கொஞ்சம் அமைதியாக இருந்தது.

"மிஸ் கில்பி ஒரு வெள்ளைக்காரி என்பதற்காக நான் அவளை வேறு விதமாக நினைக்க முடியாது. இவ்வளவு நாள் அவளுடன் பழகிய பிறகு இந்த வேற்றுமையை உன்னால் விடமுடியாதா? அவள் உன்மேல் எவ்வளவு பிரியமாக இருக்கிறாள்! அது உன் மனத்தில் படவில்லையா?" என்றார் என் கணவர்.

அந்தச் சொற்களைக் கேட்க எனக்குச் சிறிது அவமானமாக இருந்தது. "அவள் இருக்கட்டுமே! இந்த நிமிஷமே அவள் போய்த்தான் ஆகவேண்டும் என்று நான் சொல்லவில்லையே!" என்றேன் கொஞ்சம் குத்தலாக.

மிஸ் கில்பி எங்களை விட்டுப் போகவில்லை.

ஒரு நாள் அவள் சர்ச்சுக்குப் போனபோது எங்கள் குடும்பத்தைச் சார்ந்த ஒரு பையன் அவளை அவமதித்ததாக என் காதில் விழுந்தது. அந்தப் பையன் எங்கள் ஆதரவில் இருப்பவன். இந்தக் காரணத்துக்காக என் கணவர் அவனை வீட்டை விட்டு அனுப்பிவிட்டார். அப்படிச் செய்ததற்காக அவர்மேல் கோபங்கொள்ளாதவர் இல்லை. எனக்குக்கூட அது பொறுக்கவில்லை. கடைசியில் மிஸ் கில்பி தானே எங்களை விட்டுப் போய்விட்டாள். விடை பெற்றுக்கொண்டபோது அவள் கண்ணில் நீர் பெருகிற்று. ஆனால் என் மனம் மட்டும் இளகவில்லை. சுதேசி இயக்கத்திலுள்ள உற்சாகத்தில் ஸ்நானபானங்களைக்கூட மறந்துபோகக்கூடிய சிறந்த பையனை அப்படி அவதூறு செய்வதென்றால் யாருக்குத்தான் பொறுக்கும்?

என் கணவர் தாமே தம் வண்டியில் மிஸ் கில்பியை ஸ்டேஷனுக்கு அழைத்துச் சென்றார். அது எனக்கு மிக அநுசிதமாகப் பட்டது. அதைப்பற்றி இல்லாததும் பொல்லாததுமாக வம்புகள் கிளம்பிப் பத்திரிகை வரையி லும் போய்விட்டன. 'அவருக்கு நன்றாக வேண்டும்' என்று நான் நினைத்துக்கொண்டேன்.

இதற்கு முன்பும் என் கணவர் செய்யும் காரியங் களைக் குறித்து நான் கவலைப்பட்டது உண்டு; ஆனால் அவ மானப்படும்படி நேர்ந்ததில்லை. இப்போது அவர் செய் ததைப்பற்றி நான் வெட்கப்படும்படி ஆயிற்று. நரேந்திர னால் மிஸ் கில்பிக்கு என்ன கெடுதல் நேர்ந்திருக் குமோ என்னவோ எனக்கு ஒன்றும் தெரியாது. அதைப் பற்றி நான் கவலைப்படவும் இல்லை. ஆனால் இச்சமயத் தில் இம்மாதிரி விஷயத்தில் நியாயம் பார்ப்பதென்றால்? ஓர் ஆங்கில ஸ்திரீயை எதிர்க்கவேண்டும் என்று தோன் றிய நரேனுடைய தைரியத்தை நான் ஒரு நாளும் அழுத்தி விடமாட்டேன். இச்சிறு விஷயம் என் கணவருக்குப் புரியவில்லையே! இது அவரிடமுள்ள கோழைத்தன மாகவே பட்டது. ஆகவே நான் அவரைப்பற்றி வெட்கப் படாமல் என்ன செய்கிறது?

ஆயினும், அவர் சுதேசியை ஆதரிக்காமல் இருக்க வில்லை; சிறிதாவது அதற்கு விரோதமாகவும் இல்லை. 'வந்தே மாதரம்' என்ற மந்திரத்தை அவர் முழு மனத்து டன் அங்கீகரிக்கவில்லை; அவ்வளவுதான்.

"தேசசேவை செய்வதற்கு நான் தயாராகத்தான் இருக்கிறேன். ஆனால் எது நியாயமோ அது தேசத்தைக் காட்டிலும் உயர்ந்தது. அதைத்தான் நான் வழிபடுவேன். தேசத்தைக் கடவுளாக வழிபடுவது அதற்குக் கேடாகவே முடியும்'' என்று அவர் கூறினார்.

## 4

ஸந்தீப் பாபு தம்மைச் சேர்ந்தவர்களுடன் எங்கள் ஊருக்கு வந்து சுதேசியைப்பற்றிப் பிரசாரம் செய்து கொண்டிருந்த சமயம் அது.

கோயில் மண்டபத்தில் பெரிய கூட்டம் ஒன்று நடை பெற்றது. ஒரு திரைக்குப் பின்னால் ஸ்திரீகளாகிய நாங்கள் உட்கார்ந்துகொண்டிருந்தோம். 'வந்தே மாதரம்!' என்ற முழக்கம் கிட்ட நெருங்க நெருங்க எனக்கு மயிர்க்கூச்செறிந்தது. ஒரு மழை பெய்ததும் வறண்டு கிடந்த நதியில் செம்மண்ணைக் கரைத்துக் கொண்டு சிறு வெள்ளம் பெருகுவதுபோல், காவிநிற முள்ள ஆடையும் முண்டாசும் அணிந்து வெறும் காலுடன் ஓர் இளைஞர் கூட்டம் அம்மண்டபத்தில் பிரவேசித்தது. மண்டபம் முழுவதும் எள்ளைப் போட்டால் எள் விழாது; அவ்வளவு கூட்டம்! ஸந்தீப் பாபுவை ஒரு நாற்காலியில் உட்காரவைத்துப் பத்துப்பன்னிரண்டு இளைஞர்கள் தங்கள் தோளின்மீது சுமந்துவந்தார்கள். "வந்தே மாதரம்! வந்தே மாதரம்!" என்ற கோஷத்தில் ஆகாயமே ஆயிரம் சுக்கல்களாக வெடித்து விழுந்துவிடும்போல் இருந்தது.

ஸந்தீப் பாபுவின் படத்தை நான் ஏற்கனவே பார்த்திருக்கிறேன். எனக்கு அவ்வளவாக அவர் முகம் பிடிக்கவில்லை. அவர் நல்ல அழகுதான்; ஆனாலும் தங்கத்துடன் அதிகமாகக் காக்காய்ப்பொன்னைக் கலந்தால் எப்படியோ அப்படித் தோன்றியது எனக்கு. அவர் கண்களில் விளங்கிய ஒளி எதனாலோ உண்மையான ஒளியாகத் தோன்றவில்லை. அதனால்தான் என் கணவர் ஸந்தீப் பாபு கூறியபடியெல்லாம் நடந்தது எனக்குப் பிடிக்காமல் இருந்தது. பணம் போனால் போகிறது; ஆனால் நண்பன் என்ற உரிமைபற்றி என் கணவரை அவர் ஏமாற்றுவதென்றால் அதைப் பொறுக்க முடியுமா? அவர் முற்றும் டாம்பிகமான மனிதர். அப்படிப்பட்டவர் சகல சௌக்கியங்களையும் துறந்த முனிவரைப்போல் எப்படி இருப்பார்? அவருக்குப் போகத்தில் இருந்த ஆசை - ஆனால் இவை இருக்கட்டும் - இம்மாதிரி நினைவுகள் எவ்வளவோ எனக்கு இன்று மீண்டும் எழுகின்றன.

அன்றைக்கு ஸந்தீப் பாபு பேசத் தொடங்கியதும் எல்லாருடைய உள்ளங்களும் அப்படியே கொந்தளித்துக் கரைகடந்து சென்றுவிடும்போல் இருந்தன. ஓர் அபூர்வ

மான தேஜஸ் அவர் முகத்தில் பிரகாசிப்பதைக் கண்டேன். இருந்தாற்போல் அஸ்தமிக்கும் சூரியனின் பொற்கிரணம் ஒன்று அவர் முகத்தில் பளிச்சென்று விழுந்ததும் அதில் தோன்றிய ஒளி, தேவர்களால் பூலோகத்துக்குப் பிரத்தியேகமாக அனுப்பப்பட்ட ஒரு தேவதூதனோ அவர் என்று எல்லோரும் பிரமிக்கும்படி செய்தது.

முதலிலிருந்து கடைசி வரையிலும் அவர் பேச்சு ஆவேசமயமாகவே இருந்தது. அவர் சொற்களில் இருந்த நம்பிக்கைக்கு எல்லையே இல்லை; ஏதோ ஒரு வேகத்தில் அது எப்படி நேர்ந்ததென்று எனக்கே தெரியாது- நான் என் முன் தொங்கிய திரையைத் தள்ளிவிட்டு அவரை நோக்கியபடியே இருந்தேன். என் செய்கையை அங்கிருந்த ஒருவரும் கவனிக்கவில்லை. ஒரே ஒரு தடவை நக்ஷத்திரங்கள் போன்ற அவர் கண்களின் ஒளி என்மீது விழுந்தது.

நான் என்னை முற்றும் மறந்துவிட்டேன். ஜமீன்தார் வீட்டைச் சேர்ந்தவள் என்பது போய் வங்காளத்துப் பெண் குலத்தின் பிரதிநிதியாகவே என்னை நினைத்துக் கொண்டேன். அவர் வங்காளத்தின் பெருமையைக் காப்பாற்றத் தோன்றியவர். சூரியனின் ஒளி அவர்மீது விழுந்ததுபோல ஒரு பெண்ணின் ஆசி மொழிகளின் புனிதத்தையும் அவர் பெறவேண்டும் அல்லவா?

என்னை அவர் பார்த்தது முதல் அவர் சொற்களில் இருந்த ஆவேசம் மேலும் அதிகரித்தது என்பதில் சந்தேகம் இல்லை. மின்னலும் இடிமுழக்கமும் தோன்றின. என் கண்களிலிருந்துதான் இவ்வளவு ஆவேசமும் அவர் பேச்சுக்கு ஏற்பட்டதென்று நான் எனக்குள் சொல்லிக் கொண்டேன்.

அன்று ஒரே சந்தோஷத்துடனும் பெருமையுடனும் நான் வீட்டுக்குத் திரும்பினேன். எனக்குள் அடித்துக் கொண்டிருந்த புயற்காற்று என்னையே ஓர் இடத்திலிருந்து மற்றோர் இடத்துக்குத் தூக்கிச் சென்றுவிட்டது. பண்டைக்காலத்துக் கிரேக்கப் பெண்களைப்போல் என் பளபளப்பான நீண்ட கூந்தலைக்கூட வெட்டி, நான்

பூஜிக்கும் என் வீர புருஷனின் வில்லுக்கு நாணைச் செய்து கொடுக்க நான் தயங்குவதாக இல்லை. நான் அணிந்திருந்த ஆபரணங்களுக்கும் என் உள் உணர்ச்சி களுக்கும் ஏதாவது சம்பந்தம் இருந்தால் என் வளைகள், மாலைகள் எல்லாம் தாமே கழன்று நக்ஷத்திர மணிகள்போல் அவர் முன் சென்று உதிர்ந்திருக் கும். ஏதாவது ஒரு சிறந்த தியாகம் செய்தால்தான் அப்போது என் உள்ளத்தில் பொங்கிய உணர்ச்சி வேகத்தை நான் தாங்க முடியும் என்று தோன்றிற்று.

சற்றுப் பொறுத்து என் கணவர் வந்தார். 'உண்மை, உண்மை' என்று அவர் கொண்டிருந்த பைத்தி யத்தில் அன்றைப் பேச்சைப்பற்றி ஏதாவது ஆக்ஷேபித்துச் சொல்லி என் சந்தோஷத்தைக் கெடுத்துவிடப்போகிறாரே என்று நடுங்கினேன். அப்படி நேர்ந்தால் நான் தைரியமாக அவரை எதிர்த்துப் பேசியிருப்பேன். ஆனால் அவர் ஒன்றும் பேசவே இல்லை. எனக்கு அதுவும் பிடிக்கவில்லை.

"ஸந்தீப் என் புத்தியைத் தெளிவாக்கி விட்டான். என் தவறு இப்போதுதான் எனக்குத் தெரிகிறது" என்று அல்லவா அவர் சொல்லவேண்டும்?

அவர் வேண்டும் என்றுதான் கொஞ்சங்கூட உற் சாகத்தைக் காட்ட விருப்பமில்லாமல் பேசாதிருந்தார் என்று எனக்குத் தோன்றியது.

"எவ்வளவு நாள் ஸந்தீப் பாபு இவ்விடம் இருப்பார்?" என்று கேட்டேன்.

"நாளை விடியற்காலை ரங்கப்பூருக்குப் போகிறான்" என்றார்.

"நாளைக்கே போகவேண்டுமா?"

"ஆம். நாளைக்கே அவன் அங்கே பேசுவதற்கு ஒப்புக் கொண்டிருக்கிறான்."

நான் சற்றுப் பேசாமல் இருந்துவிட்டு மறுபடியும், "இன்னும் ஒரே ஒரு நாள் அவரால் இங்கே தங்க முடி யாதா?" என்று கேட்டேன்.

"முடியும் என்று தோன்றவில்லை, ஏன் கேட்கிறாய்?"

"அவரைச் சாப்பிடக் கூப்பிட்டு என் கையால் பரிமாற வேண்டும் என்று விரும்புகிறேன்."

என் கணவருக்கு ஆச்சரியமாக இருந்தது. தம் நண்பர்கள் சாப்பிட வரும்போது என்னையும் கூட இருக்கும்படி அவர் எவ்வளவோ தரம் என்னிடம் மிகவும் கேட்டுக்கொண்டிருக்கிறார். அதற்கெல்லாம் நான் கொஞ்சங்கூட மசிந்ததில்லை. அவர் பேசாமல் என்னை ஒரு விதமாகப் பார்த்தார். அந்தப் பார்வை எனக்குச் சரியாக விளங்கவில்லை.

எனக்குத் திடீரென்று வெட்கம் வந்துவிட்டது. "சீ! சீ! நான் என்னவோ பித்ற்றினேன்" என்றேன்.

"ஏன்? அதற்கென்ன? நானே அவனைக் கேட்கிறேன். முடியும் என்றால் அவன் கட்டாயம் இன்னும் ஒரு நாள் இருப்பான்" என்றார்.

அப்படியே அது முடியும் என்றுதான் ஆயிற்று. நான் உண்மையை உள்ளபடியே சொல்லிவிடுகிறேன். என்னை ஏன் இணையற்ற எழிலுடன் படைக்கவில்லை என்று அன்று நான் தெய்வத்தை நிந்தித்தேன். நான் அழகை விரும்பியது யாருடைய உள்ளத்தையும் கொள்ளைகொள்வதற்காக அல்ல. அழகே ஒரு பெரும் சிறப்பு அல்லவா? இந்த அரிய இயக்கம் தோன்றியிருக்கும் இக்காலத்தில் ஆடவர்கள் பெண்களை அல்லவா நாட்டின் தேவதைகளாகப் பாவிக்கவேண்டும்! ஆனால் அந்தோ! கண்ணுக்கு அழகு இல்லை என்றால் அவர்களுக்குத் தேவதையாகத் தோன்றுவதில்லையே! பாரதமாதாவின் சக்தி என்னிடம் ஆவிர்ப்பவித்திருப்பதாக ஸந்தீப் பாபு கருதுவாரா, கேவலம் ஒரு சாதாரணக் குடும்ப ஸ்திரீயாக மதித்து விடுவாரா? யார் கண்டார்கள்?

அன்று காலை வாசனைத் தைலம் தடவிய என் கூந்தலை ஒரு சிவப்புப் பட்டு நாடாவால் சேர்த்துக் கட்டிச் சாதாரணக் கொண்டை போட்டுக்கொண்டேன். சாப்பிடுவதற்குமுன் ஸ்நானம் செய்த கூந்தலை ஆற்றி வழக்கம்போல் பின்னிக் கட்டிக்கொள்வதற்கு நேரம் இல்லை. ஜரிகைக்கரை போட்ட வெள்ளைப் புடைவையும்

அதற்கு இணையான ஜரிகை ரவிக்கையும் அணிந்து கொண்டேன்.

இதைக்காட்டிலும் அடக்கமாகவும் ஆடம்பரம் இல்லாமலும் அலங்கரித்துக்கொள்ள முடியாது என்று எனக்குத் தோன்றிற்று. ஆனால் அங்கே வந்த என் பெரிய ஓர்ப்படி சட்டென்று என் எதிரில் நின்று தலையோடு கால்வரைக்கும் என்னை ஒருமுறை உற்று நோக்கிவிட்டு ஜாடையாக ஒரு புன்னகை புரிந்தாள். அதன் காரணத்தை நான் கேட்டதும், "உன் அலங்காரத்தைப் பார்த்து நான் வியந்து கொண்டிருக்கிறேன்" என்றாள்.

எனக்கு மிகவும் கோபம் வந்தது. "அதில் என்ன அவ்வளவு சுவாரஸ்யம்?" என்று கேட்டேன்.

அவள் தன் முகத்தைச் சிறிது கோணிக்கொண்டு நகைத்தவாறே, "ரொம்ப ஜோராக இருக்கின்றன, உன் புடைவையும் ரவிக்கையும்! வெள்ளைக்காரச்சிகள் அணிந்து கொள்வதுபோல் மார்பு திறந்த ரவிக்கையும் அணிந்து கொண்டால் இன்னும் நன்றாக இருக்குமே என்று நினைத்தேன்" என்றாள். பிறகு முகத்தினாலோ கண்களினாலோ மட்டும் அல்ல, உடம்பு முழுமையினாலும் என்னைப் பார்த்துப் பரிகாசமாக நகைத்துக்கொண்டே அவள் அவ்விடத்தை விட்டுச் சென்றுவிட்டாள்.

எனக்கு வந்த கோபத்துக்கு அளவில்லை. எல்லாவற்றையும் அவிழ்த்து எறிந்துவிட்டு வழக்கமாக உடுத்துக் கொள்ளும் ஆடைகளையே அணிந்துகொள்ள விரும்பினேன். ஆனாலும் நான் ஏன் அப்படிச் செய்யவில்லையோ தெரியாது. 'ஸ்திரீகள்தாம் சமூகத்துக்கு அலங்காரமாக இருப்பவர்கள். சரியாக உடுத்துக்கொள்ளாமல் நான் ஸந்தீப் பாபுவின் எதிரில் செல்வது என் கணவருக்குப் பிடிக்காது' என்றெல்லாம் மனத்தைச் சமாதானம் செய்துகொண்டேன்.

அவர்கள் சாப்பிட உட்கார்ந்தபோது நான் அவர்கள் முன் செல்வதாக இருந்தேன். பரிமாறுவதைக் கவனிக்கும் அவசரத்தில் வெட்கம் கொஞ்சம் குறைந்துவிடும் அல்லவா? ஆனால் காலத்தில் உணவு தயாராகவில்லை

நேரமோ ஆகிக்கொண்டிருந்தது. இதற்குள் விருந்தின ருக்கு என்னை அறிமுகப்படுத்துவதற்காக என் கணவர் என்னைக் கூப்பிட ஆள் அனுப்பிவிட்டார்.

ஸந்தீப் பாபுவின் முகத்தைப் பார்த்துப் பேசுவ தற்கோ எனக்கு அசாத்திய வெட்கமாக இருந்தது. ஏதோ ஒருவிதமாகத் தைரியப்படுத்திக்கொண்டு, "சாப்பாட் டுக்கு ரொம்ப நாழிகை ஆகிவிட்டது" என்றேன்.

அவர் துளிகூடச் சங்கோசம் இல்லாமல் என் பக்கத் தில் இருந்த நாற்காலியில் வந்து உட்கார்ந்துகொண்டு, "சாப்பாட்டுக்கு என்ன?, தினமும் கிடைக்கிறது. ஆனால் அதை அளிக்கும் லக்ஷ்மிதேவிதான் கண்ணில் தென்படு வதில்லை. இப்போது அவள் பிரசன்னமாகிவிட்டாள். இனிமேல் சாப்பாடு மெள்ளக் கிடைத்தாலும் பாதகம் இல்லை" என்றார்.

கூட்டத்தில் தயக்கம் இல்லாமல் பேசுவதுபோலவே அவர் என்னிடம் நடந்துகொண்ட மாதிரியும் தயக்கம் இல்லாமல் இருந்தது. தம் சொந்த இடத்தில் நிர்ப்பயமாக ஒரு கவலையும் இல்லாமல் வீற்றிருப்பவர் போலத் தோன்றினார். பிறரிடம் நெருங்கிப் பழகுவதைத் தம் உரிமையாகவே அவர் பாவிப்பதைக் காண, அதை ஆக்ஷேபிப்பவர்கள்தாம் தவறு செய்பவர்கள் என்றே தோன்றிற்று.

ஸந்தீப் பாபு என்னை ஒன்றுக்கும் உதவாத சுத்தக் கர்நாடகம் என்று நினைத்துவிடப்போகிறாரே என்று நான் நடுங்கினேன். ஆனாலும் அவர் பிரமிக்கும் படியாகவோ அவருடைய மனத்தைக் கவரும்படியாகவோ பளிச்சென்று பேச எனக்கு வரவே இல்லை. 'இவ்வளவு மோசமாகத் தோன்றுவதற்கு எனக்கு என்ன கேடுகாலம் பிடித்ததோ தெரியவில்லையே?' என்று வருந்தினேன்.

சாப்பாடெல்லாம் ஒரு வழியாக முடிந்ததும் நான் அந்த இடத்தை விட்டுப் போக முயன்றேன். ஆனால் ஸந்தீப் பாபு எப்போதும்போல் தைரியமாக நான் போவதைத் தடுத்து, "என்ன, நான் சாப்பாட்டை நினைத் துக்கொண்டா இருந்தேன்? உங்களுடைய அழைப்புக்காக

அல்லவா போகாமல் தங்கினேன்? இப்போது நீங்கள் போய்விட்டால் அது விருந்தோம்பும் முறைக்கு ஏற்றதா?'' என்றார்.

இந்த வார்த்தைகளை அவர் வெகு சாதாரணமாகச் சொல்லாவிட்டால் கொஞ்சம் விரசமாகவே இருந்திருக்கும். என்ன இருந்தாலும் அவர் என் கணவரின் நெருங்கிய நண்பர் அல்லவா? நான் அவருக்குச் சகோதரி போன்றவள் தானே!

அவர் இப்படிச் சகஜமாகப் பேசியபோது பதில் சொல்லத் தெரியாமல் தவிக்கும் எனக்குச் சாதகமாக என் கணவர், ''நீ போய் உன் சாப்பாட்டை முடித்துக் கொண்டு மறுபடியும் இங்கே வாயேன்'' என்றார்.

''நீங்கள் நிச்சயமாகத் திரும்பி வருவதாகச் சொன்னால்தான் உங்களைப் போகவிடுவோம்'' என்றார் ஸந்தீப் பாபு.

''ஆகட்டும்'' என்றேன், சிறிது புன்னகையுடன்.

''உங்களை நம்ப முடியாது. ஏன் என்று சொல்லட்டுமா?'' என்றார் ஸந்தீப் பாபு; ''நிகிலுக்குக் கல்யாணமாகி ஒன்பது வருஷம் ஆகிறது. இவ்வளவு நாளாக என்னை நீங்கள் ஏமாற்றி வந்திருக்கிறீர்கள். நீங்கள் மறுபடியும் ஒன்பது வருஷத்துக்கு இவ்வாறு செய்தால் அப்புறம் நாம் ஒருவரை ஒருவர் பார்க்கவே முடியாது.''

''ஏன் முடியாது?'' என்றேன் மெதுவாக.

''ஜாதக ரீதியாக நான் சீக்கிரமே இறந்து போய் விடுவேன் என்று இருக்கிறது. என் முன்னோர்கள் ஒருவராவது முப்பது வயசு தாண்டவில்லை. எனக்கு இருபத்தேழு வயசு ஆகிவிட்டது.''

இது விஷயம் என் மனத்தில் படாமல் போகாது என்று அவருக்குத் தெரியும். ''நாட்டுமக்களின் ஆசீர்வாதம் எல்லாம் வீண்போகுமா? ஜாதகரீதியாக உள்ள தோஷத்தை அது நிச்சயம் அகற்றிவிடும்'' என்றேன். என் குரலில் அப்போது கொஞ்சம் கவலை தொனித்திருக்க வேண்டும்.

"நீங்கள்தாம் நாட்டின் தேவதை. உங்கள் வாயி லிருந்துதான் இந்த ஆசிமொழிகள் வரவேண்டும். அத ஞல்தான் நீங்கள் திரும்பி வரவேண்டும் என்று இவ்வளவு கவலைப்படுகிறேன். இன்றிலிருந்து எனக்கு க்ஷேமகாலந் தான்."

வேறு யாராவது இருந்தால் இம்மாதிரியாகப் பேச இடம் கொடுத்திருக்கமாட்டேன். ஆனால் ஸந்தீப் பாபு வின் கவலையற்ற தைரிய சுபாவம் என்னை ஒன்றும் செய்ய முடியாமல் அடித்துவிட்டது.

"அப்படியானல் நீங்கள் திரும்பி வரும்வரையில் உங் கள் கணவனை ஜாமீஞக 'விட்டுச் செல்லுங்கள். நீங்கள் வராமல் இவன் இங்கிருந்து அசைய முடியாது" என்ருர் ஸந்தீப் பாபு சிரித்துக்கொண்டே.

நான் அங்கிருந்து செல்லும்போது, "உங்களுக்கு ஒரு சிறிய கஷ்டம் கொடுக்கலாமா?" என்று கேட்டார். நான் திடுக்கிட்டுத் திரும்பினேன்.

"பயப்படவேண்டாம். ஒரு தம்ளர் தீர்த்தம் வேண் டும். சாப்பிடும்போது நான் ஜலமே குடிக்கவில்லை என்பதை நீங்கள் கவனித்திருக்கலாம். சிறிது கழித்துத் தான் நான் ஜலம் குடிப்பது வழக்கம்."

அவர் இப்படிச் சொன்னவுடன் அதன் காரணத்தை நான் எப்படிக் கேட்காமல் இருப்பது? அவர் உடனே தம் குடல் ரோகத்தைப் பற்றிய வரலாற்றைக் கூறத் தொடங்கிஞர். அந்த நோயிஞல் ஏழு மாதம் அவர் படாத துன்பம் எல்லாம் பட்டாராம். எவ்வளவோ 'அல்லோ பதிக்', 'ஹோமியோபதிக்' சிகிச்சைகளின் தொந்தரவு களை அநுபவித்த பிறகு, நாட்டு வைத்தியத்தில்தான் ஆச்சரியமான குணம் தெரிந்ததாம்.

பிறகு அவர் சிரித்துக்கொண்டே, "சுதேசி மருந்து கள் இல்லாமல் குணமாகாத வியாதிகளாகவே பார்த்துக் கடவுள் எனக்கு அளித்திருக்கிருர்" என்ருர்.

இவ்வளவு நாழிகையாகப் பேசாதிருந்த என் கணவர், "அந்நிய நாட்டு மருந்துகளில் உனக்கு வேண்டிய பிரியம்

இருக்கிறது; எனக்குத் தெரியும். உன் அறையில் மூன்று அலமாரிகள் நிறைய இங்கிலீஷ் மருந்துகள்...'' என்று சொல்லிக்கொண்டிருந்தபோது ஸந்தீப் பாபு குறுக்கிட்டு, "அவைகளை என்னவென்று நினைத்துக்கொண்டிருக்கிறாய்? நம் ஊர்ப் போலீஸ் காவல் எப்படியோ அப்படித்தான் அவைகளும். நமக்கு அவசியம் என்றா போலீஸ்காரர்கள் இருக்கிறார்கள்? தற்கால ஆட்சி முறையில் நம்மை அடித்துத் துன்புறுத்தி நம்மிடம் அபராதம் வாங்கு வதற்காக அவர்கள் ஏற்பட்டிருக்கவில்லையா? அது போலத்தான்'' என்றார்.

மிகைப்படுத்திப் பேசுவது என் கணவருக்கு ஒரு நாளும் பிடிக்காது. ஆனாலும் எல்லா அலங்காரங்களும் இயற்கையை மிகைப்படுத்துவனவே அல்லவா? கடவுளா அவற்றைச் சிருஷ்டித்தார்? மனிதர் அல்லவா?

ஒரு நாள் நான் கூறிய பொய் ஒன்றை ஆதரித்துப் பேசுவதற்காக, "பறவைகள், மிருகங்கள், மரங்கள் இவைகளே கற்பனை செய்து கூறுவதற்குச் சக்தி இல்லா மல் உண்மையை அப்படியே உரைக்கின்றன. இவ்விஷயத் தில் மற்றத் தாழ்ந்த பிராணிகளைக்காட்டிலும் புருஷர் கள் மேம்பட்டவர்கள். அவர்களையும் ஸ்திரீகள் வென்று விட்டார்கள். மிதமிஞ்சிய ஆபரணங்கள் அணிந்து கொண்டாலும் எப்படி அழகாக இருக்கிறதோ, அப்படித் தான் பொய்யும் ஸ்திரீகள் விஷயத்தில் தவறாகாது'' என்றேன்.

நான் உள்கட்டுக்குச் செல்வதற்காக வெளித் தாழ்வாரத்துக்கு வந்ததும் என் சிறிய ஓர்ப்படி ஜன்ன லுக்கு அருகே நின்று இடுக்கு வழியாகப் பார்த்துக்கொண் டிருப்பதைக் கண்டேன்.

ஆச்சரியத்துடன், "நீங்களா இங்கே?'' என்றேன்.

"ஆம். ஒட்டுக் கேட்டுக்கொண்டிருக்கிறேன்'' என் றாள் அவள்.

நான் திரும்பி வந்ததும் ஸந்தீப் பாபு கரிசனையோடு, "அடடா! எங்களால் உங்கள் பசி கெட்டுப் போய்விட் டதுபோல் இருக்கிறதே!'' என்றார்.

எனக்கு மிகவும் வெட்கமாகப் போய்விட்டது. நான் அவ்வளவு விரைவாகச் சாப்பிட்டுவிட்டு வந்தேன். சாதாரணமாகச் சாப்பிடும் நாழிகைகூட ஆகவில்லை.

நான் வெட்கப்பட்டதை ஸந்தீப் பாபு கண்டுகொண்டார். அதனால் என் வெட்கம் பின்னும் அதிகரித்தது. "மானைப்போல் மருண்டு நீங்கள் ஓடிவிடப் பார்த்தீர்கள். ஆனால் திரும்பி வருவதாகச் சொன்ன சொல்லை மீறாமல் வந்தீர்களே, அதுவே பெரிதல்லவா?" என்றார்.

அதற்கு எவ்விதம் பதில் சொல்லுவதென்று தெரியாமல் சங்கோசத்துடனும் கலவரத்துடனும் நான் ஸோபாவின் ஓரத்தில் உட்கார்ந்துகொண்டேன். பெண்மையின் சக்தியே உருவெடுத்து வந்து ஸந்தீப் பாபுவைக் கௌரவப்படுத்துவதாக என்னைப்பற்றி நான் கனவு கண்டுகொண்டிருந்தது எங்கேயோ பறந்து போய் விட்டது.

ஸந்தீப் பாபு வேண்டுமென்றே என் கணவருடன் ஒரு விவாதத்தைத் தொடங்கினார். கட்சி பேசும்போது தம் கூர்மையான புத்தி பின்னும் அதிகம் சோபிக்கிறது என்பது அவருக்குத் தெரியும். ஆகவே நான் இருக்கும்போது இப்படி ஏதாவது சண்டையைக் கிளப்பும் சந்தர்ப்பத்தை அவர் விடுவதே இல்லை.

தேசிய இயக்கத்தைப்பற்றி என் கணவரின் அபிப்பிராயங்கள் நன்றாகத் தெரிந்திருந்தும் ஸந்தீப் பாபு, "அப்படியானால், தேச சேவையில் கற்பனைத் திறனுக்கு ஓர் இடம் இருக்கிறதே. அதை நீ அடியோடு ஒப்புக் கொள்ளவில்லையா?" என்றார், வம்புக்கு இழுக்கும் எண்ணத்துடன்.

"அதற்கு இடம் இருக்கிறது என்பதை ஒப்புக் கொள்கிறேன் ஸந்தீப். ஆனால் அதுவே சகலமும் என்று என்னால் நினைக்க முடியாது. நாடு என்பது என்ன என்பதை நான் உண்மையாக என் மனத்துக்குள் நன்கு தெரிந்துகொள்ள விரும்புகிறேன்; பிறருக்கு அறிவிக்கவும் விரும்புகிறேன். மிகப் பெரிய இந்த விஷயத்தில் ஏதாவது ஒரு மாயமந்திரத்தை உபயோகிப்பதென்றால்

எனக்கு அவமானமாக இருக்கிறது; பயமாகவும் இருக்கிறது.''

''நீ எதை மாயமந்திரம் என்கிருயோ அதைத்தான் நான் சத்தியம் என்று நம்புகிறேன். எனக்கு உண்மையில் என் தேசந்தான் தெய்வம். அதில் வாழும் மக்களைத்தான் நான் தொழுகிறேன். நான் நர நாராயணனுடைய உபாசகன். மனிதன் வாயிலாகக் கடவுளின் உண்மை வெளியாவதுபோலவே நாட்டின் வாயிலாகவும் அது வெளியாகிறது. தேசம், மனிதன் ஆகிய இவ்விரு உருவத்திலும் கடவுள் தோன்றுகிருர்.''

''இவ்வாறு நீ நம்புவதாக இருந்தால், அப்போது ஒரு தேசத்துக்கும் மற்ெருரு தேசத்துக்கும், ஒரு மனிதனுக்கும் மற்ெருரு மனிதனுக்கும் வேற்றுமையே உனக்குப் படலாகாதே!''

''உண்மையே. ஆனுல் நம்முடைய சக்தி ஓர் அளவுக்குள் அடங்கியது. ஆகவே நாம் நம் சொந்த நாட்டை வழிபடுவதனுலேயே கடவுளுக்கு வழிபாடு செய்தவர்கள் ஆகிருேம்.''

''நீ அவ்வாறு வழிபாடு செய்வதில் எனக்கு ஒன்றும் ஆக்ஷேபம் இல்லை. உன் சொற்படி கடவுளின் வடிவமாகத்தான் மற்றத் தேசங்களும் இருக்கின்றன. அந்தத் தேசங்களையெல்லாம் பகைத்துக்கொண்டு நீ எப்படிக் கடவுளை வழிபடுவது?''

''பகைப்பதும் வழிபாட்டின் ஓர் அங்கந்தான். வேட வேஷம் புனைந்த பரமசிவனுடன் மல்யுத்தம் செய்தே அர்ச்சுனன் அவர் அருளைப் பெறவில்லையா? கடவுளோடு நாம் சண்டையிட்டால்கூடக் கடைசியில் ஒரு நாள் அவர் நமக்கு அருள் புரிந்தே தீருவார்.''

''அப்படியானுல் தேசத்துக்குச் சேவை செய்கிறவர்கள், தீங்கு செய்கிறவர்கள் ஆகிய இருபாலாரும் கடவுளின் பக்தர்கள்தாம். அப்போது தேசபக்தியைப் பற்றித் தனி உபதேசமே வேண்டியதில்லையே!''

"சொந்த தேசம் என்றால், அது வேறு விஷயம். அதைத் தொழவேண்டும் என்றுதான் ஒவ்வொருவர் உள்ளமும் ஏவுகிறது."

"இம்மாதிரி சொல்லிக்கொண்டே போனால், கடவுள் மனித ரூபத்திலும் தோன்றுவதால், முதலில் நம்மையே நாம் தொழுதுகொள்ள வேண்டும் என்றுகூடச் சொல்லி விடலாம். அப்படிச் செய்யத் தோன்றுவதுதான் இயற்கை."

"இதோ பார் நிகில், இதெல்லாம் அர்த்தமற்ற வாதம். உணர்ச்சி என்று ஒன்று மனிதர்களுக்கு இல்லையா?"

"நான் நிஜத்தைச் சொல்லுகிறேன், ஸந்தீப். அநீதத்தைக் கடமையாகவும், அதர்மத்தையே உயர்ந்த லக்ஷ்யமாகவும் நீ அடிக்கும்போதுதான் என் மனம் கேட்கவில்லை. என்னால் திருட முடியாது என்றால் அதற்குக் காரணம் என் வாதம் செய்யும் சாமர்த்தியமா? என் உயர்ந்த லக்ஷ்யங்களும் தன்மதிப்பும் அல்லவா?"

எனக்கு உள்ளூறக் கோபம் மண்டிக்கொண்டிருந்தது. கடைசியாகப் பொறுக்க முடியாமல், "இங்கிலாந்து, பிரான்ஸ், ஜர்மனி, ருஷியா எந்தத் தேசத்தை வேண்டுமானாலும் எடுத்துக்கொள்ளுங்கள். சொந்த நாட்டுக்காக அவர்கள் திருடாமல் என்ன செய்தார்கள்?" என்றேன்.

"இந்தத் திருட்டுக்கு அவர்கள் பரிகாரம் செய்து ஆக வேண்டியிருக்கிறது. அவர்கள் இன்னமும் அதையேதான் செய்துகொண்டிருக்கிறார்கள். அவர்களுடைய சரித்திரம் இன்னும் முடிந்துவிடவில்லை."

"சரி; அப்படியானால் நாமும் அப்படியே செய்வோம். முதல் முதல் திருடிய பொருள்களைக்கொண்டு நாட்டுப் பொக்கிஷத்தை நிரப்புவோம். பிறகு நிதானமாக அவர்கள் செய்வதுபோல் நாமும் அநேகம் நூற்றாண்டுகளுக்குப் பிறகு அதற்குப் பரிகாரம் செய்துகொண்டால் போகிறது. அவர்கள் ஏதோ இப்போது பரிகாரம் செய்துகொண்டிருக்கிறார்கள் என்றாயே. சரித்திரத்தில் 'பரிகாரம்' என்று எங்கே இருக்கிறது? சொல் பார்ப்போம்."

"தான் செய்த பாவத்தின் பலனை ரோம் தேசம் அநு பவித்துக்கொண் டிருந்தபோது அது யாருக்குத் தெரிந் தது? வெளிப்பார்வைக்கு நாட்டின் சீருக்கும் சிறப்புக்கும் குறைவில்லை. ஆனால் இதைமட்டும் நீ பார்க்கலாம்; பொய் புனைசுருட்டுக்களினால் நிரம்பியிருக்கும் அவர்கள் அரசியல் மூட்டைகள் கனம் தாங்காமல் தாமே கிழிந்துபோகின் றன."

என் கணவர் தம் நண்பர்களுடன் சர்ச்சை புரிந்து கொண்டிருக்கும்போது நான் உடன் இருந்து பார்த்த தில்லை. என்னுடன் ஏதாவது சர்ச்சை செய்யப் புகுந்தால் அதிகமாக வாதிக்காமல் விட்டுவிடுவார். இதற்கு அவர் என்மேல் கொண்டிருந்த அளவற்ற அன்புதான் காரணம். இன்றுதான் முதல் முதல் வாதத்தில் அவருக்குள்ள சாமர்த்தியத்தைக் கண்டேன்.

இருந்தாலும் அவர் கட்சி சரி என்று ஒப்புக்கொள்ள என் மனம் இடம் கொடுக்கவில்லை. நான் ஏதாவது தகுந்த பதில் சொல்லலாம் என்று பார்த்தேன். எனக்கு ஒன்றுமே தோன்றவில்லை.

திடீரென்று ஸந்தீப் பாபு என் பக்கம் திரும்பி, "உங் கள் அபிப்பிராயம் என்ன? நீங்கள் என்ன சொல்லுகிறீர் கள் இதற்கு?" என்று கேட்டார்.

"அவ்வளவு நுட்பமாகப் பார்க்க எனக்குத் தெரி யாது. ஏதோ எனக்குப் படுகிறதை மட்டும் சொல்லுகி றேன். நான் கேவலம் மானிடப் பிரகிருதி. எனக்கு ஆசை கள் உண்டு. நாட்டின் நலங்களிலே எனக்கு ஆசை. அவ சியமானால் பிறரிடமிருந்து அவற்றைப் பிடுங்கி எடுத்துக் கொள்ளவும் தயங்கமாட்டேன். எனக்குக் கோபம் உண்டு. தேசத்துக்காக நான் கோபம் கொள்வேன். தேசத்துக்கு நேர்ந்த அவமானத்துக்காக, கொன்று பழி தீர்க்க வேண்டுமானாலும் நான் அப்படியே செய்வேன். எனக்கு மோகம் உண்டு. தேசத்தின் பொருட்டு என் மனத்தைப் பறிகொடுப்பேன். அவ்வாறு செய்வதற்கு ஓர் உருவம் அவசியம். ஆகவே நாட்டையே ஸ்திரீ ரூபமாக்கி அன்னை என்றும் துர்க்கா தேவி என்றும் வணங்கி,

அவளுக்கு இடும் பலிகளினால் பூமி முழுவதும் ரத்தமயம் ஆக்குவதென்றாலும் எனக்குச் சம்மதம். நான் சாதாரண மானிடப் பிரகிருதியே ஒழிய தெய்விகப் பிரகிருதியல்ல'' என்றேன்,

ஸந்தீப் பாபு எழுந்து கைகளை உயரத் தூக்கி, ''ஹுர்ரே! ஹுர்ரே'' என்று கத்தினார். உடனே மாற்றிக் கொண்டு, ''வந்தே மாதரம்! வந்தே மாதரம்!'' என்றார்.

என் கணவர் முகத்தில் கொஞ்சம் வருத்தம் தோன்றியது. அவர் என்னைப் பார்த்துச் சாந்தமாக, ''நானும் மானிடப் பிரகிருதிதான். தெய்வப் பிரகிருதி அல்ல. அதனால்தான் என்னிடமுள்ள தீய குணத்தையே நாட்டின் ஸ்வரூபமாக்குவதற்கு என் மனம் துணியவில்லை'' என்றார்.

ஸந்தீப் பாபு மீண்டும் உரத்த குரலில் பேசலானார்: ''இதோ பார், நிகில்; பெண்களின் உயிரோடு கலந்து சத்தியம் ஓர் உயிராக லயித்துவிட்டது. நம்முடைய சத்தியத்தில் நிறம் இல்லை; ரசம் இல்லை; ஆத்மா இல்லை; யுக்தி மட்டுமே மிஞ்சியிருக்கிறது. ஆதலால் பெண்களுக்குத்தான் உண்மையில் நிஷ்டுரமாக இருக்கத் தெரியும். ஆண்களுக்கு அது தெரியாது; ஏனெனில் தர்மபுத்தி அவர்களைப் பலவீனர்கள் ஆக்கிவிடுகிறது. பெண் சிறிதும் தயக்கமின்றி ஸர்வ நாசம் செய்ய முடியும்; கடும் புயலைப் போல அவள் தீவிரமாகக் கிளம்புவாள். அதனால்தான் அவளுடைய அநியாயம் மிகவும் அழகாக இருக்கிறது; பயங்கரமாக இருந்தாலும் அதில் அழகு இருக்கிறது; ஆண் அவ்வாறு கிளம்பி அநியாயம் செய்தால், அது கோரமாகத்தான் இருக்கிறது; ஏனெனில் அவனுடைய மனத்தில் நியாய புத்தியினால் உண்டாகும் சங்கடங்கள் இருந்துகொண்டே இருக்கின்றன. ஆதலால்தான் உன்னிடம் நான் சொல்கிறேன்: இன்று நம் பெண் மணிகளே நம் நாட்டைக் காப்பவர்கள். தர்ம கர்மங்களுக்கோ சிந்தனை விவேகங்களுக்கோ இன்று இடம் இல்லை. இன்று நாம் நிர்விகாரமாக நிஷ்டுரக்காரர்கள் ஆகிவிடவேண்டும்; அநியாயம் செய்யவேண்டும். இன்று

நம் நாட்டுப் பெண்மணிகளின் கையால் செஞ்சந்தனத்தைப் பூசச் செய்து, பாவத்தை அலங்கரிக்கவேண்டும். நம் கவியரசர் சொல்கிறாரே, உனக்கு ஞாபகம் இல்லையா?

**பாவம் என்னும் பாவாய், வாவா!**
**அழகி, வாவா! அணைத்துன் முத்தமாம்**
**கனலும் மதுஎன் குருதியிற் கலந்து**
**சஞ்சரித் திடுக, அமங்கலச் சங்கு**
**முழங்குக, நுதலில் களங்கம் முயங்குக,**
**நாணில் லாமையாம் நாறுகருஞ் சேற்றை**
**உரத்திற் பூசுக, ஊழிசெய் பவளே!**

முழு மனக்களிப்போடு சர்வ நாசம் செய்ய முடியாத தர்மம் இன்று ஒழிந்துபோகட்டும்.''

இவ்வாறு கூறி, ஸந்தீப் பாபு நிமிர்ந்து, இருமுறை தரையைக் காலால் ஓங்கி உதைத்தார்; கீழே விரித்திருந்த ஜமுக்காளத்திலிருந்து, அமைதியாக அமுங்கி இருந்த தூசெல்லாம் பயந்து வெளிக்கிளம்பின. எத்தேசத்திலும் எக்காலத்திலும் மக்கள் மிகவும் உயர்வாகப் போற்றி வந்தவைகள் யாவற்றையும் ஒரு கணத்து ஆவேசத்தில் நிந்தித்துப் பேசிய அவருடைய முகத்தைப் பார்த்த போது என் தேகத்தில் ஒரு நடுக்கம் உண்டாயிற்று.

கடுமையான குரலில் அவர் கர்ஜிக்கலானார்: "வீட்டை எரித்துச் சாம்பலாக்கிவிட்டு வெளியுலகைப் பிரகாசமாக்கும் சிறந்த அக்கினி தேவதை நீங்கள்தாம். இன்று நாங்கள் எல்லோரும் நாசமாகப் போவதற்கு வேண்டிய வெல்ல முடியாத தேஜஸை அளித்து எங்கள் வெறியை அழகுப் பொருள் ஆக்கிவிடுங்கள்.''

இந்தக் கடைசி வார்த்தைகளை அவர் யாரிடம் சொன்னார் என்று தெரியவில்லை. அது 'வந்தே மாதரம்' என்று அவர் கொண்டாடிய தேவதையோ நாட்டின் பெண்குலமோ அந்தப் பெண்குலத்துக்குப் பதிலாக அவர் எதிரில் நின்ற பெண்தானோ யார் என்று கூற முடியாது. இம்மாதிரியே அவர் மேன்மேலும் பேசியிருப்பார். ஆனால் என் கணவர் திடீரென்று எழுந்து ஸந்தீப் பாபுவின் தோளைத் தட்டி, "ஸந்தீப், சந்திரநாத் பாபு வந்திருக்கிறார்'' என்றார்.

நான் திடுக்கிட்டுத் திரும்பிப் பார்க்கவே கம்பீரமும் அமைதியும் பொருந்திய தோற்றத்தையுடைய ஒரு கிழவர் உள்ளே வரலாமோ என்று யோசிப்பவர்போல் வாயிற் படியில் தயங்கிய வண்ணம் நின்றுகொண் டிருப்பதைக் கண்டேன். அஸ்தமிக்கும் சூரியனைப்போல் சாந்தமான தேஜஸ் அவர் முகத்தில் பிரகாசித்தது.

என் கணவர் என்னிடம் வந்து மெதுவாக, "உன்னிடம் அடிக்கடி நான் சொல்லியிருக்கும் குரு இவர்தாம். இவரை நமஸ்கரி" என்றார்.

நான் அவர் காலடியில் பணிந்து பாததூளியைச் சிரசில் அணிந்துகொண்டேன். "தாயே, கடவுள் உன்னை எப்போதும் காப்பாராக" என்று அவர் வாழ்த்தினார்.

அத்தகைய ஆசீர்வாதந்தான் என் மனத்துக்கு அப்போது மிகவும் தேவையாக இருந்தது.

# நிகிலேசன்

ஒரு காலத்தில் எந்தக் கஷ்டம் வந்தாலும் தாங்கி விடலாம் என்ற நம்பிக்கை எனக்கு இருந்தது. ஆனால் அப்படிப்பட்ட சோதனை எனக்கு இதுவரையிலும் ஏற்படவில்லை. இப்போது அது ஏற்பட்டுவிட்டது என்று நினைக்கிறேன்.

ஏழைமை, சிறைவாசம், அவமானம், மரணம் - அது விமலாவின் மரணமாக இருந்தாலும் சரி - இவைபோன்ற தீமைகளை எல்லாம் கற்பனை செய்து என் மனோபலத்தை நான் பரீக்ஷைசெய்து பார்ப்பது உண்டு. இத்தகைய துன்பங்கள் நேர்ந்தால் நான் கலங்காமல் இருக்கவேண்டும் என்று நினைத்ததில் மிகை ஒன்றும் இல்லை. ஒரே ஒரு விஷயம் மட்டுந்தான் என்றால் எண்ணிப் பார்க்கவும் முடியவில்லை. அதைமட்டும் உண்மையில் என்றால் தாங்க முடியுமா என்பது எனக்கு இன்றும் சந்தேகமாகவே இருக்கிறது. என் உள்ளத்தில் ஏதோ ஒருவேதனை குடிகொண்டு சதா துன்புறுத்திக்கொண்டிருக்கிறது. நான் தூங்கும் போதுகூட அவ்வேதனை தணியவில்லை. காலையில் எழுந்து பார்க்கும்போது ஆகாயம் ஏதோ ஒளிமங்கித் தோன்றுகிறது. ஏன்? என்ன நடந்தது?

என் மனமோ அதிநுட்பமான நிலைமைக்கு வந்துவிட்டது. அந்நிலையில் சந்தோஷகரமாகத் தோன்றிய என் பழைய வாழ்க்கைகூடப் பொய்மயமாகி என் உள்ளத்தைத் துளைப்பதுபோல் இருந்தது. என்னை நெருங்கிக்கொண்டிருக்கும் அவமானமும் துக்கமும் தம்மை மறைக்க முயன்றதாலேயே பின்னும் நன்றாக என் கண்களுக்குப் புலப்பட்டுக்கொண்டிருந்தன. என் இருதயமே கண்ணாகி விட்டது. எவற்றை நான் பார்க்க விரும்பவில்லையோ பார்க்கக்கூடாதோ அவற்றையே நான் பார்த்து ஆக வேண்டியிருக்கிறது.

கடைசியாகத் துரதிருஷ்டம் பிடித்த என் ஜன்மத்தின் முழு மோசமான நிலைமை ஒவ்வொன்றிலும் வெளியாகும் நாள் வந்துவிட்டது. இந்தத் தரித்திரமானது திடீரென்று செல்வம் நிறைந்து விளங்கிய இருதயத்தில் புகுந்து விட்டது. ஒன்பது வருஷங்களாகப் பொய்யை நிஜம் என்று நம்பி அதற்கு நான் செலுத்திவந்த காணிக்கைகளை வட்டியுடன் சேர்த்து இனி என் வாழ்நாள் முழுவதும் நான் உண்மைக்குச் செலுத்தவேண்டுமே!

வீணே நான் மமதைகொண் டிருப்பதில் என்ன பயன்? என்னிடம் உள்ள குறையை நான் ஒப்புக்கொள்ளாமல் இருப்பானேன்? முன்பின் யோசியாமல் பிறரை அடக்கிக் கொண்டு கிளம்பும் வன்மை என்னிடம் இல்லை. ஆனால் அந்தக் குணந்தான் புருஷர்களுக்கு வேண்டும் என்று மாதர்கள் விரும்புகிறார்கள். ஆயினும் கட்டுமஸ்தான உடம்புதானா பலம்? பலமற்றவர்களைக் காலின் கீழே இட்டுத் தேய்ப்பது சரியல்ல என்று அதற்குத் தோன்றக் கூடாதா?

இந்தச் சர்ச்சை எல்லாம் எதற்கு? வாதாடுவதால் குறை தீர்ந்துவிடுமா? நான் தகுதியில்லாதவன்தான்.

எனக்குத் தகுதி இல்லாமல் இருந்தால் என்ன? தகுதியற்றவர்கள் என்று பார்க்காமல் அபரிமிதமாக அளிப்பது அல்லவா உண்மையான அன்புக்கு அடையாளம்? தகுதியுள்ளவர்கள் எவ்வளவோ சந்தோஷங்களை அடைந்து அநுபவிக்கிறார்கள். கடவுள் ஏழைக்கு என்றுதான் அன்பைப் பிரத்தியேகமாக வைத்திருக்கிறார்.

இதுவரைக்கும் வீட்டுக் காரியங்களைச் செய்து கொண்டு வீட்டுக்குள்ளேயே இருந்துபழக்கமானவள் என் விமலா. என்மேல் அவள் கொண்டிருந்த அன்பு அவள் உள்ளமாகிய தெளிந்த ஊற்றினின்றும் தோன்றியதா தினமும் சமூகமாகிய எஞ்சினால் அடிக்கப்பட்டு வரும் குழாய்த் தண்ணீர்தானா என்று எனக்குச் சந்தேகம் உதித்தது.

விமலா தன் உண்மையான குணங்களுடன் சோபிக்க வேண்டும் என்று நான் விரும்பினேன்.

ஒருவரைக் கடவுள் பிறப்பித்தபடி பார்க்கவேண்டும் என்றால் அவர் இஷ்டப்படி நாம் விடவேண்டும்; நம் அதிகாரத்தைச் செலுத்தக் கூடாது என்பதை நான் மறந்து விட்டேன்.

இவ்விஷயத்தை ஏன் நான் நினைக்கவில்லை? மனைவி மீது கணவனுக்கு உள்ள உரிமையினாலா? இல்லை; அன்பை ஒரே அடியாக நான் நம்பியதுதான் காரணம். ஒளிவு மறைவு இல்லாத உண்மையை நான் கண்டு சகிக்க முடியும் என்று வீணே பெருமை கொண்டிருந்தேன். தெய்வத்துக்கே பொறுக்காதது என் செய்கை. இருந்தாலும் கடைசியில் இந்தச் சோதனையில் வெற்றி அடைந்துவிடுவேன் என்ற உறுதியுடன் இருந்தேன்.

விமலாவுக்கு என்னைப்பற்றிய ஒரு விஷயம் புரியவில்லை. பிறரை வற்புறுத்தும் காரியத்தை மிக இழிவாக நான் கருதியதை அவள் சரியாகத் தெரிந்துகொள்ளவில்லை. கையால் ஆகாதவன் அல்லவா நியாயப்படி நடக்கப் பயப்படுவான்; நேரான மார்க்கத்தை விட்டு அதர்ம வழியில் காரியத்தைச் சாதித்துக்கொள்ள முயலுவான்? பொறுமையோடு பாடுபடுவதற்கு விமலாவுக்குப் பொறுமை இல்லை. புருஷர்கள் கண்டபடி கோபித்துக் கொண்டு முரட்டுத்தனமாக இருக்கவேண்டும் என்று அவள் விரும்புகிறாள். மரியாதையுடன் பயமும் சேர்ந்திருக்கவேண்டும் என்பது அவள் ஆசை.

விமலா வெளியுலகில் சுயேச்சையாகச் செல்லும் போது புருஷர்கள் மகளிரை அடக்கி ஆளுவதைப்பற்றி உள்ள பைத்தியம் அவளைவிட்டு அகன்றுவிடும் என்று நம்பியிருந்தேன். ஆனால் லகுவில் அவளை விட்டு அகலக் கூடிய பைத்தியம் அல்ல அது என்பது எனக்கு இப்போதுதான் தெரிகிறது. கட்டுக்கு அடங்காமல் உற்சாகமாக இருப்பதில்தான் அவளுக்கு விருப்பம். இந்த எளிய வாழ்க்கையில் என்ன பெரிய ஆனந்தம் இருக்கிறது? ஆனால் அதை அமைதியாக அநுபவிப்பதில் அவளுக்குத் திருப்தி இல்லை. நானோ கடமையைச் செய்வதில் அளவில்லாத ஆவேசமும் பரபரப்பும் அடியோடு கூடாவென்ற உறுதியுள்ளவன். விமலாவுக்கு இது கையா

லாகாத்தனமாகத் தோன்றுகிறது. 'வந்தே மாதரம்' என்று கத்திக்கொண்டு நான் தெருவில் ஓடவில்லை என்று அவளுக்கு என்மீது ஒரே கோபம்.

இந்தக் கூட்டத்தில் சேராததனால் ஊரில் பல பேருக்கு நான் வேண்டாதவன் ஆகிவிட்டேன். சர்க்காரிட மிருந்து கிடைக்கும் ஏதாவது பட்டப்பெயரில் ஆசையோ போலீஸாரிடம் பயமோ என்று அவர்கள் தீர்மா னித்துவிட்டார்கள். போலீஸாரோ நான் ஏதோ ரகசி யமான உத்தேசம் கொண்டிருப்பதாக நினைத்துப் பேசா மல் இருப்பதையே சந்தேகித்துக்கொண் டிருக்கிறார்கள்.

தேசத்தை உள்ளபடி அறிந்துகொள்வதில் விருப்ப மற்றவர்கள், பாமர மனிதர்கள் என்றால் பிடிக்காத வர்கள், தங்களுடைய உற்சாகத்துக்காக நாட்டைத் தேவ தையாகப் பாவித்துக் கூச்சலிடுபவர்கள், இப்படிப்பட்ட வர்களுக்குத் தேசத்தைக்காட்டிலும் அவர்கள் உற்சாகந் தான் பெரிது என்று எனக்குத் தோன்றுகிறது.

சத்தியத்தைக் காட்டிலும் நம் மதிமயக்கத்தையே உயர்வாக மதிப்பது அடிமைத்தனத்தின் அறிகுறி என்று தான் சொல்லவேண்டும். நாம் சுயேச்சையுடன் இருக்கக் கூடிய விஷயங்களில் நமக்குப் பயம். நம்மைக் கிளப்ப வேண்டும் என்றால் நம் கற்பனையினின்றும் எழுந்த விஷ யமோ அதிகாரத்தில் இருப்பவரின் கட்டளையோ சாஸ்திரங்களின் அநுமதியோ இப்படி ஏதாவது ஒன்று இருக்கவேண்டும். உண்மை எது என்று அறிந்துகொள் ளாமல் ஏதோ ஒரு மனப்பிரமையின் ஆவேசத்துக்கு உட் பட்டுத்தான் கிளர்ந்தெழ முடியும் என்றால் அப்போது ஸ்வராஜ்யத்துக்கு நமக்கு யோக்கியதை இல்லை என்றுதான் கூற வேண்டும்.

அன்று ஸந்தீப், 'தேசத்துக்கு உயிரும் உருவமும் அளித்துக் கற்பனை செய்து பார்க்கும் சக்தி எனக்கு இல்லை' என்று குறை கூறியபோது விமலாவும் அதை ஆமோதித்துப் பேசினாள். அச்சமயம் நான் என்னைப் பற்றி ஒன்றும் சொல்லிக்கொள்ளாமல் இருந்துவிட் டேன். ஏனெனில் கட்சி பேசி ஜயிப்பதில் என்ன ஆனந் தம் இருக்கிறது? புத்திக் குறைவினால் அவள் அவ்வாறு

நினைக்கவில்லை. என் சுபாவம் வேறு; அவள் சுபாவம் வேறு.

எனக்குக் கற்பனைசக்தி இல்லை என்று அவர்கள் என்னைக் குறை கூறுகிறார்கள். அதாவது என் விளக்கில் எண்ணெய் மட்டும் இருக்கிறதேயொழிய வெளிச்சம் இல்லையாம். நான் அவர்களைப்பற்றிச் சொல்வதோ, "நீங்கள் சிக்கிமுக்கிக் கற்களைப்போல் இருக்கிறீர்கள். ஒன்றோடொன்று சப்தத்துடன் உராய்ந்தால் தான் அதிலிருந்து நெருப்புப் பொறி உண்டாகும். அந்த வெறும் பொறிகளைக் கொண்டு செருக்கடைகிறீர்கள். உண்மையில் உங்களுக்கு என்ன வெளிச்சம் ஏற்பட்டது?'' என்பதுதான்.

சில காலமாகத்தான் ஸந்தீப் மிகவும் பேராசை பிடித்தவன் என்பதைக் கவனித்தேன். இந்தப் பேராசை தான் அவனை மிகவும் மதப்பற்று உள்ளவனாக நினைத்துக் கொள்ளும்படி செய்திருக்கிறது; தேசீய உணர்ச்சியிலும் மிகவும் கொடுமையாக நடந்துகொள்ளத் தூண்டுகிறது. நல்ல புத்திமான்தான்; இருந்தாலும் அற்ப குணம் படைத்தவன். தன் இழிவான இச்சைகளுக்கு உயர்ந்த பெயர்களை இட்டுப் பிரமாதப்படுத்துகிறான். தன் விருப்பு, வெறுப்பு இரண்டும் நிறைவேறினலொழிய அவன் திருப்தி அடைவதில்லை. அவன் பண ஆசையைப்பற்றி முன்பெல்லாம் விமலா என்னை எச்சரித்திருக்கிறாள். எனக்கும் அது தெரியும். என்றாலும் ஸந்தீபிடம் பணம் இல்லை என்று சொல்ல என்னால் முடியவில்லை. என்னிடம் அவன் பணம் பறிக்கப் பார்க்கிறான் என்று ஒப்புக்கொள்வது எனக்கே அவமானமாக இருக்கிறது.

ஸந்தீபினுடைய தேசபக்தி எல்லாம் ஒரு விதத்தில் சுயநலத்தோடு கூடிய அவன் பேராசைதான் என்று இப்போது விமலாவுக்கு எடுத்துச் சொல்வது மிகக் கஷ்டம். அவள் ஸந்தீபை ஒரே அடியாகப் பூஜை செய்வதைப் பார்த்தபோது பொறாமையினால் ஏதாவது என்னை அறியாமலே அதிகப்படுத்திக் கூறிவிடுவேனோ என்ற பயமே அவனைப்பற்றி அவளிடம் பேசவொட்டாமல் செய்கிறது. ஒருவேளை என் மனவேதனையில் நானே

ஸந்தீபைப்பற்றித் தவருக நினைத்துக்கொண் டிருந்தாலும் இருக்கலாம். ஆயினும் உள்ளுக்குள்ளேயே வைத்துக் குமுறிக்கொண் டிருப்பதைக் காட்டிலும் வாய்விட்டுச் சொல்லிவிடுவதே மேல் அல்லவா?

என்னுடைய குருதேவரான சந்திரநாத் பாபுவை முப்பது வருஷங்களாக எனக்குத் தெரியும். பெரிய ஆபத்தானாலும் சரி, அவதூருனாலும் சரி, சாவே ஆனாலும் சரி அவருக்குப் பயம் என்பது இல்லை. சாந்தியும் உண்மையும் விவேகமும் பொருந்திய அவர் என்னிடம் இவ்வளவு பக்ஷம் கொண்டதனால்தான் இந்த அழகான குடும்பத்தில் பிறந்த நான் பிழைத்தேன்.

அவரே அன்று என்னிடம் வந்து, "ஸந்தீப் இங்கே இன்னமும் இருக்கவேண்டியது அவசியமா?" என்று கேட்டார்.

கெடுதலின் அறிகுறிகளை அவர் உடனே கண்டுகொள்ளும் சக்தியுடையவர். சீக்கிரத்தில் அவர் கலங்கிவிட மாட்டார். எனினும் ஏதோ கெடுதல் சம்பவிக்கப் போகிறதென்று அவருக்குத் தோன்றிவிட்டது. அவருக்கு என்மீதுள்ள அளவற்ற அன்பு எனக்குத் தெரியாதா?

மத்தியான்னம் தேநீர் அருந்தும்போது, நான் ஸந்தீபிடம், "ரங்கபூரிலிருந்து இப்போதுதான் கடிதம் வந்தது. எனக்காக உன்னை வேண்டுமென்றே நான் இங்கேயே இருத்திக்கொண் டிருப்பதாக அவர்கள் குற்றம் கூறுகிருர்கள். அங்கே நீ எப்போது போவதாக இருக்கிருய்?" என்று கேட்டேன்.

கிண்ணங்களில் தேநீரை ஊற்றிக்கொண் டிருந்த விமலாவின் முகம் இதைக் கேட்டதும் சுண்டிப் போயிற்று. ஸந்தீபை ஒரு முறை கோணற்பார்வையோடு பார்த்தாள்.

"இப்படிச் சதா சுற்றி அலைந்து சுதேசிப் பிரசாரம் செய்வதில் ஏராளமான சக்தி வீணுகிறது. வீண் சிரமமேயன்றி அதனுல் ஒரு பயனும் இல்லை என்று நினைக்

கிறேன். எங்கேனும் ஓரிடத்தில் தங்கி வேலை செய்தால் நல்ல பயன் ஏற்படும் என்று தோன்றுகிறது" என்றான் ஸந்தீப்.

இப்படிச் சொல்லிவிட்டு விமலாவை நோக்கி, "உங்களுக்கும் அப்படித்தானே தோன்றுகிறது?" என்றான்.

விமலா கொஞ்சம் தயங்கினாள். பிறகு, "ஒரே இடத்தில் இருந்து வேலை செய்தாலும் ஊர் ஊராகச் சென்றாலும் இரண்டும் சரிதான் என்று நினைக்கிறேன். உங்களுக்கு எப்படிச் சம்மதமோ அப்படியே செய்யலாம்" என்றாள்.

"அப்படியானால் என் மனத்தில் இருப்பதைச் சொல்லிவிடுகிறேன். இதுவரையிலும் எனக்குச் சரியான உற்சாகம் கிளம்புவதற்கு வேண்டிய சாதனம் ஏற்படவில்லை. அதனால்தான் மற்றவர்களுக்கு உற்சாகத்தை ஊட்டி அதனின்றும் பலத்தைத் திரட்டிக்கொண்டு நான் சதா சுற்றி அலைந்துகொண்டிருக்கிறேன். இன்று நீங்கள் நாட்டுக்கு என்ன வேண்டும் என்பதைச் சொல்லிவிட்டீர்கள். எந்தப் புருஷனிடமும் இத்தகைய ஆவேசத்தை நான் கண்டதில்லை. உங்களிடமிருந்து கடன் வாங்கி நான் அந்த ஆவேச நெருப்பை நாட்டில் பரவச் செய்துவிடுவேன். இல்லை; நீங்கள் வெட்கப்பட வேண்டாம். இந்த அடக்கமும் பயமும் உங்களுக்கு எதற்கு? தேசத்தொண்டர்கள் சேர்ந்த இச்சிறு கூட்டத்தின் ராணி நீங்களே. அதற்கு வேண்டிய பலத்தையும் உற்சாகத்தையும் நீங்களே அளிக்கவேண்டும்" என்றான் ஸந்தீப்.

இதைக் கேட்டவுடன் பெருமை தாங்காமல் விமலாவின் முகம் சிவந்தது. தேநீரைக் கிண்ணங்களில் ஊற்றிக்கொண்டிருந்த அவள் கை நடுங்கியது.

மற்றொரு நாள் சந்திரநாத் பாபு என்னிடம் வந்து, "நீங்கள் இருவரும் சில காலம் தார்ஜீலிங் போய்வருவது தானே! உன் உடம்பு பார்க்க நன்றாயில்லையே! சரியாகத் தூங்குகிறாயா?" என்று கேட்டார்.

அன்று மாலை விமலாவை, "தார்ஜீலிங் போய்வரலாமா, விமலா?" என்று கேட்டேன்.

இமயமலையிலுள்ள காட்சிகளைப் பார்ப்பதில் அவளுக்குப் பேராவல் உண்டு என்பது எனக்குத் தெரியும். ஆயினும் அன்று அவள் போவதற்கு விரும்பவில்லை.

"இப்போது வேண்டாம். அப்புறம் பார்த்துக்கொள்ளலாம்" என்றாள்.

தேசத் தொண்டு பாழாகிவிடுமே என்ற சந்தேகம் அவளுக்கு.

ஆயினும் நான், நம்பிக்கையை இழந்துவிடவில்லை. பொறுமையே என் சுபாவம். குறுகிய பிரதேசத்தினின்றும் விரிவான உலகுக்குச் செல்லும் வழி அமைதியானதல்ல. இந்தச் சுயேச்சை அவளுக்கு நன்கு பழக்கமானவுடன்தான் எனக்கு ஏற்பட்ட இடம் எது என்பது விளங்கும். வெளியுலகின் விவகாரங்களுக்கும் எனக்கும் ஒத்துவரவில்லை என்று தெரிந்தால் அப்புறம் நம் அதிருஷ்டம் இவ்வளவுதான் என்று நினைத்து நான் பேசாமல் இருந்துவிடுவேன். வலுக்கட்டாயம் செய்வதா? எதற்காக? உண்மை, வலுக்கட்டாயத்துக்கு உட்பட்டுவிடுமா?

# ஸந்தீப்

“என் பங்குக்கு எது கிடைத்ததோ அதுதான் என்னுடையது” என்று கையாலாகாதவன் சொல்லுகிறுன். அதைச் சக்தியற்றவனும் ஒப்புக்கொள்ளுகிறுன். ஆனுல் உலகம் போதிக்கும் உண்மையோ, “எதைப் பிறரிடமிருந்து நான் அபகரிக்க முடியுமோ அதுதான் எனக்கு உண்மையாகச் சொந்தம்” என்பதுதான். நான் பிறந்த தேசம் என்பதற்காகத் தேசம் என்னுடையது ஆகிவிடுமா? எப்போது பலாத்காரமாக அதை நான் அபகரிக்கிறேனே அப்போதுதான் அது என்னுடையதாகும்.

தனக்கு என்ற இச்சை கொள்ள ஒவ்வொருவருக்கும் நியாயமான உரிமை உண்டு. ஆகவே பேராசையும் நியாயமானதுதான். இல்லை என்று அதனேடு திருப்தி அடைவது இயற்கைக்கு விரோதம். நான் விரும்பியது கிடைக்கும்படி பிறர் பார்த்துக்கொள்ள வேண்டும். உள்ளும் புறமும் வித்தியாசம் இல்லாமல் இருப்பதென்றுல் அதுதான். அழுத்தமாகப் பற்றிக்கொள்ளத் திறமையற்ற, இச்சைகள் பூர்த்தியாகாத, சோகை பிடித்தவர்கள் இருக்கிறுர்களே அவர்களுக்கு வேண்டுமாஞல் நல்லொழுக்க லக்ஷ்யங்கள் இருந்துவிட்டுப் போகட்டும். தம் முழு மனத்தோடும் இச்சித்து இச்சித்தவற்றைப் பெற்று அநுபவிக்கவேண்டும் என்ற ஆசையுடன் அவ்விஷயத்தில் பாவ புண்ணியங்களுக்கு அஞ்சாமல் இருப்பவர்களே இயற்கைத் தெய்வத்தின் தவப் புதல்வர்கள். இவர்களுக்காகவே அந்தத் தேவி தன் அரிய வளம் மிகுந்த நிதிகளைப் பரப்பிவைக்கிறுள். தங்களுக்கு வேண்டுவனவற்றை எடுத்துக்கொள்ளும் பொருட்டு ஆற்றில் நீந்திச் செல்வதோ சுவரேறிக் குதிப்பதோ கதவை உதைத்துத் திறந்துகொண்டு செல்வதோ எது செய்வதாயினும் அவர்கள் தயாராக இருக்கிறுர்கள். இப்படிப் பலாத்காரமாக அபகரிப்பதில்தான் உண்மையான ஆனந்தம் இருக்கிறது. இதில்தான் விலையுயர்ந்த அந்தப் பண்டங்களின் மதிப்பு இருக்கிறது.

இயற்கைத் தேவி தானே வசமாவது திருடனுக்குத் தான். இப்படித் தன்னைப் பலாத்காரம் செய்வதுதான் அவளுக்குச் சந்தோஷமாக இருக்கிறது. ஆகவே யாவற்றையும் துறந்த யதி இருக்கிறாரே, அவருடைய எலும்பெடுத்த கழுத்தில் அவள் தன் சுயம்வரமாலையை அணிவதில்லை. மணமுகூர்த்தம் நெருங்கிவிட்டது. அது தவறிவிடலாகாது என்று என் உள்ளம் துடித்துக்கொண்டிருக்கிறது. மணமகன் யார் என்று கேட்பீர்களோ? நான்தான்! சமயத்தில் கையில் தீபமேந்தி எவன் வருகிறானோ அவன் தான் மணமகன். இயற்கைத் தேவியின் மணப்பந்தலில் மணமகன் அழைப்பில்லாமல் திடீரென்றுதான் வருவான்.

வெட்கமா? எனக்கு எதற்கு வெட்கம்? எனக்கு வேண்டியதைத்தானே கேட்கிறேன்? எப்போதும் கேட்டுத்தான் எடுத்துக்கொள்வது என்னும் வழக்கம் என்னிடம் இல்லை. தைரியமற்றவர்கள் அடக்கத்தினால் தாங்கள் பேசாமல் இருப்பதாகக் கௌரவமாகச் சொல்லிக் கொள்ளுகிறார்கள். நாம் பிறந்த இவ்வுலகந்தான் உண்மையான உலகம். நல்ல சரக்குகள் விற்கும் சந்தைக்குச் சென்றவன் படாடோபமான சொற்களால் மட்டும் பையை நிரப்பிக்கொண்டு வெறும் கைகளோடும் வெறும் வயிற்றோடும் திரும்பினால் அப்படிப்பட்டவன் இந்தக் கஷ்டமான உலகில் எதற்காகப் பிறக்கிறான் என்றுதான் தோன்றுகிறது. நல்லொழுக்கத்தில் ரமித்துக்கொண்டிருப்பவர்கள் இப்பேர்வழிகளை, மணமும் உருவமும் அற்ற மலர்களையுடைய சிங்காரத் தோட்டத்தில் சீலத்தைப்பற்றிய அழகிய சூத்திரங்களை ஒரே மாதிரியான ராகத்திலே பாடுவதற்கென்று நியமித்தார்களோ என்னவோ! நான் அவ்வாறு பாடுபவன் அல்ல.

நான் எதையும் அரைகுறையாக இச்சிப்பதில்லை. நான் விரும்புவதை என் கை, கால், உடம்பு எல்லாவற்றாலும் தொட்டுப் பார்த்து அதை முற்றும் நானே அடைந்து அநுபவிக்கவேண்டும் என்று ஆசைப்படுகிறேன். ஒருவரும் படுக்காத மெத்தையில் அடைந்து கிடக்கும் வற்றிய மூட்டைப் பூச்சியைப்போல் இந்திரியக் கட்டுப்பாட்டினால் உடல் வாடி மெலிந்தவர்கள் எடுத்து ஓதுவதெல்லாம் என் செவிகளுக்கு ஏறாது.

நான் ஒன்றும் ஒளிக்கப் போவதில்லை. பயத்தினால் அவ்வாறு செய்வது கோழைத்தனம் அல்லவா ? ஆயினும் ஒளிக்கவேண்டிய சமயத்தில் ஒளிக்காமல் இருப்பதும் கோழைத்தனமே ஆகும். உன் பேராசைக்காக நீ உன்னைச் சுற்றிலும் சுவர்கள் எழுப்பிக்கொள்ளுகிறாய். என் பேராசைக்காக நான் அந்தச் சுவர்களை இடித்தெறிந்து உட்செல்லுகிறேன். நீ உன் அதிகாரத்தைச் செலுத்துகிறாய். நான் என் தந்திரத்தை உபயோகிக்கிறேன். இவைகள் தாம் வாழ்க்கையிலுள்ள தத்துவங்கள். ராஜ்யங்கள், சாம்ராஜ்யங்கள், மனிதர்களின் தீரச்செயல்கள் எல்லாம் இந்தத் தத்துவங்களையே பொறுத்தவையாக இருக்கின்றன.

சுவர்க்கத்தினின்றும் குதித்த அவதார புருஷர்கள் போல உயர்ந்த பேச்சுக்களைப் பேசிக்கொண்டு வருகிறார்களே, அவர்கள் சொற்கள் உண்மையல்ல. உலகம் அவர்களை எவ்வளவு கொண்டாடினாலும் கடைசியில் அவர்கள் வார்த்தைகளைப் பலமற்ற எளிய மனிதர்களே கேட்பார்கள். உலகை ஆளும் ஆண்மையோடு கூடியவர்கள் அவர்களைக் கண்டால் வெறுப்பார்கள். இதை நன்றாக அறிந்துகொண்டவர்களுக்குத்தான் வெற்றி ஏற்படும். அப்படியின்றிப் பாவம்! இயற்கை ஒரு புறமும் அவதார புருஷர்கள் மற்றொரு புறமும் இழுக்க அவதிப்படும் மக்கள் இருக்கிறார்களே, அவர்கள் உண்மையில் இவ்விரண்டின் நடுவில் அகப்பட்டுக்கொண்டு ஒரு வழியிலும் போக முடியாமல் தத்தளிப்பார்கள்.

அநேகர் சாவிலேயே ஒன்றிய மனத்துடன் பிறக்கிறார்கள். சூரியாஸ்தமனத்தைப்போல் இந்தச் சாவிலும் ஏதோ ஓர் அழகு இருக்கிறது. அது அவர்கள் உள்ளத்தைக் கவருகிறது. நிகில் இம்மாதிரி வாழ்க்கைதான் நடத்துகிறான். அதை வாழ்க்கை என்று எப்படிச் சொல்லுவது? பல வருஷங்களுக்கு முன் இந்த விஷயத்தைப் பற்றி நான் அவனுடன் வாதாடியிருக்கிறேன். "பலாத்காரம் இல்லாமல் நமக்கு ஒன்றும் கிடைக்காது என்று நீ கூறுவது உண்மைதான். ஆனாலும் அப்படிப் பலாத்காரமாகப் பற்றிக்கொள்வது ஒரு பெருமையா? துறப்பதில்

தான் உண்மையான பலம் இருக்கிறது என்று நான் நினைக்கிறேன். வியாபாரத்தின் பலம் முழுவதும் மூலதனத்தைச் செலவழிப்பதில்தான் இருக்கிறது'' என்று அவன் கூறியிருந்தான்.

''அப்படியானால் யாவற்றையும் துறப்பதில்தான் உனக்கு மோகமா?'' என்றேன்.

''முட்டை வெடித்து வெளிவருவதில் ஆவலாக இருக்கும் சிறு குஞ்சுபோல எனக்கும் துறப்பதில் மோகந்தான். முட்டைக்குள் இருப்பது எவ்வளவோ பத்திரந்தான். இருந்தாலும் கையில் பிடிபடாத காற்றையும் வெளிச்சத்தையும் விரும்பும் குஞ்சு அம்முட்டையை விட்டு வெளிவருகிறது. 'ஐயோ! இதற்காக முட்டையைத் துறக்கலாமா?' என்று நினைக்கிறாயா?'' என்றான் நிகில்.

இம்மாதிரி அலங்காரங்களில் நிகில் இறங்கிவிட்டால் அப்புறம் அவை வெறும் சொற்களேயொழிய உண்மையல்ல என்று அவனுக்கு விளங்கவைக்க முடியாது. நல்லது, அவன் அச்சொற்களிலேயே இன்பம் காணட்டும். நாங்கள் தாம் மாமிச பக்ஷிணிகள். எங்களுக்குப் பற்கள் நகங்கள் எல்லாம் இருக்கின்றன. அவைகளைக் கொண்டு அடித்துப் பிடுங்கிக்கொள்வோம். காலையில் மேய்ந்த புல்லை மாலையில் மெதுவாக அசைபோட்டுக் கொண்டிருப்பதில் எங்களுக்குத் திருப்தி இல்லை. எப்படி இருந்தாலும் அலங்காரமாகப் பேசும் இவர்கள் எங்கள் பிழைப்பைக் கெடுக்கும்படி விடமாட்டோம். அப்போது திருடவோ கொள்ளையடிக்கவோ வேண்டியதுதான்; நாங்கள் பிழைக்கவேண்டுமே!

உலகில் செய்கை ஒன்றாக இருந்தாலும் பேச்சு வேறாக இருப்பதனால் நான் நூதனமாக ஏதோ ஒரு சித்தாந்தத்தைக் கிளப்புகிறேன் என்று ஜனங்கள் சொல்லுவார்கள். அதனால்தான் அவர்களுக்கு என் கொள்கை சரியானது என்று தோன்றவில்லை. எனக்கு மட்டும் அது பயனற்ற வெறும் கொள்கை அல்ல என்று தெரியும். ஏனெனில் அதுதான் வாழ்க்கைக்கு ஒட்டிவரக் கூடியது என்பது தெளிவாகிவிட்டதே. பெண்கள் இந்தச் சத்திய

மான உலகத்தைச் சேர்ந்தவர்கள். ஆடவர்களைப் போல, எண்ணங்களையே பெரிதாகக் கொண்டு அவர்கள் மேக மண்டலத்தில் சஞ்சரிப்பவர்கள் அல்ல. நான் அநுசரிக்கும் முறைதான் அவர்களுக்கு எப்போதும் பிரியமாக இருக்கிறது.

மங்கையர் என் பேச்சிலும் நடை உடை பாவனைகளிலும் யாவற்றையும் மீறிக்கொண்டு கிளம்பும் ஓர் ஆவேசத்தைக் காண்கிறார்கள். அது துறவற உணர்ச்சியால் வலியிழந்து, சந்தேகத்துக்கும் வாதத்துக்கும் உட்பட்டதாக இராமல் எதற்கும் மேற்பட்டு நிற்கும் ஆவேசமாகும். ஹோவென்று பெருவெள்ளம்போல் பெருகி, 'எனக்கு வேண்டும், எனக்கு வேண்டும்' என்று கூக்குரலுடன் அது கரைபுரண்டு செல்கிறது. எதிர்க்க முடியாத இந்த ஆவேச உணர்ச்சிதான் உலகின் ஜீவாதாரம். அதற்குமுன் வேறு எதுவும் நிற்க முடியாது. ஆகவே அது வெற்றிகொள்கிறது என்பதை மாதர்கள் உள்ளூற அறிந்துகொண் டிருக்கிறார்கள். இதனால்தான் அவர்கள் எவ்வளவோ முறை சாவு, வாழ்வு என்றுகூட எண்ணாமல் என்னுடைய இந்த ஆவேசப் பெருக்கில் அகப்பட்டு அடித்துச் செல்லப்படும் நிலைமையை அடைகிறார்கள். பெண்மணிகளை வெற்றிகொள்ளும் இந்தச் சக்திதான் மகாவீரர்களின் சக்தி. இம்மையிலும் அதுதான் வெற்றி கொள்கிறது.

மறுமையைப்பற்றி உயர்வாக நினைப்பவர்கள் கேவலம் தம் இச்சைகளை இவ்வுலகை விட்டு வானுலகுக்கு ஏற்றுகிறார்கள்; அவ்வளவுதான். எவ்வளவு நேரம் வரையில் எவ்வளவு உயரந்தான் அவை மேல் எழும்புகின்றன என்பதைப் பார்க்கவேண்டும். ஆனால் இதுமட்டும் நிச்சயம். உயர்ந்த லக்ஷ்யங்களைப் போற்றிக்கொண்டு வலியற்றுக் கிடக்கும் இந்தப் பலவீனர்களுக்காக ஸ்திரீகள் சிருஷ்டிக்கப்படவில்லை!

'பொருத்த'த்தைப்பற்றியோ?—அவசியமாக இருக்கும்போது கடவுள் பிரத்தியேகமான ஸ்திரீ புருஷர்களின் ஜோடிகளைச் சிருஷ்டிப்பது உண்டு; அவர்கள் சேர்க்கைதான் சட்டப்படி ஏற்பட்ட சேர்க்கை எல்லா

வற்றையும்விட அதிக நியாயமானது என்று நான் அநேகம் தடவை சொல்லியிருக்கிறேன். ஏனென்றால் மனிதன் இயற்கைப்படி நடக்க விரும்பினாலும் அதை எப்படியாவது மறைத்துச் சொன்னாலொழிய அவனுக்குத் திருப்தி ஏற்படுவதில்லை. இந்தக் காரணத்தால்தான் உலகம் இவ்வாறு பொய்மயமாக இருக்கிறது.

'பொருத்தமா?' ஒருவரோடு மட்டுந்தான் ஏன் பொருத்தம் இருக்கவேண்டும்? ஆயிரம் பேர்களுடன் இருக்கலாம் அல்லவா? எவ்வளவோ பேர்களுடன் எனக்கு இசைவு இருந்தாலும் ஒருவரிடம் மட்டும் நான் அதைப் பாராட்டக்கூடாது என்பது ஒரு நாளும் எனக்கு நியாயமாகத் தோன்றவில்லை. என் வாழ்க்கையில் இது வரையிலும் எனக்கு ஏற்றவர்களான எவ்வளவோ பேர் களை நான் கண்டுவிட்டேன். ஆனாலும் அதற்காக இன் னும் ஒருவரை வரவேற்காமல் இருப்பானேன்? அது யார் என்பதில் சந்தேகம் இல்லை. எனக்கும் அவளுக்கும் உள்ள பொருத்தத்தை அவளும் அறிந்துகொண் டிருக்கி றாள். பிறகு? அதற்குப் பிறகும் வெற்றியடையா விட்டால் நான்தான் கோழை என்று சொல்லவேண்டும்.

# விமலா

என் வெட்கம், மானம் யாவும் எங்கே போயின என்று தெரியவில்லை. உண்மையில் என்னைப்பற்றி நினைப்பதற்கே எனக்குப் பொழுதில்லையே. நாட்களோ பெருஞ்சுழல்போல் வெகு விரைவாகச் சென்றுகொண்டிருந்தன. அந்தச் சுழலில் நான் அகப்பட்டுக்கொண்டிருந்தேன். தயக்கமோ சந்தேகமோ, கொள்வதற்கு இடம் இருந்தால்தானே!

ஒரு நாள் என் சிறிய ஓர்ப்படி என் கணவரிடம், "இதுவரையிலும் இவ்வீட்டில் ஸ்திரீகள் கண்ணீர் விட்டுக்கொண்டிருந்தார்கள். இனிமேல் புருஷர்களின் முறை" என்றாள்.

"அவர்கள் மட்டும் கண்ணீர் விடாமல் இருப்பானேன்? சின்ன ராணி! அதற்கு நீ கச்சை கட்டிக்கொண்டு கிளம்பியிருக்கிறாய். உன் அம்புகளை அவர்கள் மார்பைக் குறிவைத்து எய்துவிடு அம்மா!" என்றாள் தொடர்ந்து என்னை நோக்கி.

அவள் கூர்மையான கண்கள் என்னை ஏற இறங்கப் பார்த்தன. என் புடைவையோ அலங்காரமோ பேச்சோ மாதிரியோ ஒன்றும் அவள் பார்வையை மீறவில்லை. இன்று எனக்குச் சொல்லுவதற்கு வெட்கமாக இருக்கிறது. எனக்கு அப்போது ஒன்றும் தோன்றவில்லை. என்னை அறியாமல் ஏதோ ஒன்று எனக்குள் வேலை செய்துகொண்டிருந்தது. நான் அளவுக்கு மிஞ்சி அலங்காரம் செய்துகொண்டிருந்தது உண்மையே. ஆனாலும் கவனித்து நான் ஒன்றும் செய்துகொள்ளவில்லை. எப்படி அலங்கரித்துக்கொண்டால் ஸந்தீப் பாபுவுக்குப் பிடிக்கும் என்பது எனக்குத் தெரியும். எல்லோர் முன்னிலையிலும் அவர் தாராளமாக அதைப்பற்றிப் பேசுவதால் நானே அதை ஊகித்து அறிந்துகொள்ள வேண்டிய சிரமம் இல்லை.

ஒரு நாள் அவர் என் கணவரிடம், "நிகில், நம்முடைய ராணியை முதல்முதல் நான் பார்த்தபோது ஜரிகைக்கரை போட்ட புடைவையை உடுத்துக்கொண்டு எவ்வளவு அடக்க ஒடுக்கமாக உட்கார்ந்திருந்தாள், தெரியுமா? அவளைப் பார்த்தால் எவ்வளவோ யுகங்களாக இருளில் எதையோ தேடிக்கொண்டு இருப்பவள் போல் தோன்றிற்று. வழி தவறிப்போன இரு நக்ஷத்திரங்கள்போல் அவள் கண்கள் வெட்டவெளியை உற்று நோக்கிக்கொண் டிருந்தன. ஆனாலும் அவளை நோக்கியவுடன் என் மெய் சிலிர்த்தது. அவள் புடைவையின் ஜரிகைக்கரை அவளது உள்ளிருக்கும் ஆவேசக் கனலே கொழுந்துவிட்டு அவளைச் சுற்றிலும் எரிந்துகொண் டிருப்பதுபோல் எனக்குத் தோன்றிற்று. அத்தகைய கனல் தான் நமக்கு வேண்டும், ராணி! எங்களுக்காக நீங்கள் மறுபடியும் உயிருள்ள கனல்போல் விளங்கும்படி அலங்கரித்துக்கொள்ள வேண்டும்" என்றார்.

இதுவரையிலும் நான் கிராமத்தின் எல்லையில் ஓடிக்கொண்டிருந்த சிறு ஆறுபோல் இருந்தேன். என் பேச்சும் பாவனையும் அப்போது முற்றும் வேறாக இருந்தன. ஆயினும் பொங்கிய கடலினின்றும் அந்தச் சிறு ஆற்றில் வெள்ளம் பெருகவே அது கரை புரண்டு ஓடிற்று. சமுத்திர அலைகளின் கொந்தளிப்பும் வேகமும் இந்தச் சிறு வெள்ளத்திலும் பிரதிபலித்தன. அந்தச் சிற்றாறு போன்ற நான் என் ரத்தத்தில் பாய்ந்த அந்தக் கொந்தளிப்பின் வேகத்தை முழுவதும் அறியவில்லை. என் பழைய இயல்பு எங்கே போயிற்று? புகழிலுள்ள இந்தப் பைத்தியம் எங்கிருந்து இப்படி ஒரு பெரும் அலைபோல வந்து என்னை மோதியிருக்கிறது? ஸந்தீபின் ஆவல் குடிகொண்ட இரு கண்களும் என் சந்நிதியில் ஏற்றி வைத்த இரு தீபங்கள்போல் ஒளிர்ந்தன. சக்தியிலும் சௌந்தரியத்திலும் நான் இணையற்ற ஓர் அற்புத சிருஷ்டி என்று கூறுவதுபோல் இருந்தது, அவர் பார்க்கும் பார்வை. அவர் செய்யும் பலமான துதியில் மற்றவர்கள் குரல்களெல்லாம் அமிழ்ந்துபோயின.

என்னை நான்முகன் மீண்டும் புதிதாகப் படைத்தானோ என்று நான் ஆச்சரியமுற்றேன். இவ்வளவு கால

மாக என்னை அசட்டை செய்ததற்காகச் சேர்த்துவைத்து இப்போது அவன் என்னைக் கவனிக்க விரும்பினனே என்னவோ? சாதாரணத் தோற்றமுடைய நான் திடீரென்று கட்டழகி ஆகிவிட்டேன். யாருக்கும் பொருட்டில்லாதிருந்த நான் இருந்தாற்போல் வங்காளத்தின் பெருமை முழுவதும் என்னிடமே குடிகொண் டிருப்பதாக எண்ணினேன். ஸந்திப் பாபு கேவலம் ஒரு தனி மனிதர் அல்ல; அவரிடம் நாட்டின் லக்ஷக்கணக்கான மூளைகள் ஒருங்கே சேர்ந்திருந்தன. அவர் என்னைத் தங்கள் கூட்டத்தின் ராணி என்று அழைக்கும்போது •மற்றத் தேசத் தொண்டர்கள் அனைவரும் அவ்விதமே கொண்டாடத் தலைப்பட்டனர். அதற்குப் பிறகு என் பெரிய ஓரகத்தி பேசாமலே காட்டிய அவமானமும், சிறிய ஓரகத்தி வெளிப்படையாகச் செய்த பரிகாசங்களும் என்னைச் சிறிதும் பாதிக்கவே இல்லை. இப்போது என் நிலைமையே முற்றும் மாறிவிட்டது. நாட்டுக்கு என் உதவி எவ்வளவு அவசியம் என்பதை ஸந்திப் எடுத்துக்காட்டினர். எனக்கே அதைப் பற்றி அப்போது ஒரு சந்தேகமும் தோன்றவில்லை. எதையும் என்னால் செய்ய முடியும்போல் தோன்றிற்று.

ஒரு தெய்விக சக்தி எனக்கு வாய்த்திருந்தது. அது எவ்விதமான சக்தி என்று ஆராய்ந்து பார்த்துத் தெரிந்து கொள்வதற்குக்கூட எனக்கு அவகாசம் இல்லை. எனக்கும் மேற்பட்ட அந்தத் தெய்விக சக்தியில் வங்காளம் முழுவதுமே அடங்கிவிடுவதாக இருந்தது.

ஸந்திப் பாபு அற்ப விஷயத்தைக்கூட என்னிடம் கலந்துகொண்டுதான் செய்வார். முதலில் சங்கோசத்துடன் நான் சற்றுப் பின்னடைந்தேன். ஆனால் சீக்கிரமே அந்தச் சங்கோசம் போய்விட்டது. நான் என்ன யோசனை கூறினலும் அவர் ஒரே வியப்பும் மகிழ்ச்சியும் கொண்டு, "புருஷர்களால் யோசிக்கத்தான் முடியும். நீங்களோ யோசிக்காமலே எப்படியோ புரிந்துகொள்கிறீர்கள். பெண்மணிகள் கடவுளின் மனேவிலாசத்தினின்றும் அப்படியே தோன்றியவர்கள். ஆடவர்களோ சம்மட்டியால் அடித்து இந்த வடிவத்துக்குக் கொண்டுவரப்பட்டவர்கள்" என்பார்.

பல இடங்களிலிருந்து தமக்கு வந்த கடிதங்கள் எல்லாவற்றையும் படித்து அபிப்பிராயம் கூறுவதற்காக என்னிடம் கொடுத்துவிடுவார். எப்போதாவது அபூர்வமாகத்தான் அவர் அபிப்பிராயம் வேருக இருக்கும். ஆனல் அதற்காக அவருடன் நான் வாதாடமாட்டேன். இரண்டொரு நாளைக்குப் பிறகு திடீரென்று ஏதோ ஞாேனோதயம் பெற்றவர்போல் என்னைக் கூப்பிட்டு அனுப்பி, "நான் கூறியது தவறு. உங்கள் யோசனைதான் சரி" என்று ஒப்புக்கொள்வார். எப்போது நான் கூறியதற்கு விரோதமாக நடந்தாலும் அது தவருகவே முடிகிறது என்று சொல்லுவார். ஆகவே நாளடைவில் தேசத்துக்காக எந்தக் காரியம் நடந்தாலும் அதன் கர்த்தா ஸந்தீப் பாபு என்றும், அவருக்கும் மேல் ஒரு ஸ்திரீயின் இயல்பான அறிவு நின்று வேலை செய்ததென்றும் எனக்கு நம்பிக்கை ஏற்பட்டுவிட்டது. எனக்கு வாய்த்த பெரும் பொறுப்பைப்பற்றி நான் கொண்ட பெருமை கொஞ்சநஞ்சம் அல்ல.

தேசத்தின் விஷயமாக நாங்கள் கலந்து யோசிக்கும் போது என் கணவர் அதில் சேருவதில்லை. ஸந்தீப் பாபு அவரைத் தம்பிபோல நடத்தலானர். தம்பிமேல் வாஞ்சை அதிகமாக இருந்தாலும் காரியங்களில் யோசனை கூறுவதற்கு வேண்டிய திறமை போதாமல் இருக்கலாம் அல்லவா? என் கணவரைப்பற்றி, "குழந்தைபோல் ஒன்றும் அறியாதவன்" என்று அன்போடு கூறுவதுடன், அவருடைய நூதனமான கொள்கையிலும் விபரீதமான மனப்போக்கிலுங்கூட நகைச்சுவைக்கு இடம் இருந்ததால் அவை பிடிக்கும்படியாகவே இருந்தன என்றும் சொல்லுவார். என் கணவர்மீது இருந்த அளவற்ற பிரியத்தினல்தான் அவர் தேசத்தொண்டை ஏற்றுக்கொள்ளும்படி செய்யத் தாம் காரணமாக இருப்பது ஸந்தீப் பாபுவுக்கு மனம் இல்லாமல் இருந்ததாம்.

இயற்கையாகிய ஔஷதாலயத்தில் மயக்க மருந்துகள் எவ்வளவோ இருக்கின்றன. மிக நெருங்கிய உறவு முறையில் பெரும் பிளவு ஏற்பட்டால் அப்போது அவள் அம்மருந்தைப் பிரயோகித்துச் சஸ்திர சிகிச்சை செய்வாள்.

கடைசியில் பிரக்ஞை தெளிந்து பார்க்கும்போதுதான் எவ்வளவு பெரிய பிளவு ஏற்பட்டிருந்தது என்பது தெரிய வரும். என் வாழ்க்கையின் அரும்பெரும் பிணைப்பு ஒன்றில் சஸ்திர சிகிச்சை நடந்துகொண்டிருந்தபோது மயக்கத்தைத் தரும் மருந்தை மோந்து ஒன்றும் அறியாமல் நான் நினைவிழந்திருந்தேன். ஸ்திரீகளின் இயல்பே இதுதானோ! கட்டுக்கு அடங்காத வேட்கை பிறக்கும்போது அவள் மற்ற எல்லா உணர்ச்சிகளையும் இழந்துவிடுகிறாள். ஆற்றில் வெள்ளம் பெருகினால் கரை செழித்து வளம் பெறுகிறது. அந்த வெள்ளமே பொங்கி வந்தால் அந்தக் கரையை உடைத்து அப்படியே அழித்து நாசமாக்கிவிடும் அல்லவா? அதைப்போலத்தான் ஸ்திரீகளாகிய நாங்களும்.

# ஸந்தீப்

ஏதோ கலவரம் நடக்கப்போகிறது என்று தெரிகிறது. எனக்கு அன்றுதான் அதைப்பற்றிச் சந்தேகம் உதித்தது.

நான் வந்தது முதல் நிகிலேசனின் அறை அவனுடையதாகவும் இல்லாமல் விமலாவினுடையதாகவும் இல்லாமல் இருவருக்கும் பொதுவாகிவிட்டது. அந்தப்புரத்தில் இருந்தபடியே விமலா அங்கே வருவதற்கு மார்க்கம் இருந்தது. வாயிற் பக்கமாக உள்ளே வருவதற்கு எனக்கு வேறு வழி உண்டு. நாங்கள் கொஞ்சம் நிதானமாக அடக்கத்துடன் எங்களுக்கு வாய்ந்த செளகரியங்களை உபயோகப்படுத்தியிருந்தால் பிறர் பேச்சுக்கு இடமில்லாமல் இருந்திருக்கும். நாங்களோ தலைகால் தெரியாத நிலையில் இருந்ததனால் ஒன்றையும் யோசிக்கவில்லை.

விமலா நிகிலின் அறைக்கு வருவது என் அறையில் இருந்தபடியே எப்படியோ எனக்குத் தெரிந்துவிடுகிறது. வளைகள் குலுங்குவது முதலிய சிறு ஓசைகள் அவள் வரவைத் தெரிவித்துவிடும். வேண்டுமென்றே கதவைக் கொஞ்சம் வேகமாகச் சாத்துவது, புஸ்தக அலமாரியை இழுத்துத் திறப்பது இவை போன்ற சப்தங்களினால் நான் அறிந்துகொள்வேன். நான் உள்ளே போகும்போது ராணி அலமாரியிலிருந்து ஏதோ புஸ்தகத்தைத் தேடி எடுப்பதில் முனைந்திருப்பாள். நான் எடுத்துத் தருவதாகச் சொன்னால் அவள் திடுக்கிட்டுத் திரும்பி, 'வேண்டாம்' என்று சொல்வாள். பிறகு நாங்கள் சகஜமாக வேறு பேச்சுக்களில் இறங்கிவிடுவோம்.

ஒரு நாள் வியாழக்கிழமை; அன்று ஏதோ கெட்ட நாளாக இருந்திருக்கவேண்டும். விமலா அறைக்குள் வந்த ஓசையைக் கேட்டு நான் அங்கே போவதற்குக் கிளம்பினேன். வழியில் ஓர் ஆள் நின்றுகொண்டிருந்தான். அவனைக் கவனியாமல் கதவருகே சென்றதும் அவன்

என்னை மறித்து, "ஐயா, உள்ளே போகக்கூடாது" என்ருன்.

"போகக்கூடாதா? ஏன்?" என்றேன்.

"ராணி அம்மா உள்ளே இருக்காங்க" என்ருன்.

"சரிதான், போய் ராணி அம்மாவிடம் ஸந்திப்பாபு பார்க்க விரும்புவதாகச் சொல்லு" என்றேன்.

"முடியாதே! உத்தரவு இல்லீங்களே!" என்ருன்.

எனக்குக் கோபம் மூண்டது. "போய் நான் வந்திருப்பதாகச் சொல், உடனே" என்றேன் உரத்த குரலில்.

என் குரலைக் கேட்டு அவன் சற்றுப் பயந்துவிட்டான். இதற்குள் நான் கதவருகே சென்று திறக்க முயன்றதும் அவன் தொடர்ந்து வந்து என் கையைப் பிடித்துக் கொண்டு, "வேண்டாம், போகாதீங்க" என்ருன்.

ஒரு வேலையாள் என் கையைப் பிடிப்பதா? என் கையை இழுத்துக்கொண்டு அவன் கன்னத்தில் ஓர் அறை விட்டேன். இந்தச் சமயத்தில்தான் விமலா வெளியே வந்தாள். ஒரு வேலையாள் என்னை அவமதிப்பதைப் பார்த்துவிட்டாள்.

அவளுக்கு வந்த கோபத்தை அப்போது பார்க்க வேண்டுமே! ராணி அழகி என்பதை நான்தான் கண்டு பிடித்தவன். அநேகம் பேர் அவள் தோற்றம் மிகவும் சாதாரணம் என்றுதான் சொல்வார்கள். அவளுடைய உயரமான மெலிந்த உருவத்தை, 'எலும்பெடுத்த தேகம்' என்று கூறிவிடுவார்கள். நான்முகன் உள்ளத்தினின்றும் நேராக அப்படியே மேல் எழும்பிய ஜீவதாரைபோல விளங்கும் அவளது இந்தப் பசுமையான மெலிந்த உருவத்தின் அழகைத்தான் நான் கண்டு வியக்கிறேன். அவள் மேனி கறுப்புத்தான் என்ருலும் அது பளபளவென்று பிரகாசித்தது.

அவள் படியில் நின்று விரலை நீட்டி, "நங்கூ, போ இவ்விடமிருந்து" என்று கட்டளையிட்டாள்.

"அவனைக் கோபிக்கக்கூடாது. உத்தரவு இல்லை என்ருல் நான்தானே பேசாமல் போகவேண்டும்?" என்றேன்.

"அதெல்லாம் இல்லை; உள்ளே வாருங்கள" என்றாள் ராணி; அவள் குரல் நடுங்கிக்கொண் டிருந்தது.

அது வேண்டுகோளாக இல்லாமல் கட்டளையாகவே இருக்கவே நான் உள்ளே சென்று மேஜைமேல் இருந்த விசிறியை எடுத்து விசிறிக்கொண்டே நாற்காலியில் உட்கார்ந்துகொண்டேன். ராணி ஒரு காகிதத் துண்டில் சில வரிகள் எழுதி ஓர் ஆளைக் கூப்பிட்டு, "இதை ஐயாவிடம் கொண்டுபோய்க் கொடு" என்றாள்.

"கொஞ்சம் பொறுங்கள்; நான்தான் கோபம் தாங்காமல் அந்த ஆளை அடித்தேன்" என்றேன்.

"அவனுக்கு வேண்டியதுதான்!"

"அவன்மேல் பிசகு ஒன்றும் இல்லையே! கட்டளைப் படிதானே அவன் நடந்தான்!"

அச்சமயம் நிகில் உள்ளே வரவும் நான் வேகமாக எழுந்து ஜன்னலருகே சென்று நின்றுகொண்டேன்.

"காவற்காரன் நங்கூ ஸந்தீப் பாபுவை ரொம்ப அவமதித்துவிட்டான்" என்று ராணி நிகிலிடம் கூறினாள்.

அதைக் கேட்டு நிகில், ஒன்றுமே அறியாதவன் போல் ஆச்சரியத்தோடு, "ஏன்?" என்று கேட்டான். அதைக் கண்டு என்னால் சும்மா இருக்க முடியவில்லை. நானும் திரும்பி அவனை விழித்துப் பார்த்தேன். எவ்வளவு நல்லவனாக இருந்தாலும் மனைவி கெட்டிக்காரியாக இருந்தால் அவள்முன் தான் உண்மையாக நடக்கும் பெருமையைக் காப்பாற்றிக்கொள்ள முடியாதவனாகி விடுவான்.

"ஸந்தீப் பாபுவை அவன் அலக்ஷ்யமாக உள்ளே விட மறுத்துவிட்டான். கேட்டால், 'அப்படித்தான் உத்தரவு' என்றான்" என்றாள் ராணி.

"யார் அப்படி உத்தரவிட்டது?" என்று நிகில் கேட்டான்.

"எனக்கு எப்படித் தெரியும்?" என்றாள் ராணி கோபமும் அவமானமும் தாங்காதவளாக.

நிகில் அந்த ஆளைக் கூப்பிட்டு விசாரித்தான்.

"நான் ஒன்றும் தப்புச் செய்யவில்லை, எசமான்! எனக்கு அப்படித்தான் உத்தரவு" என்று அந்த மனிதன் மீண்டும் ஒரே பாட்டைப் பாடினான்.

"யார் அப்படி உத்தரவிட்டார்கள்?"

"பெரிய ராணி அம்மாவும் நடு ராணி அம்மாவும் என்னைக் கூப்பிட்டுச் சொன்னாங்க."

எல்லோரும் சற்று நேரம் மௌனமாக இருந்தோம். அந்த ஆள் போன பிறகு, "நங்கூ இனிமேல் இங்கே வேலை செய்ய முடியாது" என்றாள் ராணி.

நிகில் ஒன்றும் பேசவில்லை. அப்படிச் செய்வது அவனுக்கு நியாயமாகத் தோன்றவில்லை என்று தெரிந்தது. அவனது நியாய உணர்ச்சிக்கு எல்லையே இல்லை. ஆனால் இப்போது அவனுக்கு மிகவும் தர்மசங்கடமான நிலை ஏற்பட்டது. ராணியும் சாமான்யப்பட்டவள் அல்ல. இந்த ஆளைத் தண்டிப்பதனால் தன் ஓர்ப்படிகளுக்கு மனஸ்தாபம் ஏற்படும் என்பது அவளுக்குத் தெரியும்.

நிகில் மௌனமாகவே இருந்தான். அதைக் காண அவள் கண்களில் கோபப்பொறி பறந்தது. கணவனின் தைரியக் குறைவை எவ்விதமாக இகழ்ந்து பேசுவது என்றுகூட அவளுக்குத் தெரியவில்லை. ஒரு வார்த்தையும் பேசாமல் சிறிது நேரத்துக்கெல்லாம் நிகில் அவ்விடம் விட்டுப் போய்விட்டான்.

மறுநாள் நங்கூவைக் காணவில்லை. விசாரித்ததில் அவன் ஜமீனில் வேறோர் இடத்தில் வேலைக்கு அனுப்பப்பட்டிருக்கிறான் என்பதும், அதனால் அவனுக்குச் சம்பளம் குறையவில்லை என்பதும் தெரியவந்தன.

திரைக்குப் பின் இவ்விஷயமாக அடித்த கடும் புயலினால் விளைந்த சேதங்கள் என்ன என்பதை நான் ஒருவாறு அறிந்துகொண்டேன். நிகில் ஒரு புதுமையான மனிதன். அவனைப்போல யாரும் இருப்பது அரிது.

இந்தச் சம்பவத்தின் பயனாக, தந்திரமாக ஏற்பாடு செய்தோ தற்செயலாக நேர்ந்ததாகவோ காட்

டிக்கொள்ளாமல், ராணி என்னைப் பேசுவதற்கென்று சாதாரணமாகவே கூப்பிட்டனுப்பத் தொடங்கினாள். ஆகவே இங்கிதங்களிலிருந்து வெளிப்படையான சங்கேதங்களுக்கே நாங்கள் வந்துவிட்டோம். அநுமானிப்பதெல்லாம் போய்விட்டது. ஒரு ராஜ குடும்பத்தில் வாழ்க்கைப்பட்ட பெண், எங்கேயோ நக்ஷத்திர மண்டலத்தில் இருப்பது போன்றவள், அவளைச் சாதாரண மனிதன் அணுகுவதற்கு ஒழுங்கான பாதைதான் உண்டா? உண்மை அல்லவா நாளடைவில் மூட வழக்கங்களாகிய திரைகளை ஒவ்வொன்றாகத் தள்ளி முடிவில் இயற்கை அப்படியே வெளியாகும்படி செய்திருக்கிறது!

உண்மையா? ஆம், அதுதான் உண்மை. ஸ்திரீ புருஷர்கள் ஒருவரை ஒருவர் கண்டு விரும்புவது உலகம் தோன்றின நாள் முதல் ஏற்பட்ட உண்மை. தூணிலிருந்து துரும்பு வரையில் உலகில் எல்லாம் அந்த ஆகர்ஷண சக்திக்கு உட்பட்டவை. ஆயினும் புருஷர்கள் சொற்களாகிய மெல்லிய துணியினால் அதை ஒருவரும் பாராமல் மறைத்து வைக்கிறார்கள். 'இது செய்யலாம், செய்யக் கூடாது' என்ற விதிகளைத் தாமே ஏற்படுத்திக்கொண்டு அதைச் சாதாரணமாக வீட்டுக்கு உபயோகமாகச் செய்து விடுகிறார்கள். என்ன வேடிக்கை! சூரிய மண்டலத்தையே உருக்கி மாப்பிள்ளையின் கடிகாரத்துக்குச் சங்கிலி செய்து கொடுப்பதுபோல் அல்லவா இருக்கிறது அவர்கள் செயல்!

லோக தத்துவத்துக்கு உட்பட்டு இயற்கையானது யாவற்றையும் மீறிக்கொண்டு கிளம்பும்போது என்ன நிந்தை! என்ன கூக்குரல்! எங்கேயாவது கடும்புயலுடன் எதிர்த்துச் சண்டையிட முடியுமா? ஓர் ஆட்டு ஆட்டி வைப்பதை விட்டு வேறு பதில் சொல்லவேண்டிய சிரமம் அதற்கு ஏன்?

இந்த உண்மை கொஞ்சம் கொஞ்சமாக வெளியாவதைப் பார்த்து நான் களித்துக்கொண் டிருக்கிறேன். இந்த முகத்தைத் திருப்பலும் தயங்கிய நடையும் எனக்கு மிகவும் இனிமையாகத் தோன்றுகின்றன. மற்றவர்களுடன் ராணியையும் ஏமாற்றும் சிறு தந்திரங்களை நினைக்க நினைக்க மகிழ்வு உண்டாகிறது. உண்மை பொய்யை

எதிர்க்கும் போது வஞ்சகந்தான் முக்கிய ஆயுதமாக விளங்குகிறது. ஏனெனில் உண்மையின் விரோதிகள் அதை அற்பம் என்று இகழ்ந்து அவமானப்படுத்த முயலும்போது அது எங்கேயாவது ஒளிந்துகொள்வதோ வேஷம் மாறிக்கொள்வதோ ஏதாவது ஒன்று செய்யவேண்டியதுதான் அல்லவா? "நான் உண்மை. ஆகையால்தான் அற்பமாக விளங்குகிறேன். மானமற்ற கொடிய உடலின் வேட்கைதான் நான்" என்று வெளிப்படையாக ஒப்புக்கொள்ள அதற்குத் தைரியம் இல்லை.

எனக்கு எல்லாம் இப்போது வெட்டவெளிச்சம் ஆகிவிட்டது. பெரிய ஆபத்து நேருவதற்கு வேண்டிய ஏற்பாடுகள் திரைக்குப் பின் ஆயத்தமாவதைக் காண்கிறேன். அவள் அடர்ந்த கூந்தலைக் கட்டியிருக்கும் சிவப்புப் பட்டு ரிப்பன், உள்ளூற இருக்கும் ஆசைதான் அவ்வாறு தோன்றுகிறதோ என்று ஐயுறும்படியும் கடும்புயலில் தோன்றும் இருளிடையே மேகத்தின் நீட்டிய செந்நாக்குப் போலவும் விளங்குகிறது. அவள் புடைவையினின்றும் அலங்காரத்தினின்றும் அவளுக்கே தெரியாத எவ்வளவோ இங்கிதங்களை நான் அறிந்துகொள்கிறேன்.

உண்மையை எல்லோரும் சைத்தானைக் கருதியதால் ராணி அதைப்பற்றி வெட்கமடைந்து ஒன்றும் உணர்ந்து கொள்ளாமலே இருந்தாள். ஆகவே சைத்தான் பாம்பு உருவம் கொண்டு கடவுளின் நந்தவனத்தில் திருட்டுத்தனமாக நுழைந்து ரகசியமாக ஏதோ சொல்லிக் காதலியைக் கிளப்பவேண்டி இருக்கிறது. அப்புறம் நிம்மதி எங்கே? அதற்குப் பின் சாவுதான்.

பாவம்! ராணி கனவுலகில் சஞ்சரித்துக்கொண்டிருக்கிறாள். எந்த வழி போகிறோம் என்றுகூட அவளுக்குத் தெரியாது. உரிய காலம் வருவதற்குமுன் அவளை விழிக்கச் செய்தால் காரியம் கெட்டுவிடும். நானும் ஒன்றும் அறியாதவன்போல் இருப்பதுதான் சரி.

அன்று ஒரு நாள் சாப்பிடும்போது அவள் என்னை ஏதோ ஒருவிதமாக நோக்கிக்கொண்டிருந்தாள். அந்தப் பார்வை எவ்விதமாகப் படும் என்பதை அவள் அறிந்து

கொள்ளவில்லை. என் கண்களுடன் அவள் கண்கள் ஒன்று பட்டதும் அவள் முகம் சிவந்தது; வேறு பக்கம் திரும்பினாள்.

"என் பசியைப் பார்க்க ஆச்சரியமாக இருக்கிறதா? எதை வேண்டுமானாலும் நான் அடக்கிக்கொள்வேன். பசியை மட்டும் என்னால் அடக்க முடியாது. எனக்காக வெட்கப்பட்டுப் பிரயோஜனம் இல்லை. நான்தான் வெட்க மற்றவனாயிற்றே!" என்றேன்.

இதனால் அவள் முகம் பின்னும் சிவந்தது; வெட்கம் அதிகமாயிற்று.

"இல்லை; இல்லை; நான் ஒன்றும்..." என்று அவள் தடுமாறிக் கூறினாள்.

"நன்றாகச் சாப்பிடுகிறவர்களைக் கண்டால் ஸ்திரீக ளுக்கு எப்போதும் பிடிக்கும்; எனக்குத் தெரியும். இந்தப் பசிதான் புருஷர்களை ஸ்திரீகளுக்கு உட்படும்படி செய்துவிடுகிறது. இந்தப் பசியைப் பெண்கள் மேன் மேலும் வளர்க்கவேதான் நான் பின்னும் வெட்கமற்றவன் ஆகிவிட்டேன். ஒவ்வொன்றாக நான் விழுங்குவதை நீங் கள் பார்த்துக்கொண் டிருக்கிறீர்களே என்று நான் கவலைப்படவில்லை. நான் அப்படித்தான் ஒவ்வொன்றையும் ருசிபார்த்துச் சாப்பிடப்போகிறேன்."

நான் சில நாளைக்கு முன்னால் ஸ்திரீ புருஷர்கள் சம் பந்தமான விஷயங்களைப் பச்சையாக எடுத்துக் கூறியிருக் கும் ஓர் ஆங்கிலப் புத்தகத்தைப் படித்துக்கொண்டு இருந் தேன். அதை அப்படியே நாங்கள் உட்கார்ந்து பேசும் இடத்தில் வைத்துவிட்டுப் போய்விட்டேன். ஒரு நாள் மத்தியான்னம் ஏதோ வேலையாக நான் அங்கே சென்ற போது, ராணி அந்தப் புத்தகத்தைப் படித்துக்கொண்டு உட்கார்ந்திருப்பதைப் பார்த்தேன். நான் வரும் சப்தம் கேட்டதும் அவள் வேகமாக அதை ஒரு கவிதைப் புத்த கத்தின் அடியில் வைத்துவிட்டாள்.

"கவிதைகள் படிப்பதற்கு ஸ்திரீகள் எதற்காக வெட் கப்படவேண்டும் என்பதுதான் எனக்கு விளங்கவில்லை. நாங்கள் - ஏதோ தொழிலில் இருப்பவர்கள் - வெட்கப் படலாம். நாங்கள் படிக்கவேண்டும் என்றால் நடுநிசியில்

தனியாகப் படிக்கவேண்டும். கவிதைக்கும் ஸ்திரீகளுக்குந் தான் நெருங்கிய உறவாயிற்றே! நான்முகனே ஒரு மகா கவிதான். ஜயதேவர் அவர் காலடியில் உட்கார்ந்துதான் அந்தத் தெய்விகக் கலையைப் பயின்றிருக்க வேண்டும்" என்றேன்.

ராணி இதற்கு ஒன்றும் பதில் சொல்லவில்லை. அவள் முகம் மட்டும் சிவந்தது. அவள் அவ்விடத்தை விட்டுப் போவதற்காகக் கிளம்பவே, நான் தடுத்து, "வேண்டாம்; நீங்கள் பேசாமல் படித்துக்கொண் டிருங்கள். இங்கே என் புத்தகம் ஒன்று இருந்தது. அதை எடுத்துக் கொண்டு போய்விடுகிறேன்" என்று கூறிவிட்டு, அந்தப் புத்தகத்தை மேஜைமீதிருந்து எடுத்துக்கொண்டேன். "நல்ல வேளை, நீங்கள் இதைத் திறந்து பார்க்கவில்லையே; பார்த்திருந்தால் என்னை நன்றாக வைதிருப்பீர்கள்" என்றேன்.

"வைதிருப்பேனா? ஏன்?" என்றாள் ராணி.

"அது கவிதை அல்லவே! பச்சையான விஷயங்களைப் பச்சையாக அல்லவா கூறியிருக்கிறது? நிகில் இந்தப் புத்தகத்தைப் படிக்க வேண்டும்."

ராணி கொஞ்சம் முகத்தைக் கடுத்துக்கொண்டு, "எதற்காக அப்படிச் சொல்லுகிறீர்கள்?" என்று கேட்டாள்.

"எங்களைப்போல் அவனும் புருஷன் அல்லவா? இவ் வுலகத்தை உள்ளபடி பாராமல் தன் இஷ்டப்படி நினைத் துக்கொண் டிருக்கிறானே என்றுதான் நான் அவனுடன் சண்டையிடுகிறேன். இந்தக் குணத்தினால் சுதேசி இயக் கத்தைக்கூட ஒவ்வோர் அடியிலும் சந்தம் பிசகாமல் இருக்கவேண்டிய ஏதோ பாடல்போல அவன் நினைத்துக் கொண்டிருக்கிறானே! அதைக் கவனித்தீர்களா? நாங் களோ வசன நடையாகிற தடியை வைத்துக்கொண்டு இந் தச் சந்தங்களையெல்லாம் உடைத்தெறிகிறோம்."

"சுதேசி இயக்கத்தைப்பற்றி உங்கள் புத்தகத்தில் என்ன எழுதியிருக்கிறது?"

"நீங்கள் படித்துப் பார்த்தால் அல்லவா தெரியும்? சுதேசியிலும் மற்ற விஷயங்களைப்போல் நிகில் எல்லாம் பாடங்களும் நீதிகளுமாகவே இருக்கவேண்டும் என்கிறான். அதனால் ஒவ்வோர் அடியிலும் மனித இயல்புடன் மோதிக் கொள்ள நேர்ந்தவுடன் அவன் அதையே நிந்திக்கத் தொடங்குகிறான். உயர்ந்த வாக்கியங்கள் ஏற்படுவதற்கு முன்னமே மனித சுபாவம் உண்டாகிவிட்டது என்பதை அவன் ஒரு நாளும் தெரிந்துகொள்ளப் போவதில்லை."

சிறிது நேரம் பேசாமல் இருந்துவிட்டுப் பிறகு ராணி, "இயற்கையை விட்டு முன்னேற முயலுவது மனித சுபாவம் அல்லவா?" என்றாள் கவலையோடு.

நான் மனத்துக்குள்ளேயே நகைத்துக்கொண்டேன். 'இவை உன் சொந்தச் சொற்கள் அல்ல; நிகிலிடமிருந்து கற்றுக்கொண்டவை. நீ நல்ல ஆரோக்கியத்துடன் கூடிய சாதாரண மனித இனத்தைச் சேர்ந்தவள். இயற்கைப்படி நடக்கக் கூடியவள். உன் ஒவ்வொரு நாடியிலும் ஜீவாக்கினி கொழுந்துவிட்டு எரிந்துகொண்டிருப்பது எனக்குத் தெரியாதா? நீ அவ்வாறு எரிந்துகொண்டிருக்கும்போது நல்லொழுக்கத்தைப்பற்றிய நீதி வாக்கியங்களாகிய ஈரத்துண்டினால் எவ்வளவு நேரந்தான் அந்தத் தாபத்தைக் குறைக்க முடியும்?' என்று மனத்தில் நினைத்துக்கொண்டேன்.

"தைரியம் இல்லாதவர்கள்தாம் உலகில் அதிகம். உபயோகமற்ற வார்த்தைகளையே திரும்பத் திரும்பக் கூறி அவர்கள் எல்லோர் செவிகளையும் கெடுத்துக்கொண்டிருக்கிறார்கள். அவர்களுக்கு வலிமை இல்லை. அதனால் அவர்கள் பிறரையும் வலியற்றவர்கள் ஆக்க முயலுகிறார்கள்" என்று வெளிப்படையாகக் கூறினேன்.

"ஸ்திரீகளாகிய நாங்கள் அப்லைகள். ஆகவே பலமற்றவர்களின் சதியாலோசனையில்தானே நாங்களும் கலந்துகொள்ள வேண்டியவர்கள்!" என்றாள் விமலா.

"ஸ்திரீகள் அபலைகளா?" என்றேன் சிரித்துக்கொண்டே; "உங்களை நீங்கள் பலமற்றவர்களாக நினைத்

துக்கொள்ளும்படி புருஷர்கள் அல்லவா உங்களை அபலை கள் என்றும் சுகுமாரிகள் என்றும் வர்ணிக்கிறார்கள்? ஆனால் நீங்கள்தாம் உண்மையில் பலசாலிகள். புருஷர் கள் தங்கள் சுதந்தரத்தைப்பற்றிப் பெரிதாக ஜம்பம் அடித்துக்கொள்ளுகிறார்கள், ஆயினும் உள்ளூறத் தங்கள் மனத்தைத் தெரிந்துகொண்டவர்கள் உண்மையில் தாம் பரதந்திரர்கள் என்று அறிவார்கள். தங்களைக் கட்டுப் படுத்திக் கொள்வதற்கென்று தங்கள் கைகளினாலேயே சாஸ்திரங்களைத் தயாரித்து வைத்திருக்கிறார்கள். லக்ஷி யங்களைப் போற்றும் மனப்பான்மையுடன் ஸ்திரீகளைப் பொன்விலங்குகள் ஆக்கித் தங்களின் உள்ளம், உடல் இரண் டுக்கும் அந்த விலங்குகளைப் பூட்டி வைக்கிறார்கள். இப்படித் தாமே சிக்கல்களைத் தயாரித்து அவற்றில் அகப்பட்டுக் கொள்ளும் திறத்தைப் புருஷர்கள் படைத்திராவிட்டால் அவர்களை வேறு எதுவும் கட்டிவைக்க முடியாது. ஸ்திரீ களாகிய நீங்களோ அப்படி அல்ல. உங்கள் முழு மனத் தோடு மெய்யையே விரும்புகிறீர்கள். உண்மை உங்களிட மிருந்துதான் உண்டாயிற்று. அதைப் போற்றுபவர்கள் நீங்கள்தாம்.''

ராணி நன்றாகப் படித்தவள். ஆகையால் என் வாதங் களை லகுவில் அவள் ஒப்புக்கொள்வதாக இல்லை.

''நீங்கள் கூறுவது வாஸ்தவமாக இருந்தால் ஆடவர் கள் பெண்களைக் கண்டு மயங்கமாட்டார்களே!'' என்று ஆக்ஷேபித்தாள்.

''பெண்மணிகளுக்கு அந்தப் பயம் உண்டு. ஆடவர்கள் வெளி ஏமாற்றங்களை விரும்புபவர்கள் என்பது அவர் களுக்குத் தெரியும். ஆகவே ஆடவர்களின் அலங்காரச் சொற்களையே அவர்களும் கடன் வாங்கி வட்டியும் முதலு மாக உபயோகிக்கிறார்கள். குடிகார மனிதன் உணவைக் காட்டிலும் மயக்கத்தையே பெரிதாக நினைப்பதும் அவர்க ளுக்குத் தெரியும். ஆகையால்தான் அவர்கள் தாமே மயக் கத்தை உண்டுபண்ணும் வஸ்துவாக மாறப் பார்க்கிறார் கள். வாஸ்தவத்தில் புருஷர்களுக்காகத்தான் அவர்களுக்கு இவ்வளவு பாசாங்கும் வேண்டியிருக்கிறது.''

“அப்படியே இருக்கட்டும்! நீங்கள் ஏன் இந்த நினைவுகளை எல்லாம் ஒழித்துவிட வேண்டுமென்று சிரமப்படுகிறீர்கள்?” என்றாள் விமலா.

“ஏனென்றால் சுதந்தரத்துக்காக நம் நாடு சுதந்தரம் அடையவேண்டும் என்று விரும்புகிறேன். மனிதர்களுக்குள்ள சம்பந்தமும் சுயேச்சையுடன் இருக்கவேண்டும் என்று நினைக்கிறேன்” என்றேன்.

தூக்கத்தில் நடப்பவரைத் திடீரென்று விழித்துக் கொள்ளச் செய்வது தீங்கை விளைக்கும் என்பது எனக்குத் தெரியும். ஆனாலும் சுபாவத்தில் அவசரமும் ஆத்திரமும் உடையவன் ஆதலால் நின்று நின்று செல்வது எனக்குப் பிடிக்கவில்லை. அன்று நான் கொஞ்சம் அதிகத் துணிச்சலாகவே நடந்துகொண்டேன். இம்மாதிரி எண்ணங்கள் முதல்முதல் மனத்துக்கு மிகவும் விரோதமாக இருக்கும் என்று எனக்குத் தெரியும். ஆனாலும் பெண்கள் விஷயத்தில் தைரியந்தான் வெற்றி பெறுகிறது. ஆண்கள் புகையை விரும்புபவர்கள்; பெண்களுக்கோ எப்போதும் பிரத்தியக்ஷமான பொருள்தான் பிடிக்கும்.

இவ்வாறு எங்கள் பேச்சு சிறிது சூடாக இருக்கும் போது நிகிலினுடைய சிறு பருவத்து உபாத்தியாயரான சந்திரநாத் பாபு உள்ளே நுழைந்தார். இந்த உபாத்தியாயர்கள் இல்லாவிட்டால் உலகம் இவ்வளவு மோசமான நிலையில் இராது. இவர்களால்தான் ‘சீ! சீ!’ என்று அதன் மேல் நமக்கு இவ்வளவு வெறுப்பு ஏற்படுகிறது. நிகிலைப் போன்றவர்கள் உலகத்தை எப்போதும் ஒரு பள்ளிக்கூடமாக வைத்திருக்க வேண்டும் என்கிறார்கள். பெரியவர்களான பின்பும் பள்ளிக்கூடம் அவர்களோடு வர வேண்டும். இல்லறத்தைக் கைக்கொண்ட பின்பும் அங்கே பள்ளிக்கூடம் வந்து சேரவேண்டும்; சாகும்போதுகூட இவர்கள் தங்களோடு பள்ளிக்கூட உபாத்தியாயரையும் இழுத்துக்கொண்டு போனால் நல்லதுதான்! மனித உருவத்தில் இருக்கும் அந்தப் பள்ளிக்கூடம் அன்று நாங்கள் பேசிக்கொண்டிருந்தபோது சரியான சமயத்தில் வந்து சேர்ந்தது!

பள்ளியில் படிக்கும் மாணுக்கனின் குணம் நமக்கு அடியோடு இல்லாமல் போவதில்லை. எனக்குக்கூட அன்று ஒரு மாதிரியாகப் போய்விட்டது. பாவம்! ராணியோ வகுப்பில் முதன்மையாக இருக்கும் சிறுமிபோலப் பேசாமல் உடனே தன் இடத்தில் போய் நின்றுகொண்டாள். திடீரென்று அன்றுதான் பரீக்ஷை என்பது அவளுக்கு ஞாபகம் வந்ததுபோலத் தோன்றிற்று. ஸ்டேஷனில் இருக்கும் 'பாயிண்ட்ஸ்மன்' போல் சிலர் ஓர் இடத்தில் உட்கார்ந்துகொண்டே தம் சிந்தனை வண்டியைத் திடீரென்று ஒரு தண்டவாளத்திலிருந்து மற்ருெரு தண்டவாளத்துக்கு மாற்றிவிடுகிருர்கள்.

சந்திரநாத் பாபு உள்ளே வந்ததும் சங்கோசப்பட்டுக் கொண்டு, "ஓகோ! நான் ஏதோ தெரியாமல்..." என்று முணுமுணுத்துக்கொண்டு வெளியே போய்விடுவதாக இருந்தார்.

ராணி அவர் அருகில் சென்று நமஸ்கரித்து, "வேண்டாம்; போகவேண்டாம்; உட்காருங்கள்" என்ருள்.

தான் நீரில் மூழ்கிவிடுவதுபோலவும் அந்தச் சமயத்தில் அந்த உபாத்தியாயப் பெருமானுடைய புகல் தேவை போலவும் அவள் நினைத்திருக்க வேண்டும். வெறும் பயங் கொள்ளி!

ஒருவேளை நான் நினைத்தது தவருே! அது ஒரு பெண்ணின் தந்திரமாக இருந்தாலும் இருக்கலாம். என் முன் இன்னும் அதிக உயர்வாகத் தோன்ற வேண்டும் என்று விரும்பிஞளோ என்னவோ! இல்லாவிட்டால், 'ஏதோ என்னை முற்றும் வென்றுவிட்டதாக நினைக்க வேண்டாம். சந்திரநாத் பாபுவிடம் எனக்குள்ள பக்தி இன்னும் எவ்வளவோ மேம்பட்டது' என்று எனக்குக் குறிப்பாகத் தெரியப்படுத்தியதாகவும் இருக்கலாம்.

சரி, அப்படியே இருக்கட்டும். பள்ளிக்கூடத்து உபாத்தியாயர்களும் அதில்தான் பிழைத்துக்கொண் டிருக்கிருர்கள். ஆனுல் நான் அப்படியா? எனக்கு இந்த மரியாதையெல்லாம் தேவை இல்லை.

சந்திரநாத் பாபு சுதேசி இயக்கத்தைப்பற்றிப் பேசத் தொடங்கினர். அவரே பேசிக்கொண் டிருக்கட்டும் என்று நான் விட்டுவிட்டேன். வயசானவர் ஆதலால் அவருக்கு அதுபோதும். நிஜமான உலகம் எது என்ற நினைவில்லாமல் அவர் ஏதோ உலகத்தை வளைத்துப் பேசுவதாக எண்ணிக்கொண் டிருந்தார்.

ஆனல் கடைசியில் அப்படி இருக்க எனக்குப் பொறுமை இல்லை. "நாம் விதை போட்டுப் பயிரிடாமல் பலனைமட்டும் அநுபவிக்க வேண்டும் என்ருல் அப்போது .." என்று அவர் சொன்னபோது நான் எப்படிப் பேசாமல் இருக்க முடியும்?

"பலன் யாருக்கு வேண்டும்? கீதாசாரியர் சொல்லியிருப்பதுபோல் கர்மாதான் பிரதானமே ஒழியப் பலன் பிரதானம் அல்ல" என்றேன்.

"ஆனல் என்னதான் வேண்டும் என்கிறீர்கள் நீங்கள்?" என்று வினவினர் சந்திரநாத் பாபு.

"முட்கள்தாம். அவற்றை விதைப்பதில் செலவு ஒன்றுமே இல்லை. முட்கள் இருப்பதனல் செடிக்கு ஒன்றும் சிரமமில்லை அல்லவா?"

"முட்கள் பிறரை வரவொட்டாமல் தடுப்பதுடன் நம் காலிலும் குத்திவிடுமே!"

"இவையெல்லாம் பள்ளிக்கூடத்தில் சொல்லிக் கொடுக்கும் வார்த்தைகள். சுண்ணும்புக் கட்டியைக் கையில் வைத்துக்கொண்டு கரும்பலகையில் எழுதுவது என் வேலை அல்ல. எதனல் என் உள்ளம் எரிகிறதோ அதுதான் இன்று எனக்கு முக்கியமான விஷயம். இப்போது பிறர் காலில் தைப்பதற்காகவே முட்களை வளர்க்க வேண்டும். பிறகு அவை நம் காலில் தைக்கும்போது மெதுவாக அதற்கு ஏற்ற உபாயத்தை யோசித்துக்கொள்வோம். ஆனல் அதைப்பற்றியும் எதற்காகப் பயப்பட வேண்டும்? மரணகாலம் கிட்டும்போது எல்லாம் அடங்கி அமைதியாகும் சமயம் வந்துவிடும். உள்ளத்தில் நெருப்பு இருக்கும் வரையில் தகதகவென்று சுடர் விடுவதுதான் அழகு."

இதைக் கேட்ட சந்திரநாத் பாபு புன்னகை புரிந்தார். "சுடர் விடுவதானால் விட்டு எரியுங்கள். ஆனால் நீங்கள் செய்வதையெல்லாம் பெரிய வீரச் செயல்களாக நினைத்து ஏமாறவேண்டாம். தேசங்கள் செயல்களினால் முன்னேற்றம் அடைந்திருக்கின்றனவே ஒழிய வீண் பெருமை அடித்துக்கொள்வதனால் அல்ல. உழைப்பு என்றால் பயப்படுகிறவர்கள் தங்கள் பரிதாப நிலைமையைத் தெரிந்து கொண்டவுடன் அதிலிருந்து மீளுவதற்குக் குறுக்கு வழியைத் தேடுவார்கள்."

இதற்கு நன்றாக மண்டையில் ஓங்கியடித்துப் பதில் சொல்லவேண்டும் என்று நினைக்கையில் நிகில் அங்கே வந்துவிட்டான். சந்திரநாத் பாபு எழுந்து ராணியிடம், "கொஞ்சம் காரியம் இருக்கிறது; நான் போய் வருகிறேன்" என்றார்.

அவர் சென்றவுடன் கையிலிருந்த புத்தகத்தை நிகிலுக்குக் காட்டி, "இந்தப் புத்தகத்தைப்பற்றித்தான் ராணியிடம் பேசிக்கொண்டிருந்தேன்" என்றேன்.

நூற்றுக்குத் தொண்ணூற்றொன்பது பேர்களைப் பொய் சொல்லித்தான் ஏமாற்றவேண்டும். ஆனால் ஆயுள் பரியந்தம் பள்ளியில் பாடம் கற்றுவரும் இந்த மாணாக்கனையோ உண்மையைக் கூறி ஏமாற்றுவதே மிகச் சுலபமாக இருந்தது. அவனிடம் ஒளிக்காமல் இருப்பதுதான் நல்லது.

நிகில் புத்தகத்தின் பெயரைப் பார்த்துவிட்டுப் பேசாமல் இருந்தான்.

"இத்தகைய ஆசிரியர்கள் உலகில் மனிதர்கள் குவித்திருக்கும் உயர்ந்த பேச்சுக்களின்மேல் படிந்துள்ள தூசியைத் தட்டிப் பெருக்கும் வேலையை மேற்கொண்டிருக்கிறார்கள். நீ இதைப் படித்துப் பார்" என்றேன்.

"நான் படித்தாயிற்று" என்றான் நிகில்.

"அப்படியானால் உன் அபிப்பிராயம் என்ன?"

"உண்மை, பொய் இவைகளைப்பற்றி உண்மையில் ஆராய்ச்சி செய்ய விரும்புகிறவர்களுக்கு இந்தப் புத்தகம்

மிகவும் நல்லது. ஆனால் தாமே தவறு செய்ய நினைப்பவர் களுக்கு இது விஷம் போன்றது.''

''நீ சொல்வது எனக்குப் புரியவில்லையே?''

''சொத்தில் சம உரிமை வேண்டும் என்று உபதேசம் செய்பவர்கள் திருடர்களாக இருக்க முடியுமா? அப் போது அவர்கள் பொய் சொன்னவர்களாக ஆவார்கள் அல்லவா? காமக் குரோதங்கள் மேலோங்கி நிற்கும் போது இந்தப் புத்தகத்தைச் சரியாகப் புரிந்துகொள்ள முடியாது.''

''நம் இயற்கை உணர்ச்சிதான் தெரு விளக்குப்போல் நமக்கு வழிகாட்டியாக இருக்கிறது. அதைப் பழிப்பது, நம் கண்களைப் பிடுங்கிவிட்டால் இன்னும் நன்றாகப் பார்க்க முடியும் என்று நினைப்பதுபோலத்தான் ஆகும்.''

நிகிலுக்குக் கொஞ்சம் படபடப்பு ஏற்பட்டது. ''அடக்கத்தைப்பற்றித் தெரிந்துகொண்ட பிறகுதான் இயற்கை உணர்ச்சியின் உயர்வை நான் ஒப்புக்கொள்ள முடியும். நாம் பார்க்க விரும்பும் வஸ்துவைக் கண்ணில் வைத்து அழுத்திக்கொண்டால் கண்ணைத்தானே குத்திக் கொள்வோம்; வஸ்துவைப் பார்க்க முடியுமா? மதம் பிடித்துப்போனால் காரியம் அல்லவா கெட்டுவிடும்?''

''இவையெல்லாம் உன் புத்தியின் பெருமையே தவிர வேறல்ல. உண்மை கட்டுக்கு அடங்காமல் முரட்டுத் தனம் வாய்ந்தது என்பதைக் கவனிக்காமல் அதுதான் உன்னை இப்படி மென்மையான ஒழுக்கமுறையில் ஈடுபடச் செய்கிறது. இதனால் விஷயங்கள் யாவும் ஒரே மர்ம மாவதுடன் உன் காரியத்தைத் திறமையாகச் செய்யவும் உனக்குச் சக்தி இல்லாமல் போகிறது.''

''வேண்டாத சமயத்தில் சக்தியை உபயோகிப்பதால் காரியத்துக்குப் பிரயோஜனம் இல்லை'' என்றான் நிகில் சற்றுக் கோபமாக.

''ஆயினும் இந்த விஷயங்களில் நாம் ஏன் வாதாட வேண்டும்? வீண் வாதங்களினால் உண்மைக்குச் சற்று வாட்டம் ஏற்படுமே ஒழிய வேறு ஒரு குறைவும் ஏற் படாது.''

இந்த விவாதத்தில் ராணியும் சேரட்டும் என்று நினைத்தேன். ஆனால் அவள் பேசாமலே இருந்துவிட்டாள். நான் ஏதாவது அவளை நிரம்பக் கலவரப்படுத்தி விட்டேனோ என்று நினைக்கிறேன். அதனால் அவள் சந்தேகமுற்று உபாத்தியாயரிடம் மறுபடியும் புதிதாகப் பாடம் கற்க விரும்புகிறாளோ! ஆயினும் முற்றும் கலவரப் படுத்திவிடுவதுதான் சரி. அசைக்கமுடியாதவற்றைக்கூட அசைத்துவிடலாம் என்பது தெரியவேண்டும்.

"உன்னுடன் இந்த விஷயத்தைப்பற்றிப் பேசியதைக் குறித்துச் சந்தோஷப்படுகிறேன். ஏனென்றால் இந்தப் புத்தகத்தை ராணியிடம் கொடுத்துப் படிக்கச் சொல்வதாக இருந்தேன்" என்றேன்.

"அதில் என்ன தவறு? நான் படிக்கலாம் என்றால் விமலாவும் படித்தால் என்ன? நான் கூறுவது என்னவென்றால் மேல்நாட்டில் ஜனங்கள் எல்லாவற்றையும் விஞ்ஞான சாஸ்திரத்தின் வாயிலாகப் பார்க்கிறார்கள். ஆனால் மனிதன் கேவலம் தேகதத்துவம், ஜீவதத்துவம், மனஸ்தத்துவம், சமூகதத்துவம் போன்ற சாஸ்திர ஆராய்ச்சிக்கு உட்பட்டவனா? அது ஞாபகம் இருக்கட்டும். மனிதன் இவைகளுக்கெல்லாம் எவ்வளவோ மேம்பட்டவன். பள்ளியில் பாடம் கற்கும் பையன் என்று என்னைப் பார்த்துச் சிரிக்கிறாயே. ஆனால் அது யார்? நானா? நீயா? மனிதனைப் பற்றிய தத்துவத்தை உன் அந்தராத்மாவிலிருந்து அறிந்துகொள்ளலாம் என்று நினைக்கிறாய்."

"அது கிடக்கட்டும். உனக்கு ஏன் அதைப்பற்றி இவ்வளவு படபடப்பு?" என்று பரிகசித்தேன்.

"ஏனா? நீ மனிதனை அவமதித்து இழிவாக்கப் பார்க்கிறாய்."

"அதை எப்படி நீ கண்டுபிடித்தாய்?"

"அதுதான் நன்றாகத் தெரிகிறதே! மனிதனின் தன்னலமற்ற சிறப்பு வாய்ந்த தன்மையைத்தான் நீ குத்திக் கெடுத்துக்கொண்டிருக்கிறாயே."

"என்ன இது? நீபாட்டுக்கு ஏதோ கண்டபடி பேசுகிறாயே?"

நிகில் சட்டென்று எழுந்து நின்ருன். "இதோ பார் ஸந்தீப், நான் வெளிப்படையாகச் சொல்லுகிறேன். மரண காயம் அடைந்தாலும் மனிதன் சாகாமல் இருக்கலாம். ஆகையால்தான் இரண்டு கண்களையும் திறந்துகொண்டு எல்லாம் தெரிந்திருந்தபோதிலும் நான் எல்லாக் கஷ்டங்களையும் அநுபவிக்கச் சித்தமாக இருக்கிறேன்" என்று கூறிவிட்டு, அவன் வேகமாக அறையை விட்டுச் சென்ருன். அப்படிப் போன அவனை நான் விழித்துப் பார்த்துக்கொண்டே நின்றேன். மேஜைமீதிருந்து ஒரு புத்தகம் விழுந்த ஓசை கேட்டுத் திரும்பிப் பார்த்தபோது ராணி என் அருகில் வராமல் தாண்டிக்கொண்டு வேகமாக நிகிலைப் பின்தொடர்ந்து செல்வதைக் கண்டேன்.

நிகில் ஒரு புதுமைப் பிரகிருதி. தனக்கு வரப்போகும் ஆபத்துத் தெரிந்திருந்தும் ஏன் என்னை வீட்டை விட்டுப் போகச் சொல்லாமல் இருக்கிருன்? விமலாவே விஷயத்தைச் சொல்லட்டும் என்றுதான் பேசாமல் இருக்கிருன் என்பது தெரிகிறது. தங்கள் இருவருக்கும் பொருத்தம் இல்லை என்று விமலா சொல்லிவிட்டால் அவன் வாய் பேசாது அதை ஒப்புக்கொண்டுவிடுவான். பிழையை ஒப்புக்கொள்வதுதான் யாவற்றிலும் பெரிய தவறு என்பதை அறிந்துகொள்ள அவனுக்குச் சக்தி போதாது. இப்படி விதவிதமான எண்ணங்களை மேற்கொள்வதுதான் பல ஹீனத்துக்குக் காரணமாகிறது என்பதற்கு அவன்தான் சரியான உதாரணமாக இருக்கிருன். இப்படி ஒரு விந்தையான பிரகிருதியை நான் பார்த்ததே இல்லை. நிஜ வாழ்க்கையை விட்டுவிடுவோம்; ஒரு கதா பாத்திரமாகவோ நாடக பாத்திரமாகவோகூட இருக்கத் தகுதியற்றவன்.

ராணியோ! அவள் கனவு வாழ்க்கை இன்றுடன் முடிவடைந்துவிட்டது என்று நினைக்கிறேன். தன்னை இழுத்துச் செல்லும் சக்தியின் இயல்பை இப்போதுதான் அவள் அறிந்துகொண்டிருக்கிருள். அவள் தைரியமாக முன்னேக்கியோ பின்னேக்கியோ செல்ல வேண்டும். அநேகமாக ஓர் அடி முன் வைத்தால் உடனே ஓர் அடி பின் வைத்துவிடுவாள் என்றுதான் தோன்றுகிறது.

அதைப்பற்றி நான் ஒன்றும் கவலைப்படவில்லை. தீப் பிடித்துக்கொண்டவர்கள் இங்கும் அங்கும் ஓடினால் பின்னும் அதிகமாகப் பற்றிக்கொள்ளுமே ஒழியச் சாந்தம் ஆகுமா? பயம் அவள் வேட்கையைப் பின்னும் அதிகரிக்கச் செய்து விடும்.

அவளிடம் அதிகமாகப் பேசாமல் சில நவீனப் புத்தகங்களைக் கொடுத்துப் படிக்கச் சொன்னாலே போதுமானது. இயற்கை உணர்ச்சியே உண்மையானது. அதைப் பின்பற்றி நடப்பதுதான் நவீன நாகரிக முறையே தவிர அதைப்பற்றி அவமானப்படுவதும் அடக்கத்தை உயர்த்துவதும் நாகரிகமாகாது என்ற தீர்மானத்துக்கு அவள் மெதுவாக வரவேண்டும். நவீன நாகரிகம் போன்ற வார்த்தையை உபயோகத்துக்கு வைத்துக்கொண்டால் தைரியம் உண்டாகிவிடும்.

அது எப்படியானாலும் இதைக் கடைசி வரையிலும் ஒரு கை பார்த்துத்தான் விடப்போகிறேன். அரசர் வீற்றிருக்கும் இடத்தில் உட்கார்ந்து இடையிடையே கை கொட்டி ஆரவாரித்துக்கொண்டு வேடிக்கை பார்ப்பவன் போன்றவன் அல்ல நான். என் உடம்பிலும் உள்ளத்திலும் ஏதோ ஒரு வேதனை குடிகொண் டிருக்கிறது. விளக்கை அணைத்துவிட்டுப் படுக்கையில் படுத்துக்கொண்டவுடன் இருட்டில் சிறு சிறு வார்த்தைகள், பார்வைகள் எல்லாம் என்னைச் சுற்றித் தாண்டவம் ஆடுகின்றன. காலையில் எழுந்திருக்கும்போது என்ன உத்சாகத்துடன் என் உடம்பில் ரத்தம் துள்ளி ஓடுகிறது!

மேஜையின்மேல் நிகில், ராணி இருவரின் புகைப்படங்களும் ஒரே சட்டத்தில் சேர்த்து வைக்கப்பட்டிருந்தன. நான் விமலாவின் படத்தை வெளியில் எடுத்துவிட்டேன். நேற்றுச் சூன்யமாக இருந்த பாகத்தைக் காட்டி, "லோபித்தனம் இருப்பதனால்தான் திருட்டும் அவசியமாகிறது. ஆகவே அந்தப் பாவம் திருடன், லோபி இருவரையும் சேர்ந்ததுதான் அல்லவா?" என்றேன்.

"அந்தப் படம் அப்படி ஒன்றும் நன்றாக இல்லை" என்று ராணி சிறிது புன்னகையுடன் சொன்னாள்.

"என்ன செய்கிறது? போட்டோ போட்டோவாகத் தான் இருக்க முடியும். அதை வைத்துக்கொண்டுதான் நான் திருப்தி அடைய வேண்டும்" என்றேன்.

ராணி ஒரு புத்தகத்தை எடுத்துப் பார்க்கத் தொடங்கினாள்.

"உங்களுக்குப் பிடிக்கவில்லை என்றால் நான் அதைப் பழையபடி வைத்துவிடுகிறேன்" என்றேன்.

இன்று அந்தக் காலிச் சட்டத்தில் நான் என் படத்தை வைத்திருக்கிறேன். அது என் இளமையில் எடுத்தது. என் உள்ளம், முகம் இரண்டிலும் இளமையின் புது மலர்ச்சி நன்றாகச் சோபித்தது. இவ்வுலகம், மறு உலகம் இரண்டைப்பற்றியும் நான் அப்போது என்ன என்னவோ அரிய கனவுகள் கண்டுகொண்டிருந்தேன். மனிதர்களை நம்பிக்கை ஏமாற்றிவிடுகிறது என்றாலும் அதனால் முகத்துக்கு ஒரு தனிப் பிரகாசம் ஏற்படுகிறது அல்லவா?

இப்போது நிகிலுக்குப் பக்கத்தில் என் படம் வைக்கப்பட்டிருக்கிறது. நாங்கள் இருவரும் பழைய நண்பர்கள் அல்லவா?

# நிகிலேசன்

என்னைப்பற்றியே நினைத்துக்கொண்டிருக்கும் சுபாவம் எனக்கு இல்லை. ஆனால் இப்போதெல்லாம் என்னைப்பற்றிப் பிறருக்கு அதாவது விமலாவுக்குத் தோன்றுவதுபோல் யோசனை செய்து பார்க்கிறேன். யாவற்றையும் யதார்த்தமாகப் பாவிக்கும் என் குணம் எவ்வளவு மோசமாகத் தோன்றுகிறது!

உண்மையில் உலகத்தைக் கண்ணீர் வெள்ளமாக அடிப்பதைக்காட்டிலும் சிரிப்புமயம் ஆக்குவதே மேல். உலகமே அவ்வாறுதான் நடந்துகொண்டிருக்கிறது. வீட்டிலும் வெளியிலும் சிதறிக்கிடக்கும் துன்பங்களையும் விபத்துக்களையும் வெறும் நிழல்போல எண்ணி மனத்திலிருந்து அவற்றை நீக்கிவிடுவதனால்தான் நாம் நிச்சிந்தையாகச் சாப்பிட முடிகிறது. அந்தத் துன்பங்களை ஒரு நிமிஷமாவது நிஜமாக எடுத்துக்கொண்டால் அப்புறம் சாப்பாடுதான் வாய்க்குப் பிடிக்குமா, தூக்கந்தான் வருமா?

வெறும் நிழல்போல என்னைத் தள்ள முடியவில்லையே! அதனால் என் துன்பச் சுமை அப்படியே கனம் குறையாமல் கிடக்கிறதே. உலகத்தோடு சம்பந்தப்படாமல் தனியே நின்றுகொண்டு அதனுடன் சேர்ந்ததாகவும் நினைத்துக்கொள்ள முடியாதா? இந்த உலகில் கூடியிருக்கும் மகாஜனங்களில் விமலா மட்டும் எனக்கு என்ன உறவு? மனைவியா? மனைவி என்றால்?- வெறும் பெயர்! நாம் வாயால் ஊதிப் பெரிதாக்கி இரவும் பகலும் ஜாக்கிரதையாகக் காப்பாற்றிவந்தும் ஒரு சிறு ஊசி குத்தினாலும் வெடித்துப் போகக்கூடிய கொப்புளம்.

என் மனைவி! ஆம்! என்னுடையவளேதான். ஆனால் இல்லை! 'நான் எனக்குத்தான் சொந்தம்' என்று அவள் சொன்னால், 'அதெப்படி? நீ எனக்கு அல்லவா சொந்தம்?' என்று நான் கேட்பதா?

என் மனைவி! இந்த ஒரு வார்த்தையை என் வாழ்க்கையில் யாவற்றுக்கும் மேல் பரிசுத்தமாகவும் இனிமையாகவும் நான் போற்றவில்லையா? அதை ஒரு கணமாவது என் இருதயத்தை விட்டுக் கீழே இறக்கியிருப்பேனு? அதன் சந்நிதியில் என் பிரேமாவேசத்தையே சங்கீதமாக இசைத்து என் இளவேனில், முதிர்வேனில் பருவங்களின் மலர்களையெல்லாம் கொண்டு நான் அர்ச்சிக்கவில்லையா? சிறு காகிதக் கப்பல் போல் அவள் கலங்கிய சாக்கடைத் தண்ணீரில் அடித்துச் செல்லப்பட்டால், நானும் அவ்வாறே....

அதோ மறுபடியும் வேடிக்கையே தெரியாமல் யாவற்றையும் யதார்த்தமாகப் பாவிக்கும் என் அசட்டுக்குணம் வெளியாகிறது. கலங்கிய சாக்கடைத் தண்ணீர் என்றெல்லாம் கூறுவானேன்? பொறுமையினுல் தூண்டப்பட்டுக் கூறும் வார்த்தை உண்மையை ஒன்றும் மாற்றிவிடாது. விமலா என்னுடையவள் அல்ல என்ருல் என்னுடையவள் அல்லதான். அதற்காக நான் எவ்வளவு பொருமி, கோபித்து வாதாடினுலும் அவள் என்னுடையவள் ஆகிவிடுவாளா? என் உள்ளம் வெடிக்கும் என்ருல் வெடித்துப் போகட்டுமே! அதனுல் உலகத்துக்கு என்ன நஷ்டம்? எனக்குத்தான் என்ன? வாழ்க்கையில் எவ்வளவோ விஷயங்களை இழந்தாலும் அதற்காக மனிதன் குறைந்து போக மாட்டான். துன்பக் கடலுக்கும் ஓர் எல்லை இருக்கிறது. இல்லாவிட்டால் ஒருவரும் அழமாட்டார்கள்.

ஆனுல் இந்தச் சமூகம் ஒன்று இருக்கிறதே? நான் எனக்காக வருந்துகிறேனே ஒழிய, சமூகத்துக்காக அல்ல. 'உனக்கு நான் மனைவி அல்ல' என்று விமலா கூறுவாளாயின் அப்போது அவள் என் சமூக மனைவியாகி எங்கே வேண்டுமானுலும் இருக்கட்டும். அதனுல் எனக்கு ஒன்றும் கெட்டுப் போகாது.

கஷ்டப்பட்டுத்தான் தீர வேண்டும் என்ருலும் கூடிய மட்டும் ஒருவித மனவேதனையினின்றும் என்னைக் காப்பாற்றிக்கொள்ள வேண்டும். என் விஷயத்தில் பிறர் எப்படி வேண்டுமானுலும் நடக்கட்டும். வாழ்க்கையில் மட்டும் எனக்கு வெறுப்பு ஏற்படக்கூடாது. என் வாழ்க்கையின் பயன் முழுவதும் இந்தக் குறுகிய குடும்பத்துடன் அற்றுப்

போவதா? என் சொந்தச் சுகதுக்கங்களின் பண்டமாற்று வியாபாரத்தில் ஏற்படும் வெற்றி, தோல்வி அதற்கு ஒரு பெரிதல்ல.

நான் போற்றிப் பாவித்த கற்பனை விமலாவை நிஜ விமலாவாகப் பார்க்கும் நாள் வந்துவிட்டது. அவ்வாறு நான் அவளைப் போற்றியதற்கு என் எளிய புத்திதான் காரணம். நிரம்பப் பேராசையினால் அதிக ஆனந்தத்தை அடைவதற்காக நானே அவளை ஒரு தேவதையாகச் செய்துகொண்டேன். ஆனால் விமலா அவள் இயல் பின்படியே இருக்கிறாள். என் திருப்திக்காக அவள் ஒரு தேவதையாக நடக்கவேண்டும் என்று நினைப்பது எவ் வளவு மடத்தனம்! நிர்த்தோஷமாகக் கற்பனை செய்து பார்ப்பதில் எனக்குப் பைத்தியம் என்றால் அதற்காக நான் முகன் தேவதையையே எனக்கு அளிக்கவேண்டும் என்று நிபந்தனையா?

ஏதோ தற்செயலாக விமலாவின் வாழ்க்கை என் வாழ்க்கையுடன் பிணைபட்டுவிட்டது. அவ்வளவுதான். அவளுக்கு ஸந்தீப்தான் ஏற்றவன். ஆனால் அதற்காக என் தகுதியின்மையை நான் எதற்குப் பேசாமல் ஒப் புக்கொள்ள வேண்டும்? ஸந்தீபுக்குப் பிறரை வசீகரிக் கும் குணங்கள் இருப்பது உண்மையே. நான்கூட அவற் றில் மயங்கித்தான் இருந்தேன். ஆனாலும் என்னைக்காட்டி லும் அவன் ஒன்றும் உயர்ந்தவனாகத் தோன்றவில்லையே! வெற்றி மட்டும் எனக்கு இல்லாமல் அவனுடையது ஆகட் டும். அப்போது தெய்வமே அதற்குப் பதில் சொல்லித் தான் ஆக வேண்டும்.

நான் ஒன்றும் ஜம்பம் அடித்துக்கொள்ளவில்லை. முற்றும் துர்ப்பாக்கியனாகும் நிலைமை வாய்க்காமல் இருக் கும்பொருட்டு என்னுடைய உயர்வையும் நான் தெரிந்து கொள்ள வேண்டாமா? வேறு வழி இல்லையே! என்ன செய்வேன்? மகத்தான துக்க அநுபவத்தின்மூலம் என்னை இகழ்ந்துகொள்ளாமல் இருக்கும் உயர்நிலையின் ஆனந்தம் எனக்குக் கிட்டட்டும்.

புத்தி இல்லாமல் ஏதோ நினைத்துக்கொண் டிருந்ததை விட்டு உண்மையாக என்னிடம் என்ன இருக்கிறது என்

பதை அறிந்துகொண்டேன். லாபநஷ்டக் கணக்கைச் சரிவரப் பார்த்து முடித்த பிறகு மிகுந்திருப்பதுதான் உண்மையில் நான். அங்கஹீனம் தெரியாதபடி கிழிந்த துணிகளினால் மூடப்பட்ட சரீரம் உடையவனோ பத்தியமாகச் சாப்பிட்டு உடம்பைக் கவனிக்கவேண்டிய வியாதியஸ்தனோ அல்ல நான்; படாத கஷ்டங்களைப் பட்டும் மனம் கலங்காமல் மீண்ட தீரன் அன்றோ நான்?

ஒரு நிமிஷத்துக்கு முன் குருதேவர் என் அறை வழியாகச் சென்றபோது என் தோளில் கையை வைத்து, "நிகில், படுத்துக்கொள்ளப் போ. இரவு வெகுநேரம் ஆகிவிட்டது" என்றார்.

உண்மை என்னவென்றால் இரவு வெகு நேரம் கழித்து விமலா நன்றாகத் தூங்கிய பிறகுதான் என்னால் படுக்கைக்குச் செல்ல முடிகிறது. பகலில் நாங்கள் ஒருவரை ஒருவர் பார்த்துச் சாதாரணமாகப் பேசிக்கொள்வோம். இரவில் இருவரும் தனியாக இருக்கும்போது என்ன பேசுவது? உடல், உள்ளம் இரண்டும் அவமானத்தால் அவ்வாறு குன்றிப்போயிருந்தன.

"தாங்கள் ஏன் இன்னும் படுக்கப் போகாமல் இருக்கிறீர்கள்?" என்று அவரைப் பதிலுக்குக் கேட்டேன். அவர் சிறிய புன்னகையுடன், "நான் தூங்கும் நாட்கள் முடிந்துவிட்டன. நான் இப்போது ஜாக்கிராவஸ்தையை அடைந்திருக்கிறேன்" என்றார்.

நான் எழுந்து படுக்கையறைப்பக்கம் செல்லக் கிளம்பினேன். அப்போது ஜன்னல் வழியாக ஆகாயத்தில் கவிந்திருந்த இருண்ட மேகம் ஒன்று திடீரென்று சற்று விலகவும் ஒரு பெரிய நக்ஷத்திரம் பளீரென்று பிரகாசிப்பது தெரிந்தது. அது என்னிடம், 'சொப்பன லோகத்தில் பந்தங்கள் ஏற்படுவதும் விடுபடுவதும் சகஜம். ஆனால் மணமான இரவு ஏற்றிய அகண்ட தீபம்போல நான்தான் என்றும் சாசுவதமாக உள்ளவள்' என்று கூறுவது போல் இருந்தது.

திடீரென்று மறுமைபற்றிய விஷயங்களாகிய திரைக்குப் பின் எவ்வளவோ யுகங்களாக என் காதலி

எனக்காகப் பொறுமையுடன் காத்திருப்பது போன்ற ஓர் எண்ணம் என் உள்ளம் முழுவதும் நிரம்பி நின்றது. உடைந்தும் கோணலாகவும் புழுதி படிந்தும் உள்ள கண்ணாடிகளில் நான் அவள் உருவத்தை எத்தனையோ பிறவிகளில் கண்டிருக்கிறேன். அந்தக் கண்ணாடியை நானே அடைய விரும்பி அதை என் பெட்டியில் வைத்துப் பூட்டியதுமே, அவ்வுருவம் அக்கண்ணாடியினின்றும் மறைந்துவிடும். ஆனாலும் கண்ணாடியைப்பற்றியும் அதில் தெரியும் உருவத்தைப்பற்றியுந்தான் எனக்கு ஆக வேண்டியது என்ன?

என் அன்பே! உன் புன்னகை உன் முகத்தை விட்டு என்றும் மறையாமல் இருக்கட்டும். உன் நெற்றியிலுள்ள குங்குமம் ஒவ்வொரு நாள் காலையிலும் என் கண்ணுக்குப் புதிதாகவே தென்படட்டும்.

'இதென்ன, தன்னையே ஏமாற்றிக்கொள்ளும் வேடிக்கை! குழந்தைகளைச் சமாதானப்படுத்தும் அசட்டுப் பேச்சா?' என்று ஓர் இருண்ட மூலையிலிருந்து குட்டிச் சாத்தான் ஏளனம் செய்கிறது.

இருக்கலாம். ஆனால் லக்ஷக்கணக்கான குழந்தைகளை நித்தியம் சமாதானப்படுத்தத்தான் வேண்டியிருக்கிறது. அவர்கள் அனைவரையும் பொய்யைக் கூறியா சமாதானப்படுத்துகிறார்கள்? இல்லை, என் காதலி சத்தியமானவள்; என்னை அவள் வஞ்சிக்க மாட்டாள்.

அவள் சத்தியமாக இருப்பதனால்தான் நான் தவறுகள் இழைக்கும்போதும், கண்ணீர் வெள்ளம் கண்களை மறைக்கும்போதுங்கூட அவளைக் கண்டிருக்கிறேன்; இனியும் எவ்வளவோ தடவை பார்ப்பேன். வாழ்க்கையாகிய சந்தைக் கூட்டத்தில் அவள் காணமற்போய் மீண்டும் எனக்கு அகப்பட்டது உண்டு. சாவு என்னும் குழியில் விழுந்து மேலே ஏறும்போது நான் மறுபடியும் அவளைக் கண்டுபிடித்துவிடுவேன்.

அடி கல்நெஞ்சுக்காரி! இனியும் என்னுடன் விளையாடாதே! உன் அடிச்சுவடுகளையும் உன் கூந்தலின் நறுமணத்தையும் கொண்டு உன்னைத் தொடர்ந்து கண்டு

பிடிக்க முடியவில்லை என்றால் அதற்காக என்னை என்றும் கண்ணீர் விடச் செய்யாதே! அந்த மேகத்தினின்றும் விடுபட்ட நக்ஷத்திரம், 'பயப்படவேண்டாம்' என்று எனக்குச் சொல்லுகிறது. நித்தியமாக உள்ளதற்கு எங்கேனும் அழிவு உண்டா?

போய் விமலா என்ன செய்கிறாள் என்று பார்ப்போம். சோர்வடைந்து படுக்கையில் படுத்துத் தூங்கியிருப்பாள். அவளை எழுப்பாமல் அவள் நெற்றியில் ஒரு முத்தம் இடுவேன். அதுவே என் பிரேமையின் வழிபாடு ஆகும். இறந்த பிறகு என் கஷ்டங்கள், தவறுகள் யாவற்றையும் நான் மறந்துவிடுவேன். ஆனாலும், அந்த முத்தத்தின் நினைவு மட்டும் என்னை விட்டு அகலாதிருக்கும். ஜன்மாந்தரங்களில் இட்ட முத்தங்களைக் கொண்டு அல்லவா என் பிறப்பு இறப்பற்ற காதலிக்கு முடி சூட்டவேண்டும்?

மணி இரண்டு அடித்தது. என் சிறிய மதனி உள்ளே வந்து, "என்ன இது? அப்பா, உனக்குப் புண்ணியம் உண்டு. இப்படி விசாரப்படுவதை விட்டுப் போய்ப் படுத்துக்கொள். உன் முகத்தைப் பார்க்க முடியவில்லையே!" என்றாள். அவள் கண்களில் நீர் நிறைந்து கன்னத்தில் வழிந்து ஓடிற்று.

என்னால் ஒன்றும் பதில் கூற முடியவில்லை. அவள் காலைத் தொட்டுக் கண்களில் ஒற்றிக்கொண்டு, படுக்கச் சென்றேன்.

# விமலா

முதலில் எனக்குச் சந்தேகமோ பயமோ ஒன்றும் தோன்றவில்லை. கேவலம் என் தேசத்துக்கு என்னையே அர்ப்பணம் செய்துகொண்டவள்போல் நினைத்துக் கொண்டேன். இப்படித் தானே தன்னைத் தானம் செய்துகொள்வதில்தான் என்ன மகத்தான ஆனந்தம்! தான் என்பதை அடியோடு ஒழிப்பதில் மனிதன் பேரின்பம் அடைகிறான் என்பதை இப்போதுதான் அறிந்து கொண்டேன்.

என்னுடைய இந்தப் பைத்தியம் மெதுவாக ஓர் இயல்பான முடிவுக்கு வந்திருக்கும். ஆனால் அது கூடாதென்று ஸந்தீப் பாபு தடுத்து, அதற்குப் பதில் தம் சுபாவத்தை வெளியிட்டுவிட்டார். அவர் குரல் என்னை நெருங்கித் தொடுவதுபோன்ற பழக்கத்துடன் ஒலித்தது. அவருடைய ஒவ்வொரு பார்வையும் காலில் விழுந்து யாசிப்பதுபோலத் தோன்றவும், அவற்றில் வெளிப்பட்ட வேட்கையோ என்னை மயிரைப் பிடித்து வேருடன் பிடுங்கி இழுப்பது போன்ற வேகத்துடன் விளங்கியது.

உண்மையைக் கூறுவதற்கு என்ன? இந்தப் படுகுழியில் தள்ளும் பேராவல் என்னை இரவும் பகலும் பிடித்து இழுக்க இவ்வாறு அடியோடு நாசமாவதில் எனக்குத் தீராத பிரமை ஏற்பட்டுவிட்டதே! என்ன மானக்கேடு! என்ன பயங்கரம்! இருந்தாலும் அதில் எவ்வளவு இனிமை தோன்றுகிறது! போதாக்குறைக்கு மேன்மேலும் தெரிந்துகொள்வதில் உள்ள என் அளவற்ற உத்சாகம் வேறு. எனக்கு அவரைப்பற்றி என்ன தெரியும்? ஒரு நாளும் அவர் எனக்குச் சொந்தமாக முடியாது. ஆனாலும் நூற்றுக்கணக்கான நாக்குகளுடன் கொழுந்து விட்டு எரியும் அக்கினி ஜ்வாலை போன்ற அவருடைய இந்த இளமை - ஆகா! கட்டுக்கு அடங்காமல் கொந்தளிக்கும் அதன் வேகந்தான் என்ன!

முதலில் ஆராதிக்கும் உணர்ச்சியோடுதான் தொடங்கினேன். ஆனால் அது விரைவில் ஓய்ந்துபோயிற்று. ஸந்தீபிடம் சாதாரண மரியாதையைக்கூட விட்டு விட்டேன். அதற்குப் பதில் அவரை இழிவாகக்கூடக் கருதத் தொடங்கினேன். ஆயினும் கற்பனை, உணர்ச்சி இவைகளுடன் சதையும் ரத்தமும் சேர்ந்த இந்த உடலாகிய வீணையை இசைப்பதில் தேர்ந்தவர் அவர். அவர் ஸ்பரிசத்துக்கு அஞ்சி நான் பின்வாங்கினாலும் அந்த வீணையையே நான் முற்றும் வெறுத்தாலுந்தான் என்ன? அதிலிருந்து எழும் நாதத்துக்கு மட்டும் ஏதோ அபார சக்தி இருந்தது.

எனக்குள் ஏதோ ஒன்று - அதை நான் என்னவென்று சொல்வது? அதை நினைத்தபோது எனக்கு உயிரையே விட்டுவிட வேண்டும் என்று தோன்றுகிறது.

ஒழிந்தபோது சந்திரநாத் பாபு என்னைத் தேடி வருவார். என்னைச் சுற்றிலும் என் வாழ்க்கையின் எல்லைக்கோடு எவ்வளவு தூரத்தில் இருந்தது என்பதையும் நான் இதுவரைக்கும் எண்ணியிருந்த வரம்பு கேவலம் என் கற்பனையே என்பதையும் நான் ஒரு நொடியில் அறிந்து கொள்ளுமபடியான உயரத்துக்கு என்னைத் தூக்கிச் செல்லும் சக்தி அவருக்குத்தான் இருக்கிறது.

ஆயினும் இவைகளினால் எல்லாம் என்ன பயன்? உண்மையில் நான் அந்த மேம்பட்ட நிலையை விரும்புகிறேனோ? "இந்த வீட்டுக்குத் துன்பங்கள் வரட்டும்; இந்த மோகம் மட்டும் என்னை விட்டு நீங்க வேண்டாம்" என்பதல்லவா என் பிரார்த்தனை போலத் தோன்றுகிறது?

எனக்குக் கல்யாணம் ஆவதற்குமுன் காலம் சென்ற என் மைத்துனர் ஒருவர் நன்றாகக் குடித்துவிட்டு அந்த வெறியில் தம் மனைவியை அடிப்பதும் அப்புறம் ஒரே பச்சாத்தாபப்பட்டுக் கண்ணீர் விட்டுக்கொண்டு, 'இனிமேல் சாராயத்தைத் தொடுவதில்லை' என்று பிரதிக்ஞை செய்வதும் பிறகு அன்று சாயந்தரமே மீண்டும் ஓயாமல் குடிப்பதுமாக இருப்பார். அதைப் பார்த்து நான் மிகவும் அருவருப்பு அடைவது உண்டு. ஆனால் இன்று என்னுடைய போதை அதைவிட இன்னும் எவ்வளவோ அதிகமாக

இருக்கிறது. இந்தப் போதைக்கு வெளியிலிருந்து சாராயம் தேவையில்லை. அது என் உடலிலிருந்தே கிளம்புகிறது. அதற்கு வசமாகாமல் எவ்வாறு சமாளித்துக் கொள்வது என்பதும் எனக்குத் தெரியவில்லை.

வாழ்க்கை முழுவதும் இப்படியேதான் கழியுமோ? ஒவ்வொரு சமயம் நான் திடுக்கிட்டு என்னையே நோக்கிக் கொள்ளும்போது என் ஜன்மமே திடீரென்று ஒன்றும் இல்லாமல் மறைந்து போகக்கூடிய ஒரு பயங்கரக் கனவோ என்று தோன்றுகிறது. சின்னபின்னமாக ஒன்றுக்கொன்று சம்பந்தம் இல்லாமல் அல்லவா இருக்கிறது! அது என்ன? எவ்வாறு இந்த நிலைமைக்கு வந்தது? ஒன்றும் எனக்கு விளங்கவில்லை.

ஒரு நாள் என் சிறிய ஓர்ப்படி ஒரு குத்தலான சிரிப்புடன், "நம் சின்ன ராணிக்குத்தான் விருந்தினரை உபசரிப்பதில் என்ன சிரத்தை! வந்தவர் இங்கிருந்து அசைவதாகத் தோன்றவில்லையே! எங்கள் நாளிலும் விருந்தினர்கள் வருவார்கள்; ஆனால் அவர்களை இவ்வளவு கவலையுடன் ஒருவரும் உபசரிக்கவில்லை எங்கள் கணவரைக் கவனிப்பதிலேயே நாங்கள் முழுகியிருப்போம். பாவம்! நிகில் முற்றும் நவநாகரிகமாகப் பிறந்ததன் பயன் இது. இங்கேயே இருக்கவேண்டும் என்றால் அவன் ஒரு விருந்தாளியாக வந்திருக்க வேண்டும். இப்போதோ அவன் தான் புறப்பட்டுப் போகவேண்டும்போல் தோன்றுகிறது. அடி ராக்ஷசி! அவன் முகத்தில் எவ்வளவு வேதனை குடிகொண்டிருக்கிறது என்பதை நீ தற்செயலாகக்கூடக் கவனிக்கவில்லையா?" என்றாள்.

இடைவெட்டான இந்தப் பேச்சு ஒன்றும் என்னைப் பாதிக்கவில்லை. என் பக்தி எத்தன்மையானது என்று அறிந்துகொள்ள இந்த ஸ்திரீகளுக்குத் திறமை ஏது? தியாகத்தின் மகத்துவமாகிய கவசத்தை அல்லவா நான் அணிந்திருந்தேன்! அந்தக் கவசத்தைத் துளைத்து அவமானப்படுத்த இந்த அம்புகளால் முடியுமா?

கொஞ்ச காலமாகத் தேசீய இயக்கத்தைப்பற்றிய பேச்சே எங்களுக்குள் ஓய்ந்துவிட்டது. அதற்குப் பதிலாக முற்றும் ஆண் பெண் சம்பந்தமான விஷயங்களைப் பற்றித்

தான் பேச்சு. சில சமயம் பழைய காலத்து வைஷ்ணவப் பாட்டுக்களுடன் தற்காலத்து ஆங்கிலக் கவிதைகளையும் சேர்த்துக்கொள்வோம். அதுமட்டும் அல்லாமல் நான் இது வரைக்கும் கேட்டிராத தாழ்ந்த சுருதியில் ஓர் இசையும் சேர்ந்துவிடும். அந்தச் சுருதியில்தான் வாஸ்தவமான ஆண்மை தொனிப்பதுபோல் எனக்குத் தோன்றுகிறது.

எங்களுக்குள் இப்போது ஒளிவு மறைவு எல்லாம் அற்றுப் போய்விட்டது. ஸந்தீப் பாபு இன்னும் எதற் காக இங்கே தங்க வேண்டும் என்பதற்கோ அடிக்கடி நாங்கள் சந்தித்துத் தனிமையாக ஏன் பேச வேண்டும் என்பதற்கோ ஏதாவது ஒரு வியாஜம் வேண்டும் அல்லவா? அதுகூட இனிமேல் அவசியமில்லை என்று ஆகி விட்டது. எனக்கு என்மேல் மட்டும் அல்ல, என் ஓர்ப்படி யின்மீதும் உலகத்தின் மீதுமே ஆத்திரம் மூண்டது. இனி மேல் பிராணன் போனாலும் என் அறையை விட்டு வெளிக் கிளம்புவதில்லை என்று சபதம் செய்துகொண்டேன்.

இரண்டு நாள் வரைக்கும் நான் அறையை விட்டு அசையவில்லை. இப்போதுதான் முதல் முதல் நான் எவ்வளவு தூரம் சென்றுவிட்டேன் என்பதைக் கண் டேன். வாழ்க்கையே எனக்குச் சப்பென்று ஆகிவிட்டது. ஒன்றையும் பார்க்கப் பிடிக்கவில்லை. உள்ளங்காலிருந்து உச்சந்தலை வரையில் ஏதையோ யாரையோ எதிர்பார்த் துக் காத்திருப்பதுபோல் அச்சமயம் உடம்பில் ரத்தம் விரைவாக ஓடத் தலைப்படும்.

ஏதாவது வேலை செய்வதில் மனத்தைச் செலுத்தக் கருதினேன். படுக்கை அறையில் தரை சுத்தமாகத்தான் இருந்தது. ஆனாலும் என் எதிரில் மறுபடியும் தேய்த்து அலம்பச் செய்தேன். பீரோவில் சாமான்கள் ஒருவிதமாக வைக்கப்பட்டிருந்தன. எல்லாவற்றையும் வெளியில் எடுத்து மீண்டும் வேறு விதமாக அடுக்கி வைத்தேன். கூந்தலைப் பின்னிக் கட்டிக்கொள்வதற்குக்கூட அன்று எனக்கு ஒழியவில்லை. அவசரமாக அதைக் கோதி முடிந்து கொண்டு சாமான் உள்ளில் ஒன்றும் சரியாக வைக்கவில்லை என்று அதைப்பற்றி இருப்பவர்களையெல்லாம் ஆட்டி வைத்தேன். சாமான் அறையில் சாமான்கள் குறை

திருந்தன. திருட்டுப் போய்க்கொண் டிருந்ததோ என்னவோ! ஆனால் தைரியமாக எந்த ஆளையும் கூப்பிட்டுக் கண்டிக்க என்னால் முடியவில்லை. ஏனென்றால், 'இவ்வளவு நாளாக உன் கண்கள் எங்கே போயிருந்தன?' என்று யாராவது நினைத்துக்கொண்டால்?

ஏதோ பிசாசு பிடித்துவிட்டது போலத்தான் நான் அன்று நடந்துகொண்டேன். மறுநாள் ஏதாவது படித்துப் பார்ப்போம் என்று நினைத்தேன். ஆனால் நான் என்ன படித்தேன் என்பது எனக்குத் தெரியாது. சிறிது நேரம் கழித்துப் பார்த்தபோது கையில் புத்தகத்துடன் நான் வெளித் தாழ்வாரத்தை நோக்கிக்கொண் டிருந்தேன் என்று தெரிந்தது. தாழ்வாரத்துக்கு அப்பால் வரிசையாகச் சில அறைகள் இருந்தன. அவ்வறைகளில் ஒன்று என் வாழ்க்கைக் கடலுக்கு அப்பால் சென்றுவிட்டது போலவும் அங்கே செல்லப் படகும் இல்லாமல் இருப்பது போலவும் எனக்குத் தோன்றிற்று. நான் என்னுடைய அருவமாகவும், அவ்விடத்தை விட்டு நகராமல் சூன்யமான வெளியை என்றென்றும் நோக்கிக்கொண் டிருக்கும்படி விதிக்கப்பட்டவளாகவும் நினைத்துக்கொண்டேன்.

நான் அவ்வாறு நின்றுகொண் டிருந்தபோது ஸந்தீப் பாபு கையில் தினசரிப் பத்திரிகையுடன் அறையை விட்டு வெளியே வருவதைக் கண்டேன். அவர் முகம் மிகவும் கலக்கமுற்றிருந்ததுபோல் காணப்பட்டது. எதிரில் இருந்த தாழ்வாரம், முற்றம் எல்லாம் அவருக்குக் கோபத்தை உண்டுபண்ணுவனபோல் தோன்றின. கையில் இருந்த தினசரியை விட்டு எறிந்தார்.

என்னால் இனிமேல் என் சபதத்தைக் காப்பாற்ற முடியாதுபோல் தோன்றிற்று. நாங்கள் வழக்கமாக உட்கார்ந்து சம்பாஷிக்கும் அறையை நோக்கி நான் கிளம்பியதும் என் ஓர்ப்படி என் பின்னால் நின்று, "பேஷ்! இது யாவற்றையும் தூக்கி அடித்து விட்டதே!" என்று கூறிவிட்டுச் சென்றாள். அதற்குப் பிறகு என்னால் அங்கே போக முடியவில்லை.

மறுநாள் காலையில் என் வேலைக்காரி வந்து, "அம்மா! சாமான்களுக்கு நாழிகை ஆகிவிட்டதே!" என்றாள். நான்

அவளிடம் சாவியை எறிந்து, "ஹரிமதியை எடுத்துக் கொடுக்கச் சொல்" என்று கூறிவிட்டுக் கையில் பூத் தையல் வேலையுடன் ஜன்னலுக்கு அருகே உட்கார்ந்தேன்.

உடனே ஓர் ஆள் வந்து, "ஸந்தீப் பாபுவிடமிருந்து" என்று சொல்லி, ஒரு கடிதத்தை என்னிடம் கொடுத்தான். என்ன எல்லை மீறிய தைரியம்! அந்த ஆள்தான் என்ன நினைத்திருப்பான்? கடிதத்தைப் பிரித்தபோது என் உள்ளத்தில் ஏதோ ஒரு நடுக்கம் உண்டாயிற்று. கடிதத் தின் மேல் விலாசம் ஒன்றும் காணவில்லை. "சுதேசியைப் பற்றி மிகவும் அவசரமான விஷயம் - ஸந்தீப்" என்ற வார்த்தைகள் மட்டும் இருந்தன.

நான் உடனே கையில் இருந்த தையல் வேலையை எறிந்துவிட்டு எழுந்து கண்ணாடியின் முன் என் கூந்தலைச் சரிப்படுத்திக்கொண்டேன். பிறகு வேறு ரவிக்கையை மட்டும் அணிந்துகொண்டு தாழ்வாரத்தைத் தாண்டிச் சென்றபோது வழக்கம்போல் பாக்கு நறுக்கிக்கொண்டு உட்கார்ந்திருந்த என் சிறிய ஓர்ப்படி, "எங்கே போகிறாய் அம்மா, சின்ன ராணி?" என்றாள். நான் தயங்கா மல், "டிராயிங் ரூமுக்குத்தான்" என்றேன்.

"இவ்வளவு சீக்கிரமா?"

நான் இதற்கு ஒன்றும் பதில் சொல்லாமல் அவளைத் தாண்டிச் சென்றதும் அவள் ஒரு சிருங்காரமான பாட் டைப் பாடத் தொடங்கினாள்:

"மோசிதலை நீரிற் குதித்திடும்
　　முதலையைப் போலந்த மீனைப்போல்
காதலி ராதை நடக்கையில்
　　கண்ணை மருண்டு விழுகிறள்
வெல்லும் இதுவென்று கண்டிலள்
　　வெறிதுகர் கண்டேன்று எண்ணிலள்
எல்லாம்ஒன் றாக நினைக்கிறள்
　　இடைவேறு பாடு தெரிந்திலள்."

நான் உள்ளே நுழைந்தபோது ஸந்தீப், 'பிரிட்டிஷ் அகாடமி'யார் வெளியிட்ட ஓவியங்களின் ஒரு படக் கேட்

லாக்கைப் பார்ப்பதில் ஆழ்ந்திருப்பதைக் கண்டேன். சித்திர கலை சம்பந்தமான விஷயங்களில் தாம் ஒரு நிபுணர் என்று அவருக்கு நினைப்பு.

ஒரு நாள் என் கணவர் அவரிடம், "உபாத்தியாயர் வேண்டும் என்றால் நீ இருக்கும் அளவும் ஓவியம் வரைபவர்களுக்குக் கவலை இல்லை" என்றார். அப்படிக் குத்தலாகப் பேசும் வழக்கம் என் கணவருக்கு இல்லை. ஆனாலும் கொஞ்ச காலமாக அவர் ஸந்தீபைச் சமயம் அகப்பட்ட போதெல்லாம் அம்மாதிரி பேசத் தவறுவதில்லை.

"ஓவியர்களுக்கு மட்டும் உபாத்தியாயர் தேவை இல்லை என்று ஏன் நினைக்கிறாய்?" என்று ஸந்தீப் பதிலுக்குக் கேட்டார்.

"கலை என்பது ஒரு சிருஷ்டி. ஒரு கலைஞனுடைய சித்திரத்தினின்றும் அந்தக் கலையைப்பற்றித் தெரிந்து கொண்டால் போதும் என்று நாம் திருப்தியடைய வேண்டும்" என்றார் என் கணவர்.

ஸந்தீப் இதைக் கேட்டுச் சிரித்தார். "ஏதோ விநயத்தை ஒரு மூலதனமாக வைத்து அதை உபயோகிக்க உபயோகிக்க நம் செல்வம் விருத்தியாகும் என்பதுபோல் நினைத்துக்கொண்டிருக்கிறாய். தம்மைப்பற்றிப் பெருமை இல்லாதவர்கள் ஜலத்தில் மிதக்கும் கொடிகள் போன்றவர்கள் என்பது என் தீர்மானம்."

இப்படி அவர்கள் பேசியபோது எனக்கு என்ன என்னவோ தோன்றியது. ஒரு சமயம் என் கணவர் விவாதத்தில் வெற்றியடைந்து ஸந்தீபின் கர்வம் பங்கமடைய வேண்டும் என்று விரும்புவேன். ஆனாலும் ஸந்தீபின் பின்வாங்காத கர்வந்தான் என் உள்ளத்தை அப்படிக் கவர்ந்தது என்று சொல்ல வேண்டும். சூரியன் எதிரிலும் பளீரென்று ஒளிவிடும் விலையுயர்ந்த வைரம்போல அது பிரகாசித்தது.

நான் அறைக்குள் நுழைந்தேன். என் காலடிச் சத்தம் அவருக்குக் கேட்கும் என்று தெரியும். ஆனாலும் அவர் காதில் படாதவர்போல், தம் புத்தகத்தில் ஆழ்ந்திருந்தார்.

சித்திரகலையைப்பற்றி அவருடன் பேச எனக்கு ஒரே பயம். அவர் கூறும் படங்களையும் விஷயங்களையும் கேட்கும்போது எனக்கு உண்டாகும் சங்கோசத்தை அடக்கி அசட்டையாகக் காட்டிக்கொள்ள எனக்கு வரவில்லை. ஆகவே வந்தபடியே போய்விடுவது என்று திரும்பியதும் ஸந்தீப் ஒரு பெருமூச்சுடன் நிமிர்ந்து என்னைப் பார்த்தார், திடுக்கிட்டவர்போல் அபிநயித்து, "ஹா! நீங்களா?" என்றார்.

அவருக்கு என்மீது இருந்த ஸ்வாதீனத்தில் நான் இரண்டு நாளாக அங்கே வராமல் இருந்ததுகூடப் பெரிய குற்றம் என்று சொல்லிக் காட்டுவதுபோல் இருந்தன அவர் குரல், கண், சொற்கள் எல்லாம். இப்படி அவர் என்னிடம் நடந்துகொள்வது மரியாதை அல்ல என்று எனக்குத் தெரியும். ஆனாலும் அதை வெளிக்காட்டத்தான் எனக்குச் சக்தி இல்லையே!

நான் ஒன்றும் பதில் சொல்லவில்லை. ஆனால் வேறு பக்கம் பார்த்துக்கொண் டிருக்கும்போதுகூட ஸந்தீபின் தீனமான பார்வை என் முகத்தை விட்டு அகலாமல் பதிந்திருப்பதை எவ்வாறு அறியாமல் இருக்க முடியும்? அவர் ஏதாவது சொன்னால் எனக்கும் சௌகரியமாக இருக்குமே என்று நினைத்தேன். இப்படி எவ்வளவு நாழிகை ஆயிற்று என்று தெரியாது. கடைசியில் இந்த அவஸ்தையை மேலும் பொறுக்க முடியாமல், "என்னிடம் நீங்கள் சொல்ல விரும்பிய விஷயம் என்ன?" என்று கேட்டேன்.

ஆச்சரியம் உற்றவர்போல் ஸந்தீப், "எப்போதும் ஏதாவது விஷயம் இருக்க வேண்டுமா? மனிதர்களுக்குள் நட்பே ஒரு குற்றமா? உலகில் யாவற்றிலும் உயர்ந்ததை நீங்கள் மிகவும் அற்பமாக நினைத்துவிட்டீர்களே! மனப் பூர்வமான பூஜையை நாயை அடித்துத் துரத்துவதுபோல் தள்ளிவிடுவதா?" என்றார்.

மீண்டும் முன்போல் எனக்குள் ஒரு நடுக்கம் உண்டாயிற்று. என்ன விலக்கினாலும் விலக்க முடியாத இக் கட்டான நிலைமை ஏற்படப்போவதை உணர்ந்தேன்.

சந்தோஷப்படுவதா பயப்படுவதா ஒன்றும் தெரிய வில்லை. அதன் அதிர்ச்சியைத் தாங்குவதற்கு என் மார்புக்கு வலிமை இருக்குமோ, என்னை மண்ணில் குப்புற விழச் செய்துவிடுமோ என்று எண்ணலானேன்.

சிரமப்பட்டு ஒருவாறு நிதானித்துக்கொண்டு, "தேசிய விஷயமாக அல்லவா என்னை வரும்படி சொல்லியனுப் பினீர்கள்! அதற்காக வீட்டு வேலையைக்கூட அப்படியே போட்டுவிட்டு வந்திருக்கிறேன்" என்றேன்.

"அதைப்பற்றித்தான் இப்போது சொல்ல வந் தேன்" என்றார் அவர் உத்சாகமற்ற சிரிப்புடன்; "நீங் கள்தாம் நாட்டின் சக்திரூபமாகத் தோன்றுகிறீர்கள் என்று உங்களிடம் சொல்லியிருக்கிறேனே. ஒரு நாட்டின் இயற்கை அமைப்பே அந்த நாடாகிவிடுமா? ஒருவரும் தேச படத்துக்காக உயிரை விடமாட்டார்கள். உங்க ளைப் பார்க்கும்போதுதான் என் நாட்டின் அழகு எனக்கு விளங்குகிறது. நீங்கள் உங்கள் கைகளினால் எனக்கு அபிஷேகம் செய்யும்போதுதான் என் நாட்டின் அநுமதியை நான் பெற்றதாக நினைத்துக்கொள்வேன். அதை உள்ளத்தில் வைத்துப் போற்றியவண்ணம் நான் இந்தச் சண்டையில் அடிபட்டு விழுந்தால் நாட்டின் வெறும் தரையிலா விழுவேன் என்று நினைக்கிறீர்கள்? அல்ல; அகன்ற ரத்தம் போன்ற சிவப்புக் கரை போட்ட புடைவையை நீங்கள் அன்று அணிந்திருந்தீர்கள்; அதைப் போன்ற புடைவையுடன் அன்புடன் விரிக்கப்பட்ட மடி யில் அல்லவா தாங்கிக்கொள்ளப்படுவேன்! அந்தக் காட் சியை என்னால் மறக்க முடியுமா? அதைப் போன்ற காட்சி களே வாழ்க்கைக்குத் தெம்பையும் சாவுக்கு ஆனந்தத்தை யும் அளிக்கின்றன."

இவ்வாறு ஸந்தீப் மேன்மேலும் ஆவேசத்தோடு பேசத் தொடங்கினார். அது வழிபாட்டின் ஆவே சமோ, கேவலம் உன்மாதமோ, எனக்குத் தெரியவில்லை. முதல்முதல் அவர் பேசியதைக் கேட்டபோது அவர் ஒரு மனிதனோ, கொழுந்து விட்டு எரியும் அக்கினியோ என்று திகைத்தேன். அந்த ஞாபகந்தான் இன்றும் எனக்கு ஏற்பட்டது.

என்னால் ஒரு வார்த்தையும் பேச முடியவில்லை. நெருப்பு ஒரு க்ஷணத்தில் சீறிக்கொண்டு கிளம்பி, சேமித்து வைத்திருக்கும் லேபீயின் சாமான்களை எரித்து நாசமாக்கும்போது நாம் யோசனை செய்துகொண்டு பேசாமல் இருக்க முடியுமா? அவர் எங்கே தம்மையே மறந்தவராக என் கையை வந்து பிடித்துக்கொள்வாரோ என்று நான் திகிலடைந்தேன். அவர் கண்களில் வேட்கை அனல் வீசிக்கொண் டிருந்தது.

"நாங்கள் இருப்பதும் இறப்பதும் உங்களைப் பொறுத்தது. அத்தகைய சக்தியை உடைய நீங்கள் வீட்டு வேலையையே தெய்வமாக்கிக்கொள்ளத் தீர்மானித்து விட்டீர்கள் போலும்!" என்றார் அவர். சற்றுப் பொறுத்து, "உங்களுடைய இந்த அற்புத சக்தியை அந்தப்புரத்துக் குள் அடைத்து வைப்பதா? வேண்டாம். நான் வேண்டிக் கொள்கிறேன். இந்தப் பொய்யான வெட்கத்தை இனிமேல் விட்டுவிடுங்கள். உங்களைச் சுற்றிலும் உள்ளவர்கள் என்ன வேண்டுமானாலும் சொல்லிக்கொள்ளட்டும். வெளி உலகத்துச் சுயேச்சையில் தைரியமாக இன்று இறங்கி விடுங்கள்" என்றார்.

தேசத்து வழிபாட்டுடன் என்னைத் தொழுவதையும் சேர்த்து ஒன்றாக அடித்து ஸந்தீப் வேண்டிக்கொண்ட போது என் உடம்பில் ரத்தம் கொதிக்கத் தொடங்கி விடும். என் சந்தேகம் தயக்கம் எல்லாம் கலையத் தொடங் கும். சித்திரகலை, ஆண் பெண் இவை சம்பந்தமாகவும், உண்மை, பொய் இவைகளின் வேறுபாட்டைப்பற்றியும் அவர் பேசும்போது, மிகுந்த அருவருப்பின் பேரில்தான் நான் பதில் சொல்லாமல் இருப்பேன். இப்போதோ அந்த அருவருப்பு மறைந்துபோய் எனக்கு ஒரே பெருமையாகத் தோன்றிற்று. நான் என்னை ஒரு தேவதையாகவே நினைத்துக்கொண்டேன். அந்தத் தேவதையின் ஒளி ஏன் என் முகத்தினின்றும் வீசக்கூடாது? நான் கூறும் வார்த்தை ஏன் ஒரு சிறந்த மந்திரம்போல் என் தேசத்தை வீராவேசத்துடன் கிளப்பலாகாது?

அப்போது திடீரென்று என் வேலைக்காரி க்ஷேமா பட படப்புடன் உள்ளே ஓடி வந்து, "அம்மா! என் சம்

பளத்தைக் கொடுத்துவிடுங்கள். நான் இதோ போய்விடுகிறேன். இந்த மாதிரியான பேச்சு என் ஜன்மத்திலும்...'' என்று இன்னும் என்னவோ சொல்லி இரையலானாள்.

''ஏன், என்ன சமாசாரம்?'' என்று கேட்டேன்.

என் சிறிய ஓர்ப்படியின் வேலைக்காரி தாகோ என்பவள் க்ஷேமாவைக் கண்டபடி வைதாளாம். அவள் இருந்த நிலைமையில் நான் பிறகு விசாரிக்கிறேன் என்று சொல்லி அனுப்ப முடியாதுபோல் தோன்றிற்று.

பெண்மை என்னும் தாமரைத் தடாகத்தின் அடியில் இருக்கும் குடும்ப வாழ்க்கையாகிய சேறு மேல்மட்டத்துக்கு வந்துவிட்டது. ஸந்தீப் அதை நன்றாகப் பார்ப்பதற்குள் அங்கிருந்து போய்விடுவதே நல்லது என்று விரைந்து உள்ளே சென்றேன்.

ஒன்றும் அறியாதவள்போல் புன்னகை தவழும் முகத்துடன் என் ஓர்ப்படி பாக்கு நறுக்கிக்கொண் டிருந்தாள். முன்பு பாடிய சிருங்காரமான பாட்டையே அவள் வாய் இன்னும் முணுமுணுத்துக்கொண் டிருந்தது.

''உங்கள் வேலைக்காரி தாகோ க்ஷேமாவைக் கண்டபடி திட்டினளாமே!'' என்று கேட்டேன்.

''திட்டினளா? நாசமாய்ப் போக! அவளை இப்போதே துடைப்பக்கட்டையால் அடித்துத் துரத்துகிறேன். அடாடா! உங்கள் பேச்செல்லாம் வேறு கெட்டுப்போய்விட்டதே! அந்தச் சிறுக்கி க்ஷேமாதான் இப்படி மட்டுமரியாதை இல்லாமல் நீங்கள் பேசிக்கொண் டிருக்கும்போது தொந்தரவு செய்வதா? இந்தக் குடும்பத் தொல்லையெல்லாம் உனக்கு எதற்கு அம்மா! நான் அதைப் பார்த்துக்கொள்ளுகிறேன். நீ போய்ச் சௌக்கியமாகப் பேசிக்கொண்டிரு'' என்றாள்.

இவ்வாறு அந்தப்புரத்தை விட்டு வெளியே வந்து ஸந்தீப் பாபுவைச் சந்தித்துப் பேசுவது மிகவும் விபரீதச் செய்கையாக யாவருக்கும் தோன்றவே ஒன்றும் பதில் சொல்லத் தெரியாமல் உள்ளே சென்றுவிட்டேன். எவ்

லாம் என் ஓர்ப்படியின் வேலே; அவள்தான் தன் வேலேக்காரியைக் கொண்டு இந்தச் சிறு சண்டையைக் கிளப்பியவள் என்று எனக்குத் தெரியும். ஆனாலும் பதிலுக்கு ஒன்றும் செய்யத் துணியாத நிலேமையில் நான் இருந்தேன். என்ன செய்வேன்?

நங்கூ வேலேயை விட்டுப் போகவேண்டும் என்று முதலில் எவ்வளவு கண்டிப்பாக என் கணவரிடம் சொன்னேனே அப்படியே கடைசிவரைக்கும் இருக்க என்னால் முடியாமல் போயிற்று!

"அப்பா! வாஸ்தவத்தில் என்மேல்தான் பிசகு. நாங்கள் பழைய காலத்தவர்கள். உங்கள் ஸந்திப் பாபுவின் மாதிரி எனக்கு அவ்வளவாகப் பிடிக்கவில்லே. ஆகவே நான்தான் நங்கூவிடம் சொல்லியிருந்தேன். ஆனால் சின்ன ராணிக்கு அது அவ்வளவு தவருகத் தோன்றும் என்று எனக்கு எப்படித் தெரியும்? நான் ஏதோ வேறுவிதமாக நினைத்துவிட்டேன். மடத்தனம்!" என்று என் ஓர்ப்படி வந்து என் கணவரிடம் கூறியதும் நான் மிகவும் குன்றிப் போய்விட்டேன்.

நாட்டின் சுதந்தரம் என்று உச்சியில் நின்று பார்க்கும் போது எவ்வளவோ சிறப்பாகத் தோன்றியது, கீழிருந்து பார்க்கும்போது ஒரே சகதியாகக் காட்சியளித்தால் கோபமும் பிறகு அருவருப்பும் உண்டாகாமல் எப்படி இருக்கும்?

நான் என் அறையில் ஜன்னலண்டை சென்று உட்கார்ந்துகொண்டேன். நம் இருப்பிடத்துக்கும் நமக்கும் ஒற்றுமை இருந்தால் வாழ்க்கை நடத்துவது எவ்வளவு எளிதாக இருக்கும் என்று என் மனம் எண்ணமிட்டது. என் ஓர்ப்படி பாக்கு நறுக்கிக்கொண்டு எவ்வளவு நிம்மதியாக உட்கார்ந்திருக்கிருள்! என் தினசரி வேலேகளில் எனக்கு மட்டும் இவ்வளவு சிரமம் ஏற்படுவானேன்? இவைகளெல்லாம் எப்படி முடியப்போகின்றனவோ? 'ஏதோ மயக்கம்; அந்த மயக்கத்தினின்றும் தெளிந்துவிட்டேன் என்று இருக்குமா? அல்லது இந்த ஜன்மத்தில் மீள முடியாத பள்ளத்தில் தள்ளப்படுவேனு?' எப்படி எனக்கு வாய்த்திருந்த பாக்கியத்தையெல்லாம் இழந்து என் வாழ்

வைப் பாழ்படுத்திக்கொண்டேன்? ஒன்பது வருஷங்களுக்குமுன் மணப்பெண்ணாகப் பிரவேசித்த இந்தப் படுக்கையறையின் சுவர்கள்கூட என்னை ஆச்சரியத்துடன் நோக்குவனபோல் தோன்றுகின்றன.

எம். ஏ. பரீக்ஷை கொடுத்துவிட்டு என் கணவர் ஊருக்கு வந்தபோது இந்த ஆங்கிலப் புஷ்பச் செடியை எனக்காகக் கொண்டுவந்தார். அதில் பூத்த மலர்கள் கொத்துக் கொத்தாக எவ்வளவு அழகாக இருந்தன! நாங்கள் இருவரும் யோசித்து அந்தச் செடியை அறை ஜன்னல் ஓரமாக வைத்தோம். அது அப்போது பூத்ததுதான். அப்புறம் பூக்கவே இல்லை. ஆனால் நான் மட்டும் அதற்கு ஜலம்விடும் வழக்கத்தை விடவில்லை. அதுவும் இன்னும் வாடிப் போகாமல்தான் இருக்கிறது.

என் கணவரின் போட்டோ ஒன்றைத் தந்தச் சட்டத்தில் பதித்து நான்கு வருஷமாக அந்தப் பிறையில் வைத்திருக்கிறேன். அந்தப் பக்கமாக என் கண்கள் செல்லும் போது தாமாகவே கீழே தாழ்ந்துவிடுகின்றன. சென்ற வாரம் வரையில், நான் தினமும் ஸ்நானம் செய்துவிட்டு அதற்குப் புஷ்பங்கள் சாத்துவது வழக்கம். என் கணவர் அதைக் கண்டால் என்னைக் கடிந்துகொள்வார்.

"எனக்குத் தகாத ஒரு பூஜ்யமான இடத்தில் நீ என்னை ஏற்றிவைப்பதைப் பார்க்க எனக்கு வெட்கமாக இருக்கிறது" என்று என்னிடம் ஒரு நாள் அவர் சொன்னார்.

"என்ன பேச்சு இது?"

"வெட்கம் மட்டும் அல்ல, எனக்குப் பொறாமையாகவும் இருக்கிறது" என்றார்.

"பொறாமையா? நன்றாக இருக்கிறது! யார்மேல் பொறாமை? சொல்லுங்கள்!"

"அந்தப் பொய்யான என் படத்தின்மேல்தான். இதிலிருந்து உனக்கு மதிப்பு உண்டாக்கும்படி நான் இல்லை என்று தெரிகிறது. நான் மிக உயர்ந்தவன் என்று காட்டக்கூடிய அசாதாரண மனிதனாக இருக்க வேண்டும் என்று

நீ விரும்புகிருய். அதனுல்தான் என்னை வேமுெருவனுகச் சிருஷ்டித்து வைத்துக்கொண் டிருக்கிருய்'' என்ருர்.

''இப்படிப் பேசினுல் எனக்குக் கோபந்தான் வருகிறது'' என்றேன்.

''என்மேல் கோபித்துக்கொண்டு என்ன பயன்? நீயே உனக்கு இஷ்டமான கணவனை வரித்துக்கொள்ள முடியாமல் செய்தவிதியைத்தான் நீ நோகவேண்டும். என்னை ஒரு தேவதையாகச் செய்து அந்தப் பிழையைச் சரிப்படுத்த முயன்றுகொண் டிருக்கிருய்.''

அவர் கூறியதைக் கேட்கச் சகிக்காமல் அன்று என் கண்களில் கண்ணீர்கூட வந்துவிட்டது. இப்போது அது நினைவு வரும்போது நான் அந்தப் படம் கண்களில் படாமல் பார்த்துக்கொள்ளுகிறேன்.

ஏனென்ருல் என் நகைப் பெட்டியில் வேமுெரு படம் இருக்கிறது. அன்று டிராயிங் ரூமை ஒழிக்கும்போது ஸந்தீபும் என் கணவரும் சேர்ந்து இருக்கும் அந்தப் படத்தை நான் எடுத்துக்கொண்டு வந்துவிட்டேன், இந்தப் படத்துக்கு நான் மலர்கள் தூவி அர்ச்சிப்பதில்லை. ஆனுல் அதை என் நகைப்பெட்டியில் பத்திரமாக வைத்திருக்கிறேன். அதை ரகசியமாக வைத்திருப்பதனுலேயே அதில் மோகம் அதிகமாக இருக்கிறது. அறைக்கதவைச் சாத்திவிட்டு நான் அடிக்கடி அதை எடுத்துப் பார்ப்பது உண்டு. இரவில் விளக்கை ஏற்றி வைத்துக்கொண்டு நான் அதை உற்று நோக்கிக்கொண்டே உட்கார்ந்திருப்பேன். ஒவ்வொரு நாளும் அதை விளக்கில் காட்டி எரித்துவிடலாம் என்று நினைப்பேன். ஆனுலும் அப்படிச் செய்யாமல் ஒரு பெருமூச்சுடன் அதை மீண்டும் என் நகைகளின் அடியில் ஜாக்கிரதையாக வைத்துவிடுவேன்.

அடி நாசமாய்ப் போகிறவளே! எத்தகைய அன்பு வெள்ளத்தில் தோய்ந்தது அந்த நகை ஒவ்வொன்றும்! ஐயோ! நான் ஏன் சாகக்கூடாது?

ஸ்திரீகளுக்குத் தயங்கி யோசிக்கும் சுபாவம் இல்லை. அவர்கள் இப்படியும் அப்படியும் பார்க்கமாட்டார்கள். நேராகச் சென்றுவிடுவார்கள். நம் நாட்டுப் பெண்

மணிகள் விழித்துக்கொள்ளும்போது அவர்கள் தயக்க மற்ற உறுதியான குரலில், "எனக்கு வேண்டும்" என்று கேட்பார்கள் என்று ஸந்தீப் என்னிடம் அடிக்கடி சொல்லுவார்.

"எனக்கு வேண்டும் - இதுதான் சிருஷ்டியின் ஆரம்பத்தில் அடிப்படையான சொல்" என்று ஸந்தீப் மேன் மேலும் சொன்னார்; "அதற்கு ஒரு நீதி இல்லை: வரம்பு இல்லை. அதுதான் அனலாகிச் சூரிய மண்டலங்களாகவும் நக்ஷத்திர மண்டலங்களாகவும் ஆகாயத்தில் பிரகாசிக்கிறது. மனிதனைச் சிருஷ்டிக்க வேண்டும் என்று அதற்கு ஆவல் பிறக்கவே அதை நிறைவேற்றுவதற்காக எவ்வளவோ யுகங்களாகக் கோடிக்கணக்கான மிருகங்களை அது ஒழித்துவந்தது. 'வேண்டும்' என்ற அந்தப் பயங்கரமான சொல்தான் ஸ்திரீ வடிவம் கொண்டிருக்கிறது. கோழைகளான புருஷர்கள் மண்சுவரை எழுப்பி மிக்க சிரமத்துடன் இந்தப் பிரவாகத்தைத் தடுக்க முயலுகிறார்கள். அது உடைத்துக்கொண்டு தம் பூசனித்தோட்டத்தில் பெருகி விடப்போகிறதே என்று அவர்களுக்குப் பயம். தங்களுக்குச் சௌகரியமானபடி அந்த வெள்ளத்தின் வேகத்தை அடக்கிவைக்க முடியும் என்று அவர்கள் எந்தக் காலத்திலும் நம்பிக்கொண்டிருக்கிறார்கள். ஆனால் அது மேன் மேலும் விருத்தியாகிக்கொண்டே இருக்கிறது. ஒரு சமயம் அது ஆழமான குளம்போல் நிச்சலமாக இருக்கும். ஆனால் மெதுவாக அதில் வெள்ளம் அதிகரிக்கவும் கரை உடைந்து, 'வேண்டும் வேண்டும்' என்ற பேரிரைச்சலுடன் பெருகி ஓடத் தலைப்படும்."

ஸந்தீபின் இந்த வார்த்தைகள் என் உள்ளத்தில் முரசு போல ஒலித்துக்கொண்டிருந்தன. என் மனத்தில் எழும் போராட்டத்தை யெல்லாம் அவை அடக்கிவிடுகின்றன. என்னைப்பற்றி யார் எது வேண்டுமானாலும் நினைத்துக் கொள்ளட்டுமே! என் படுக்கை அறையிலுள்ள பூச்செடியினாலும் படத்தினாலுந்தான் எனக்கு ஆகவேண்டியது என்ன? என்னை இழிவாக்கி அவமானப்படுத்த அவைகளுக்குச் சக்தி ஏது? சிருஷ்டியின் ஆரம்பத்தில் தோன்றிய அனல் அல்லவா எனக்குள் எரிந்துகொண்டிருக்கிறது!

ஜன்னலில் இருந்த பூச்செடியைப் பிடுங்கி வெளியே எறிந்து மாடத்திலிருந்த படத்தையும் எடுத்துவிட வேண்டும்போல எனக்குத் தோன்றிற்று. அப்படியே செய்துவிடுவதாக எழுந்தேன். ஆனால் மனத்தில் அம்பு போல் ஒரு வேதனை பாயவும் கண்களில் நீர் நிறைந்தது. கீழே விழுந்து, "ஐயோ! இதன் முடிவு என்ன? முடிவு என்ன?" என்று தேம்பி அழுதேன்.

# ஸந்தீப்

என்னைப்பற்றியுள்ள இந்த வரலாற்றைப் படிக்கும் போது, "யார் இது? ஸந்தீபா? கேவலம் ரத்தமும் சதையும் சேர்ந்து மூடிய ஒரு புத்தகம் போன்றவனு?" என்று என்னையே நான் கேட்டுக்கொள்கிறேன்.

பூமியானது சந்திர மண்டலம்போல் உயிரற்றது அல்ல. கடல்களினின்றும் நதிகளினின்றும் நீராவி அதைச் சுற்றிலும் சூழ்ந்திருக்கிறது. அதனுடைய தூசியே ஒரு போர்வை போல் அதைப் போர்த்திருக்கிறது. வெளியி லிருந்து பூமண்டலத்தை நோக்குபவன் அதைச் சூழ்ந்திருக் கும் நீராவி, தூசி இவைகளில் பட்டுப் பிரதிபலிக்கும் ஒளியை மட்டுமே காண்கிருன். மகா கண்டங்களின் சுவடு கள் நன்கு தென்படுவதில்லை.

இந்தப் பூமியைப்போல் ஜீவத்துடிப்புடன் கூடிய மனி தனும் தன் எண்ணங்களாகிய புகையினுல் சூழப்பட்டிருக் கிருன். அவனிடமுள்ள நிலப்பிரதேசங்களும் நதிகளும் பிறர் கண்ணுக்குத் தெரிவதில்லை. ஒளியும் நிழலுமாகவே அவன் காட்சியளிக்கிருன்.

என்னுடைய இந்த வரலாற்றைப் படிக்கும்போது உயிருள்ள ஒரு கிரகம்போல் ஒரு லக்ஷ்ய உலகத்தின் சித்திரத்தை நான் எடுத்துக்காட்டுவதாகத் தோன்று கிறது. ஆனுலும் நான் விரும்பியபடியும் நினைத்தபடியும் மட்டும் நான் இல்லை. எனக்கு விருப்பம் இல்லாதபடியும் நான் நினைக்காதபடியுந்தான் இருக்கிறேன். நான் பிறப்ப தற்கு முன்பே என்னைச் சிருஷ்டித்தாகிவிட்டது. எனக்கு இஷ்டமான இடத்தில் நான் பிறக்க முடியுமா? கிடைத்த தைக் கொண்டுதானே நான் காரியத்தைப் பார்த்துக் கொள்ள வேண்டும்.

வாழ்க்கையைப்பற்றி நான் அறிந்துகொண்டதில், உயர்ந்தோர் அனைவரும் குரூரமாகத்தான் இருப்பார்கள்

என்பது நிச்சயமாகத் தெரிகிறது. இரக்கம் என்பது சாதாரண மனிதர்களுக்கு ஏற்பட்டது. இரக்கம் இல்லாமை உயர்ந்தோருக்கே உரியது. சமமாக இருந்த பூமியின் மேற்பாகத்தைக் கிழித்துக்கொண்டு எரிமலை மேலே எழும்பிவிட்டது. அப்போது அது நியாயம் பார்க்கவில்லை. கொடுமையும் அநீதியுமே தேசத்தையும் மனிதனையும் வளம்பெறச் செய்கின்றன.

அதனால்தான் நானும் கொடுமையையே எடுத்து ஓதுகிறேன். அநீதத்தில்தான் விடுதலை இருக்கிறது. நெருப்புப் போன்ற அது வீணே எரிந்து சாம்பலாகாமல் இருக்கும்பொருட்டு எதையாவது அதற்கு இரையாக்கிக் கொண்டே இருக்கவேண்டும். "மனிதனோ தேசமோ அநியாயத்தை இழைக்கச் சக்தியற்றுப் போனால் பிறகு அவர்களால் ஒரு பயனும் இல்லை" என்று நான் ஒவ்வொருவருக்கும் சொல்லுகிறேன்.

இது கேவலம் இன்னும் எனது கொள்கையே! என்னுடன் ஒன்றாகக் கலக்கவில்லை. என் கவசத்தில் பொத்தல்கள் இருக்கின்றன. அவைகளின் வழியாக மிகவும் நுட்பமாகவும் மிருதுவாகவும் உள்ள ஒன்று வெளியே தெரிகிறது. நான் இந்த நிலைக்கு வருவதற்கு முன்னமே என்னிடம் உத்கிருஷ்டமானது எதுவோ அது சிருஷ்டிக்கப்பட்டுவிட்டது.

அப்போதைக்கப்போது என்னைப் பின்பற்றுபவர்களைக் கொடுமையாக இருக்கும் விஷயத்தில் நான் பரீக்ஷிப்பது உண்டு. ஒரு நாள் நாங்கள் 'பிக்னிக்' போயிருந்தோம். சமீபத்தில் ஆடு ஒன்று மேய்ந்துகொண்டிருந்தது. "இந்தக் கத்தியால் அந்த ஆட்டின் காலை உங்களுள் யார் வெட்டிக் கொண்டுவந்து என்னிடம் கொடுக்கப்போகிறீர்கள்?" என்று கேட்டேன். ஒருவராவது அப்படிச் செய்ய முன்வரவில்லை. அவர்கள் தயங்கியதைப் பார்த்து நானே போய் அந்தக் காரியத்தைச் செய்தேன். அந்தக் காட்சியைக் கண்டு ஒருவன் மூர்ச்சித்தே விழுந்துவிட்டான். நான் மட்டும் கலங்காமல் இருப்பதைக் கண்டதும் நான் மனத்தை ஜயித்தவன் என்று சொல்லி அவர்கள் என்னை நமஸ்கரித்தனர். ஆனால் என்னைப் பனிபோல் போர்த்திருந்த என்

எண்ணங்களை மட்டும் அன்று அவர்கள் கண்டனரே யன்றி என் வினைப்பயனால் இரக்கத்துடன் மிக மிருது வாகப் படைக்கப்பட்டிருந்த என் உண்மைக் குணத்தைக் கண்டுபிடிக்க அவர்களால் முடியவில்லை.

தற்சமயம் நிகில், விமலா இவர்களிடம் நான் மேன் மேலும் ஈடுபட்டுவருகிறேன். ஆனாலும் இதிலும் அடியில் ஆழ்ந்து மறைந்திருக்கும் விஷயங்கள் எவ்வளவோ இருக் கின்றன. இந்தக் கொள்கைகளை மேற்கொள்ளும் வியாதி யானது என் வாழ்வை ஒரு விதமாக மாற்றிவருகிறது. ஆனால் நான் அதற்கு முற்றும் வசமாகிவிடவில்லை. ஆகவே என் வாழ்க்கை இருவிதமாக இருக்கிறது. அவ் விரண்டும் ஒன்றுக்கொன்று பொருத்தம் இல்லாமல் இருக்கின்றன. என் உள் இயல்பை நான்கூடப் பார்க்க வொட்டாமல் மறைத்துவைக்க முயல்கிறேன். இல்லாவிட் டால் அது நான் போட்டிருக்கும் திட்டங்களைக் கெடுப்ப துடன் என் வாழ்வையே வீணாக்கிவிடும்.

ஒன்றுக்கொன்று ஒவ்வாத விஷயங்களுடன் கூடிய மனித வாழ்க்கையே நிரந்தரமற்றது. அது வெற்றிகர மாக இருக்கவேண்டும் என்று ஆண் மக்களாகிய நாங்கள் எங்கள் இஷ்டப்படி அதை அச்சில் வார்த் தெடுக்க விரும்புகிறோம். உலகத்தையே வென்ற அலெக் சாண்டர் போன்ற மகாவீரர்கள் முதல் அமெரிக்கா தேசத்துக் கோடீசுவரர்கள் வரையில் வாள், நாணயம் போன்ற உருவத்தில் தம்மை வார்த்துக்கொண்டு வெற்றி யுடன் வாழ்கிறார்கள்.

எனக்கும் நிகிலுக்கும் உள்ள பெரிய விவாதம் என்ன வென்றால், "நம்மையே நாம் அறியவேண்டும்" என்று நான் கூறுவதுபோல்தான் நிகிலும், "நம்மையே நாம் அறிந்து கொள்ள வேண்டும்" என்று சொல்லுகிறான். ஆனால் அவன், "அறிந்துகொள்ள வேண்டும்" என்று சொல்வது அதற்கு நேர்விரோதமான அர்த்தத்துடன் விளங்குகிறது.

"நீ கூறுவதுபோன்ற வெற்றி ஆத்மாவையே இழப்ப தாகும். ஆத்மா வெற்றியைக் காட்டிலும் மேம்பட்டது அல்லவா?" என்று நிகில் ஒரு சமயம் என்னிடம் சொன்னான்.

"நீ சொல்லுவது என்னவென்றே விளங்கவில்லை" என்று நான் பதில் சொன்னேன்.

"அப்படியானால் என்ன செய்வது? ஒரு யந்திரத்தை நன்ருகத் தெரிந்துகொள்ளலாம். வாழ்க்கை அப்படிப் பட்டதல்ல. அதை ஒரு யந்திரத்தைப்போல் தெரிந்து கொள்ள முயன்ருல் அவ்வறிவு உண்மைக்கு ஒட்டி வராது. ஆத்மாவை வெற்றியைப்போல் நீ காண முடியாது. ஆகவே வெற்றி வேண்டும் என்ருல் ஆத்மாவை நீ இழக்க வேண்டியதுதான்" என்ருன்.

"இந்த அற்புதமான ஆத்மா எங்கேதான் இருக்கிறது, சொல்லேன்" என்றேன்.

"பிரம்ம ஸ்வரூபமாகத் தன்னை அறிந்து உலக வெற்றிக்கு மேற்பட்டு நிற்கும் இடத்தில் ஆத்மாவைக் காணலாம்."

"நமது தேசீய இயக்கத்துக்கும் இதற்கும் என்ன சம்பந்தம்?"

"இரண்டும் ஒன்றுதான். தேசம் ஒன்றே நம்முடைய நோக்கம் என்று ஆகிவிட்டால், ஆத்மாவைப் பறிகொடுத்து அது வெற்றியடைகிறது. பரமாத்மாவே யாவற்றிலும் மேம்பட்டவர் என்ற ஞானம் ஏற்பட்டால் அப்போது அது வெற்றியடையாவிட்டாலும் தன் ஆத்மாவைப் பறி கொடுக்காமல் காப்பாற்றிக்கொண்டுவிடும்."

"சரித்திரத்தில் இதற்கு உதாரணங்கள் உண்டா?"

"மனிதன் எவ்வளவோ உயர்ந்தவன். வெற்றியும் வேண்டாம்; அதற்கு உதாரணமும் வேண்டாம் என்று இருக்க அவனுல் முடியும். விதையில் மலரின் உருவத்தை நாம் பார்க்க முடியுமா? அதுபோல் எடுத்துக் காட்டுவதற்கு உபமானங்கள் இல்லாமல் இருக்கலாம்."

நிகில் கூறுவது ஒன்றும் எனக்கு விளங்கவில்லை என்று சொல்வதற்கில்லை. அதுதான் எனக்கு ஆபத்தாக முடிகிறது. நான் இந்தியாவில் பிறந்தவன். அதன் பாரமார்த்திகக் கொள்கையின் விஷம் என் ரத்தத்தில் கலந்

திருக்கிறது. வைராக்கிய மார்க்கத்தில் செல்லல் ஆகாதென்று நான் எவ்வளவு உரக்கச் சொன்னபோதிலும் நானே முற்றும் அதைப் பின்பற்ருமல் இருக்க முடியவில்லை. இம்மாதிரி விபரீதங்கள் நம் நாட்டில் எவ்வளவோ நேருகின்றன. நம்முடைய மதப்பற்றும் இருக்க வேண்டும்; தேசீய உணர்ச்சியும் வேண்டும். பகவத் கீதையும் வேண்டும்; கூடவே வந்தே மாதரமும் வேண்டும் என்ருல் முடிவில் எல்லாம் கெட்டுப்போகின்றன. இங்கிலீஷ் பாண்டையும் நமது நாகஸ்வரத்தையும் சேர்த்து வாசிப்பதுபோல் இது இருக்கிறது. இந்தக் குழப்பத்தை யெல்லாம் ஒழிப்பதையே என் வாழ்க்கையின் முக்கிய வேலையாகக் கொள்ள வேண்டும்.

மேல்நாட்டுப் போர்வீரர்களின் நீதி அல்லவா நமக்கு வேண்டும்? வாழ்க்கையாகிய போர்க்களத்துக்குச் செல்லும்போது உடன் கொண்டு போவதற்கென்று இயற்கை அன்னை நமக்கு அளித்திருக்கும் ராகத் துவேஷமாகிய துவஜத்தைப்பற்றி நாம் அப்போது வெட்கமடைய வேண்டாம். சேற்றில் மலரும் தாமரைபோல் ராகத் துவேஷமும் பரிசுத்தமாகவும் அழகாகவும் இருக்கிறது. சேற்றில் உதித்தாலும் அதைச் சுத்தமாக்குவதற்கு, 'பியர்ஸ் ஸோப்' தேவையில்லை அல்லவா?

சில நாட்களாக என்னை ஒரு சந்தேகம் பாதித்துக் கொண்டிருந்தது. விமலாவுக்கும் எனக்கும் என்ன? அவள் வாழ்க்கையோடு என் வாழ்க்கையை நான் ஏன் சிக்கும்படி செய்துகொண்டேன்? அகப்பட்டவர்களின் மீதெல்லாம் முட்டி மோதிக்கொள்ளும்படி நான் ஒரு மரக் கட்டையா?

விமலாவை என் இச்சைக்கு விஷயமாக்குவதில் எனக்கு ஒன்றும் அவமானம் இல்லை. அவளும் என்னை விரும்புகிருள் என்பதில் சந்தேகம் இல்லை. ஆகவே அவளை நியாயமாக என்னுடையவளாகவே நான் கருதுகிறேன். பழம் பழுத்துக் கிளையில் தொங்குகிறது. அது சாசுவதமாக அங்கேயே இருக்குமா? பழுத்த பழம் என்றென்றும் காம்பைப் பற்றிக்கொண் டிருக்க முடியாது. அதன் சுவை முழுவதும் என் பொருட்டல்லவா அதற்குள் நிறைந்திருக்

கிறது! என் கையில் தன்னைத் தானே அளித்துக்கொள் வதே அதன் தர்மம்; அதன் இயல்பு. ஆகவே நான் அதைப் பறிக்காமல் வீணாக்குவது முறையா?

அது எனக்கு ஒரு பந்தம் ஆகிக்கொண் டிருக் கிறதே; அதுதான் சிரமமாக இருக்கிறது. நான் ஆளப் பிறந்தவன் அல்லவா? ஜனங்களே எனக்கு ஏற்ற குதிரை. கையில் கடிவாளத்தைப் பிடித்துக்கொண்டு அதை என் இஷ்டப்படி செலுத்த வேண்டியவன். நான் போகும் இடம் எனக்கு மட்டுந்தான் தெரியும். குதிரைக்கு ரோட்டி லுள்ள கல்லும் மண்ணுமே தெரியும்! இந்தக் குதிரை இப்போது கனைத்துக்கொண்டு என் வாயிலில் வந்து நிற்கிறது. ஆனால் கிடைத்தற்கரிய இந்தச் சந்தர்ப்பத்தை ஒவ்வொரு நாளும் நழுவிப்போகும்படி ஏன் விட்டுக் கொண்டிருக்கிறேன்?

நான் ஒரு புயற்காற்று என்றும் காற்றில் அடித்துச் சிதறிக் கிடக்கும் மலர் என் வழியில் ஒன்றும் இடையூறு ஆகாது என்றும் நினைத்திருந்தேன். நான் புயற் காற்று அல்ல; மலரைச் சுற்றிச் சுற்றிப் பறந்துகொண் டிருக்கும் வண்டாக அல்லவா இருக்கிறேன்! ஆகவே நான் கூறியதுபோல் மனிதன் எண்ணங்களினால் ஏற்படும் தோற்றம் மேலுக்குத்தான். உள்ளே இருக்கும் நிஜ மனிதன் எல்லாரையும் போலத்தான் இருக்கிறான். என் உண்மையான இயல்பை நன்கு அறிந்து என் வரலாற்றை யாராவது எழுதப் புகுந்தால் அந்தத் தரித்திரம் பிடித்த பஞ்சுவைப் போலவோ இல்லாவிட்டால் நிகிலைப் போலவோதான் என்னையும் எழுதிவிடுவான்.

நேற்று இரவு என் பழைய குறிப்புப் புத்தகத்தை எடுத்துப் புரட்டிப் பார்த்தேன். அப்போது நான் பி. ஏ. பாஸ் செய்திருந்தேன். என் புத்தி தத்துவ ஆராய்ச்சியில் இறங்கியிருந்தது. அப்போதே என்னைப் பற்றியாவது பிறரைப்பற்றியாவது கற்பனைகளுக்கு ஒன்றும் இடம் கொடுக்காமல் உண்மை என்னும் பலமான அஸ்திவாரத்தில் என் வாழ்க்கைக் கட்டிடத்தை எழுப்புவ தென்று பிரதிக்கினை செய்துகொண்டேன். ஆனால் வாஸ்தவமாக நடந்தது என்னவென்றால் கட்டிடத்தின்

பலமான அஸ்திவாரம் எங்கே? அது முற்றும் இடை வெளிகளே அதிகமாக உள்ள ஒரு வலைபோல் ஆகிவிட்டது. நான் என்ன பாடுபட்டாலும் பயனில்லை. நான் ஜாக்கிரதையாகச் சென்றுகொண்டிருப்பதாக நினைத்துக்கொண்டிருக்கும்போது அந்த இடைவெளிகளில் சிக்கிக்கொள்கிறேன். ஏனென்றால் வருத்தமும் தயையும் என்னைப் பாதிக்கத் தொடங்கிவிட்டன.

"எனக்கு வேண்டியது இதோ இருக்கிறது. நான் எடுத்துக்கொள்கிறேன்" என்பதுதான் சந்தேகமற்ற நேரான முறை. இதை உறுதியாகப் பின்பற்றுபவர்களே முடிவில் வெற்றி அடைவார்கள். ஆனால் அது அவ்வளவு எளிதாகக்கூடாதென்று தேவர்கள் தயை என்னும் கன்னிகையை அனுப்பி மனிதனின் கவனத்தைக் கவர்ந்து அவன் கண் பார்வையையும் மழுங்க அடித்துவிடுகிறார்கள்.

பாவம்! விமலா வலையில் அகப்பட்ட மான்போல் தத்தளித்துக்கொண்டிருக்கிறாள். அவள் கண்களில் பயத்துடன் கூடிய என்ன தீனமான பார்வை விளங்குகிறது! தன் பந்தங்களினின்றும் விடுபட அவள் எவ்வளவு பாடுபடுகிறாள்! நல்ல வேட்டைக்காரனுக்கு இந்தக் காட்சி மிகக் களிப்பை உண்டாக்கும். அப்படியே நானும் மகிழ்ச்சியடைகிறேன். என்றாலும் என் மனத்தில் வருத்தமும் தோன்றுகிறது. ஆகையினால்தான் தயங்கிக் கொண்டு பின்னும் கயிற்றை இழுத்து வலையை இறுக்காமல் பேசாமல் இருக்கிறேன்.

எவ்வளவோ சமயம் நான் தாவிச் சென்று அவளை என் மார்புறத் தழுவிக்கொண்டிருக்கலாம். அவள் ஒன்றும் ஆக்ஷேபித்திருக்க மாட்டாள். அப்போது வாழ்க்கையையே முற்றும் வேறு விதமாக மாற்றக்கூடிய நெருக்கடியான நிலைமை நேரப்போகிறதென்று அவளும் அறிவாள். சிந்திக்க முடியாத அந்தப் படுகுழியின் முன் நிற்கும்போது பயத்தினால் அவள் முகம் வெளுத்துப்போனாலும் அவள் கண்கள் ஒரு பயங்கரமான மகிழ்ச்சியுடன் பிரகாசிக்கும். அத்தகைய நிலை ஏற்படும்போது காலமே நின்று போய்விட்டதுபோல் தோன்றும்.

ஆனால் இப்படிப்பட்ட சமயங்களை நான் கைவிட்டிருக்கிறேன். தைரியமாகக் கைக்கு எட்டியதை வாய்க்கு எட்டும்படி நான் செய்யவில்லை. எனக்குள் கிடந்த ஏதோ ஒன்று அப்போது என் முன் நின்று வழியை அடைத்து விட்டது என்று இப்போதுதான் அறிகிறேன்.

ராமாயணத்தின் நிஜமான கதாநாயகனான ராவணன் இப்படித்தான் துர்க்கதியை அடைந்திருப்பான் என்று நினைக்கிறேன். சீதையை உடனே தன் மனைவியாக்கிக் கொள்ளாமல் அவள் விருப்பத்தை எதிர்பார்த்து அசோகவனத்தில் வைத்திருந்தான் அல்லவா? பெருங் குணத்திலுள்ள இந்த ஒரு பலவீனந்தான் காரியத்தை முற்றும் கெடுத்துவிட்டது. தேசத் துரோகியும் பிராதிரு துரோகியுமான விபீஷணனையும் போனால் போகிறது என்று தயவுடன் விட்டதன் பயன்தான் அவனே இறக்கும்படி நேர்ந்தது.

வாழ்க்கையின் சோக சம்பவங்களெல்லாம் இப்படித் தான் ஏற்படுகின்றன. முதலில் ஒரு மூலையில் சிறிதாகக் கிடந்தது முடிவில் முழுக் கட்டிடத்தையுமே பெயர்த்துத் தள்ளிவிடுகிறது. நாம் எதற்காக ஏற்பட்டோம் என்பதை மனிதனே அறியாமல் இருப்பதுதான் உண்மையாக வருந்தக்கூடிய விஷயம்.

அப்புறம் நம் நிகில். அவன் ஒரு பைத்தியம். அவனைப் பார்த்து எனக்கு எவ்வளவு சிரிப்பு வந்தாலும் அவன் என் நண்பன் என்ற எண்ணத்தை மட்டும் அகற்ற என்னால் முடியவில்லை. முன்பெல்லாம் நான் அவன் கூறுவதைக் கவனிப்பதில்லை. ஆனால் வரவர அது எனக்கு வேதனையையும் அவமானத்தையும் உண்டாக்கத் தொடங்கிவிட்டது. நான் பழையபடி உற்சாகத்துடன் அவனுடன் வாதாடினாலும் அது உண்மையான உற்சாக மாகத் தோன்றவில்லை. சில சமயம் அவன் கூறுவதை ஒப்புக்கொள்வதுபோல்கூட நான் பாவனை செய்யத் தொடங்குகிறேன். ஆனால் எனக்காவது நிகிலுக்காவது அவ்வாறு பொய்யாக நடக்கும் சுபாவம் இல்லை. இந்த விஷயத்தில் நாங்கள் இருவரும் ஒன்றுதான். சில கால

மாக அவன் கண்ணில் தென்படாமலே இருக்க வேண்டும் என்றும் விரும்புகிறேன்.

இவை யாவும் பலவீனத்தின் அடையாளங்கள். ஒரு பிழையை நாம் ஒப்புக்கொண்டதுமே அது விடாப் பிடியாக நாம் என்ன விலக்க முயன்றாலும் முடியாமல் நம்மைப் பற்றிக்கொண்டுவிடுகிறது. இம்மாதிரி விஷயங் கள்தாம் உலகின் பெரும் உண்மைகள். இத்தகைய உண்மை ஆழ்ந்த நட்புக்கு இடையூறாக இருக்கலாகாது என்பதை நிகிலுக்கு எடுத்துச் சொல்ல வேண்டும்.

என் உறுதி மிகவும் தளர்ந்துவிட்டது என்பதை நான் எவ்வாறு மறுக்க முடியும்? விமலாவை வசமாக்கி யது இந்தப் பலவீனம் அல்ல; தங்கு தடையற்ற என் ஆண்மையின் ஜ்வாலை அல்லவா அவளைச் சுட்டது? அந்த ஜ்வாலையின் பிரகாசத்தைப் புகை சூழ்ந்து மங்கும்படி செய்யும்போது அவளும் கலங்கிப் பின்னடைவாள். அப்போது அவள் மனம் முற்றும் மாறி என் கழுத்தில் இட்ட மாலையைக் கழற்றி எடுத்துக்கொள்ள நினைப்பாள். ஆனால் அது அவளால் முடியாது. அதற்காக அதைப் பாராமல் இருப்பதன் பொருட்டு அவள் தன் கண்களை மூடிக்கொள்வாள்.

அது எப்படியானாலும் நான் மட்டும் கோடு போட்ட வழியினின்றும் திரும்பலாகாது. இந்தச் சமயத்தில் தேசத் தொண்டைக் கைவிடவே கூடாது. விமலாவையும் தேசத்தையும் ஒன்றாகச் செய்துவிடுகிறேன். நாட்டின் மனச் சாட்சியாகிய திரையை அப்பால் தள்ளிய கடுமை யான மேல்காற்று விமலாவின் தலையினின்று மனைவியின் முட்டாக்கையும் அடித்துக்கொண்டு போய்விடும். அவ் வாறு திறந்த தலையுடன் நிற்கும்போது கூச்சம் ஏற் படாது. 'வந்தே மாதரம்' என்ற பாயை விரித்துக் கொண்டு ஜனங்களுடன் கடலில் கப்பல் அசைந்து செல் கிறது. அதுதான் என் காதலுக்கும் சக்திக்கும் உற்ற தொட்டிலாகும்.

தனக்கு வாய்த்த விடுதலையைக் கண்டவுடன் விமலா வின் பந்தங்கள் அவளுக்குத் தெரியாமலே தாமாக அவளை விட்டு நீங்கிவிடும். சர்வ நாசமாக்கும் இந்தச் சக்தியின்

அழகில் மயங்கி அவள் தானும் குரூரமாக இருக்க ஒரு கணமும் தயங்க மாட்டாள். வாழ்வுக்கு ஆதாரமான இந்தச் சக்தி, தளராத அதனுடைய வன்மையினால் உலகைச் சிறப்பாக்குகிறது. அப்படிப்பட்ட சக்தி விமலாவுக்கு அமைந்திருக்கிறது.

புருஷர்களால் இடப்பட்ட தளைகளினின்றும் ஸ்திரீகளை மட்டும் விடுவித்துச் சுதந்தரத்தை அளித்தால் ஈவு இரக்கமற்ற மகாகாளியின் ஸ்வரூபமாகவே அவர்கள் விளங்குவார்கள். நான் காளியை வழிபடுபவன். உலகத்தையே நாசமாக்கும் அவள் சந்நிதியில் விமலாவை வைத்து ஒரு நாள் உண்மையாகவே நான் பூஜிக்கப் போகிறேன். அதற்கு நான் தயாராக வேண்டும். இனிமேல் நாங்கள் இருவரும் பின்வாங்குவது என்பது சாத்தியம் அல்ல. நாங்கள் ஒருவரை ஒருவர் களவாடினாலும் பகைத்தாலும் இனி விட்டுப் பிரிவது என்பது மட்டும் நடக்காது.

# நிகிலேசன்

ஆவணி மாதத்து வெள்ளப் பெருக்கில் எங்கும் களிப்பும் உற்சாகமும் நிறைந்திருக்கின்றன. சிறு நெற் கதிர்கள் இளங்குழவிகளின் மேனியின் தளதளப்புடன் விளங்குகின்றன. எங்கள் வீட்டுக்கு அடுத்தாற்போல இருக்கும் தோட்டத்தில் ஜலம் பாய்ந்திருக்கிறது. காலை இளம் வெயில் நீல நிறமான வானத்தினின்றும் அன்பைப் பொழிவதுபோல் பூமியின்மீது படிந்திருக்கிறது. நான் ஏன் வாய்திறந்து பாடக்கூடாது? உருக்கிவிட்ட வெள்ளிபோல் ஓடும் நதி தூரத்தில் தெரிகிறது. மரத்தில் இலைகள் மின்னுகின்றன. வயல்களில் நெற்பயிர்கள் காற்றில் அசையும்போது தங்க நிறத்துடன் ஒளி வீசுகின்றன. இப்படிப்பட்ட இந்த ஆவணி மாதத்தில் நான் மட்டும் பேச்சற்று இருக்கிறேன். என் இருதயத்தில் கதிரவனது ஒளி பட்டாலும் அது மீண்டும் வெளியே பிரதிபலிக்கவில்லை.

எனக்கு உணர்ச்சியை வெளியிடும் சக்தி இல்லை. அல்லும் பகலும் பிரியாமல் என்னுடன் யார் சேர்ந்திருக்க முடியும்? விமலா ஜீவசக்தி நிறைந்து விளங்குகிறாள். அதனால்தான் விவாகமாகி ஒன்பது வருஷங்கள் ஆகியும் அவளிடம் எனக்கு அலுப்புத் தோன்றவே இல்லை. என் வாழ்க்கையிலோ அசைவற்ற ஆழந்தான் தென்படுகிறதே யன்றி ஓட்டத்தின் சலசலப்பு இல்லை. ஏற்றுக்கொள் வதைத் தவிர ஓட்டம் இல்லை. ஆகவே என் சகவாசத்தில் உபவாசத்தின் அநுபவந்தான் கிட்டும். உற்ற துணை இல் லாமல் விமலா எவ்வாறு ஏங்கியிருப்பாள் என்பது எனக்கு இப்போது நன்றாகப் புலப்படுகிறது.

நான் யார்மீது குற்றம் கூறுவது? கவி வித்யா பதியைப்போல நானும் புலம்ப வேண்டியதுதான்:

**மாதம்இ தாவணி ஆதலால் - அவ்**
**வானம் பிளந்து பொழியுது**

**மேதினி எங்கணும் வெள்ளங்காண் - என்**
**வீடு வெறிச்சென் றிருக்குதே!**

என் வீடு பாழடைந்துதான் கிடக்கவேண்டும். ஏனென்ருல் அதன் கதவுகள் திறக்க முடியாமல் இருக்கின்றன. ஆனுல் வீட்டின் தேவதை வெளியில் உட்கார்ந்திருப்பதை நான் இதுவரையில் அறியவில்லை. அவன் நான் இட்ட பலியை ஏற்றுக்கொண்டு எனக்கு வரம் அளித்திருக்கிருன் என்று நம்பியிருந்தேன். ஆனுல் அந்தோ! வீடு இன்னும் சூனியமாகத்தான் கிடக்கிறது.

ஒவ்வொரு வருஷமும் இந்த மாதத்தில் ஸாமல்தா நதியில் நாங்கள் படகில் ஏறிப் போய்வருவது வழக்கம். பாட்டுக்குப் பல்லவியைத் திரும்பத் திரும்பப் பாட வேண்டும் என்று நான் விமலாவிடம் கூறுவது உண்டு. ஒவ்வொரு பாட்டுக்கும் முதலில் ஏற்பட்ட பல்லவி சலசல என்ருேடும் நதிமீது அடித்துச் செல்லும் மழைக்காற்றும், நதியின் இனிய பேச்சைக் குனிந்து காது கொடுத்துக் கேட்பதுபோல இருக்கும் பசுமையான புல்லுத் தரைகளும் கொண்ட இயற்கையில்தான் அமைந்திருக்கிறது. சிருஷ்டியின் ஆரம்பத்தில் அந்தப் பரந்த இயற்கை வெளியிலேதான் ஒரு புருஷனும் ஸ்திரீயும் முதல்முதல் ஒருவரை ஒருவர் கண்டனர். ஆகையால் நாமும் வருஷத்தில் ஒரு தடவையாவது ஈருள்ளங்கள் சேரும்போது உண்டாகும் பரிசுத்தமான நாதத்துக்குச் சரியாக நம் அன்பைப் புதிதாகச் சுருதி கூட்டுவதற்கென்று இயற்கைக்குத் திரும்பிச் செல்ல வேண்டும்.

கல்யாணமான முதல் இரண்டு வருஷங்களும் நான் கல்கத்தாவில் படித்துக்கொண் டிருந்தேன். அதற்குப் பிறகு ஏழு வருஷ காலமாக நாங்கள் இருவரும் சேர்ந்து இணை பிரியாமல் இருந்திருக்கிருேம். அதே ஆவணி மாதம் இப்போது வந்திருக்கிறது. அதை எப்படி நான் கவனிக்காமல் இருப்பேன்? விமலாவுக்கு அது ஞாபகம் இருக்கிறதா? ஒன்றும் அதைப்பற்றி என்னிடம் சொல்லவில்லை. என்னைச் சுற்றிலும் எல்லாம் பேச்சில்லாமல் கிடக்கின்றன.

"மாதம்இ தாவணி ஆதலால்- அவ்
வானம் பிளந்து பொழியுது
மேதினி எங்கணும் வெள்ளங்காண் - என்
வீடு வெறிச்சென் றிருக்குதே."

காதலர்கள் பிரிந்துபோனதால் வீடு சூன்யமாகி விட்டது. என்றாலும் அந்தச் சூனியத்தின் மத்தியில் சங்கீதம் அற்றுப்போகவில்லை. ஈருள்ளங்கள் வேறுபட்டதால் சூனியமான வீடோ நிச்சப்தம் குடிகொண்டு பயங்கரமாகத் தோன்றுகிறது. வேதனையோடு கத்தும் சப்தங்கூட அங்கே கேட்க முடியாது.

இந்த வேதனைக் கத்தலை நான் நிறுத்தவேண்டும். நான் கஷ்டப்படும் வரையில் விமலாவுக்குச் சுதந்தரம் கிடைக்காது. அவளுக்குப் பூரண சுதந்தரத்தை அளிக்க வேண்டும். இல்லாவிட்டால் அசத்தியத்தினின்றும் எனக்கு ஒருபோதும் விடுதலையே ஏற்படாது.

எனக்கு ஒரு விஷயம் விளங்குகிறது. ஸ்திரீ புருஷர்களது காதல் நெருப்பை நன்றாக விசிறி ஒரே அடியாகப் பற்றிக்கொள்ளும்படி செய்தாகிவிட்டது. இனிமேல் அதை நிதானமாக எரிய விடுவதென்பது மிகவும் அசாத்தியம். தன் ராகத் துவேஷத்தையே மனிதன் தெய்வமாக வழிபடத் தொடங்கிவிட்டான். ஆனால் அதன்முன் இனிமேல் நரபலி என்பது கூடாது.

ஒரு புத்தகத்தை எடுத்து வருவதற்காக இன்று என் படுக்கை அறைக்குள் சென்றேன். பகல்வேளையில் நான் அங்கே சென்று வெகு நாட்கள் ஆகிவிட்டன. இன்று வெளிச்சத்தில் அதைப் பார்த்தபோது என் மனத்தில் ஒரு வேதனை உண்டாயிற்று. கட்டிக்கொள்வதற்கென்று கொசுவியபடி விமலாவின் புடைவை ஸ்டாண்டில் தொங்கிக்கொண்டிருந்தது. மேஜையின்மேல் அவளுடைய வாசனைத் தைலங்கள், சீப்பு, கொண்டை ஊசிகள் இவைகளுடன் அவள் குங்குமச் சிமிழும் இருந்தது. மேஜைக்கு அடியில் ஜரிகை வேலை செய்த அவள் கால்ஜோடுகள் வைத்திருந்தன.

ஜோடுகள் அணிவதற்கு விமலா முழுவதும் மனம் இசையாதிருந்த நாளில் அவளுக்கு ஆசைகாட்டி அணியச்

செய்யும்பொருட்டு லக்னௌவிலிருந்து நான் தருவித்தவை அவை. இவற்றை அணிந்துகொண்டு அறையை விட்டு வெளித் தாழ்வாரத்துக்கு வருவதற்குள் அவமானத்தால் அவள் பிராணன் போய்விடும்போல் இருந்தது. அதற்குப் பிறகு அவள் எவ்வளவோ ஜோடுகள் அணிந்திருக்கிறாள். ஆனாலும் இவற்றை அவள் பத்திரமாக வைத்திருக்கிறாள். அவளுக்கு முதலில் இந்த ஜோடுகளைக் காட்டியபோது, "நான் தூங்குவதாக நினைத்துக்கொண்டு என் காலைத் தொட்டு நீ கண்ணில் ஒற்றிச் செல்லுவது எனக்குத் தெரியும். விழித்துக்கொண் டிருக்கும் என் தேவதையின் காலில் தூசி படியாவண்ணம் காப்பாற்ற நான் அளிப் பவை இவை" என்றேன்.

"இப்படியெல்லாம் நீங்கள் பேசுவதாக இருந்தால் நான் உங்கள் ஜோடுகளை ஒருபோதும் அணிந்துகொள்ள மாட்டேன்" என்று ஆக்ஷேபித்தாள் விமலா.

இந்தப் படுக்கையறையைப் பார்க்கும்போது என் உள்ளத்தில் ஏதோ ஓர் ஆழ்ந்த உணர்ச்சி உண்டாகிறது. ஆவல் குடிகொண்ட என் உள்ளத்தின் வேர்கள் இங் குள்ள ஒவ்வொரு பொருளின்மீதும் எவ்வாறு பற்றிக் கொண்டிருக்கின்றன என்பதை நான் இதுவரைக்கும் அறியவில்லை. அடிவேரைத் துண்டித்துவிட்டால் மட்டும் ஜீவன் வெளிக்கிளம்பி விடாது. இந்தச் சிறு ஜோடுகளே அதைப் போகவிடாமல் செய்வதற்குப் போதும்.

அறையில் இருக்கும் சிறு மாடத்தின்மேல் என் கண் பார்வை விழுகிறது. அதில் என் படம் எப்போதும் போலத்தான் தென்படுகிறது. அதைச்சுற்றிலும் இறைந்து கிடக்கும் மலர்கள் மட்டும் வாடிக் கருகிப்போய் இருக்கின் றன. மற்றச் சாமான்கள் யாவற்றையும்போல் அல்லாமல் அவை மட்டுமே உண்மையாகத் தோன்றுகின்றன. அவற்றை எடுத்தெறிவதுகூட அநாவசியம் என்ற எண் ணத்தினால் அவை அப்படியே கிடக்கின்றன. போனால் போகிறது. இத்தகைய ரூபத்தில் தோன்றினாலும் உண் மையே பெரிது. என் படம் நிச்சலமாக இருப்பதுபோல நானும் மனம் கலங்காமல் பார்த்துக்கொண் டிருக்கும் நாளை எதிர்பார்ப்பேன்.

நான் நின்றுகொண்டிருக்கும்போது விமலா என் பின்புறம் வந்தாள். என் படம் இருந்த இடத்தைப் பார்ப்பதை விட்டு நான் வேகமாகப் புத்தக அலமாரியை நோக்கிக்கொண்டு, "'ஏமியல்' பத்திரிகையை எடுத்துப் போக வந்தேன்" என்று முணுமுணுத்தேன். நான் அங்கே வந்ததற்குக் காரணம் ஏன் கூறவேண்டும்? ஏதோ தவறு செய்தவன்போல், எனக்குத் தெரியக்கூடாத ரகசியத்தைத் தெரிந்துகொள்ள முயலுபவன்போல், இருந்தது என் செய்கை. விமலாவின் முகத்தைப் பார்க்கக் கூசியவனாக அவ்விடத்தை விட்டு வேகமாகச் சென்றேன்.

அறைக்கு வெளியே ஏதோ படித்துக்கொண்டிருப்பதாகப் பாவனை செய்வதில் பயனில்லை என்று கண்டுகொண்டேன். என்னால் ஒரு வேலையையும் கவனிக்க முடியவில்லை. இனி வரப்போகும் நாட்கள் எல்லாம் ஒன்று சேர்ந்து ஒரே கனமாக என் இருதயத்தின்மேல் உட்கார்ந்து விட்டனபோல் தோன்றியது. அச்சமயம் பக்கத்து ஜமீன்தார் ஹரீசகுண்டரின் குடிகளில் ஒருவனான பஞ்சு, கூடை நிறையத் தேங்காய்களுடன் என்முன் வந்து நமஸ்கரித்தான்.

"என்ன பஞ்சு! என்ன சமாசாரம்! இவைகளெல்லாம் எதற்கு?" என்று கேட்டேன்.

என் குருதேவர் மூலமாக எனக்குப் பஞ்சு பழக்கம் ஆனான். அவன் மிகுந்த ஏழை. ஆனால் அவனுக்கு ஒன்றும் நான் செய்வதற்கு இல்லை.

இப்போது இந்தத் தேங்காய்களைக் கொண்டு வந்தது ஏதாவது உபகாரத்தை எதிர்பார்த்துத்தான் என்று நினைத்துப் பையிலிருந்து இரண்டு ரூபாயை எடுத்து அவனிடம் நீட்டினேன். அவன் கைகளைக் கட்டிக்கொண்டு, "எனக்கு வேண்டாம், பிரபு!" என்றான்.

"ஏன், என்ன சமாசாரம்?"

"விஷயத்தைச் சொல்லிவிடுகிறேன்: முன்பு ஒரு சமயம் ரொம்பக் கஷ்டமாக இருந்தபோது நான் இந்தத் தோட்டத்திலிருந்து தேங்காய்கள் திருடிவிட்டேன். எனக்கு வயசாகி விட்டது. என்றைக்குப் போய்விடு

வேணு! அதனால் அந்தத் தேங்காய்களைத் திரும்பக் கொண்டுவந்து கொடுப்பதற்கு வந்திருக்கிறேன்."

பஞ்சுவின் அந்த வார்த்தைகள் என் மனத்தின் பளுவைக் கொஞ்சம் நீக்கின. 'ஏமியல்' பத்திரிகையைப் படித்தால் அது ஏற்படுமா? ஸ்திரீ புருஷர்கள் ஒன்று சேருவதோ பிரிந்து போவதோ இவற்றைக்காட்டிலும் வாழ்க்கையில் இன்னும் வேறு எவ்வளவோ விஷயங்கள் இருக்கின்றன. இந்தப் பரந்த உலகம் இருக்கிறது. அதன் நடுவில் நிற்கும்போதுதான் நாம் நம்முடைய சுக்துக்கங்களைச் சரியாக அறிந்துகொள்ள முடியும்.

பஞ்சுவுக்கு என் குருதேவரிடம் மிகுந்த பக்தி. அவன் எப்படிக் காலக்ஷேபம் செய்கிறான் என்பது எனக்குத் தெரியும். பொழுது விடிவதற்குமுன் எழுந்து அவன் பெண்களுக்கு வேண்டிய வெற்றிலை, புகையிலை, வர்ண நூல், சீப்பு, சிறு கண்ணாடிகள் முதலிய சாமான்களுடன் ஆற்றைக் கடந்து அப்பாலுள்ள கிராமத்துக்குச் சென்று தன் சாமான்களைக் கொடுத்து அவற்றுக்குப் பதிலாக அரிசி வாங்கிக்கொண்டு வருவான். சீக்கிரம் வீடு திரும்பிவிட்டால் வேகமாகச் சாப்பிட்டுவிட்டு மிட்டாய்க் கடைக்குச் சென்று கூடமாடப் பக்ஷணங்கள் செய்வான். பிறகு வீடு திரும்பியதும் நடுநிசி வரையிலும் சங்கு வளையல்கள் செய்துகொண்டிருப்பான். இவ்வாறு நாள் முழுவதும் உழைத்தும் அவனும் அவன் குடும்பத்தாரும் இரண்டு வேளை வயிறாரச் சாப்பிட முடியவில்லை. சாப்பிட உட்காருவதற்குமுன் நிறையத் தீர்த்தத்தைக் குடித்து வயிற்றை நிரப்பிவிடுவான்.

அவன் குடும்பத்துக்கு வருஷம் முழுவதும் ஒரு வேளைச் சோறுதான் கிடைக்கும். அவனுடைய சாப்பாடு பெரும்பாலும், மலிவான, விதைகள் நிரம்பிய வாழைப் பழங்களே.

அவனுக்கு மாதம் ஏதாவது பண உதவி செய்யலாம் என்று நினைத்தேன். "உன் பணம் அவன் குணத்தைக் கெடுத்துவிடுமே ஒழிய அவன் கஷ்டத்தை நிவர்த்தி செய்யாது. வங்காளத் தாய்க்கு இந்தப் பஞ்சு ஒருவன் தான் என்று இல்லை. அவள் தாய்ப்பால் வற்றிவிட்டால்

வெளியிலிருந்து அதைக் கொண்டுவர முடியுமா?'' என்றார் என் குருதேவர்.

இம்மாதிரி விஷயங்கள் நம்மை யோசிக்கும்படி செய்கின்றன அல்லவா? அன்றே நான் விமலாவிடம், "நாட்டிலுள்ள இந்தத் துன்பத்தை வேருடன் களைந் தெறிவதன் பொருட்டு நம் வாழ்நாளை அர்ப்பணம் செய்வோமா?'' என்றேன்.

"ஓகோ! நீங்கள் ராஜகுமாரர் சித்தார்த்தரா? ஆனால் உங்கள் உணர்ச்சியின் வேகம் என்னையும் அடித் துக்கொண்டு போகவிடாமல் பார்த்துக்கொள்ளுங்கள்'' என்றாள் விமலா, புன்னகையுடன்.

"சித்தார்த்தர் தனியாகத் தவத்தை மேற்கொண் டார். நாம் இருவரும் சேர்ந்து அதை மேற்கொள்வோம் என்று அல்லவா நான் சொல்லுகிறேன்?''

மேற்சொன்ன என் எண்ணம் பேச்சோடு நின்று விட்டது. உண்மை என்னவென்றால் விமலா சீமாட்டி. அவள் பெற்றோர்கள் பணக்காரர்கள் அல்ல என்றாலும் அவள் ராணியாகவே பிறந்துவிட்டாள். ஏழை, எளியவர் கள் கஷ்டப்படுகிறார்கள்' என்பதைப்பற்றி அவள் சந்தே கிக்கவில்லை. தரித்திரம் என்பது அவர்களுக்கு ஏற்பட்டது; அவர்கள் அதை அவ்வளவாகப் பாராட்டமாட்டார்கள்; சுற்றிலும் கரைகள் குளத்தைக் காப்பதுபோல அவர்கள் எளிமையே அவர்களைக் காப்பாற்றுகிறது. குளத்தைப் பெரி தாக்கினால் சேறுதான் மேலே கிளம்பும் என்பது அவள் நினைப்பு.

உண்மையில் விமலா என் வீட்டில் மட்டும் புகுந்திருக் கிறாளேயன்றி என் வாழ்க்கையில் பிரவேசிக்கவில்லை. நான் அவளை மிகப் பெரியவளாக்கி மிகப் பெரிய இடத்தை அளித்துவிட்டேன். அதனால் அவளை இழந்தபோது என் வாழ்க்கை மிகச் சிறியதாயும் குறுகலாகவும் ஆகி விட்டது. விமலாவுக்கு இடம் வேண்டுமே என்று மற்ற எல்லாப் பொருள்களையும் நான் ஒரு மூலையில் ஒதுக்கி விட்டேன். அவளை அலங்கரிப்பதிலும் கல்வி கற்பிப் பதிலும் அவளையே அல்லும் பகலும் சுற்றிக்கொண் டிருப்

பதிலும் முழுகியிருந்த நான், உலகம் எவ்வளவு பெரிது, மனித வாழ்க்கை எவ்வளவு அரியது என்பதை மறந்து விட்டேன். தினசரி நிகழ்ச்சிகளையே மனிதன் மேலாக மதித்துவிட்டால் பிறகு அவனுக்கு உண்மை ஏது? விடுதலை ஏது? சாமான்ய விஷயங்களை விமலா அவ்வளவு பெரிதாகக் கருதிவிட்டதனுல்தான் உண்மை மறைந்தே கிடந்தது. அதனுல் என் துன்பத்தில் இடைவெளியே காணுமல் இந்தச் சூனியமான நிலையை உலகம் முழுவதும் வியாபிக்கச் செய்கிறேன். ஆகையால்தான் இந்த ஆவணி மாதத்தில் மணிக்கணக்காக இந்தப் பல்லவி காதில் ஒலித்துக்கொண்டே இருக்கிறது:

"மாதம்இ தாவணி ஆதலால் - அவ்
வானம் பிளந்து பொழியுது
மேதினி எங்கணும் வெள்ளங்காண் - என்
வீடு வெறிச்சென் றிருக்குதே!

# விமலா

ஒரு நொடியில் நாட்டில் ஏற்பட்ட மனமாறுதலை என்னவென்று சொல்வது! எந்த நெருப்பைக் கொண்டும் பற்றவைக்க முடியாதபடி பசையற்று மடிந்து சாம்பலாகிப்போன சகர புத்திரர்கள் அறுபதினாயிரம் பேர்களையும் கங்காநதி மீண்டும் உயிர்ப்பித்ததுபோல், மடிந்து சாம்பலான வங்காளமும் திடீரென்று பிழைத்தெழுந்து, 'இதோ இருக்கிறேன்' என்று கூறுவதுபோல் இருந்தது.

வெகு காலத்துக்கு முன் கிரீஸ் தேசத்தில் இருந்த ஒரு சிற்பி தான் செய்த சிலைக்கு உயிரளிக்கும் பாக்கியம் பெற்றான் என்று நான் எங்கேயோ படித்ததாக நினைவு. அந்த அற்புதச் சம்பவத்தில்கூட உயிர் உண்டாக்கும் முன் உருவம் இருந்தது அல்லவா? அப்படி இந்தச் சாம்பற் குவியலில் என்ன உருவம் இருந்ததோ? அது கல்லைப்போல் கடினமாக இருந்தாலாவது, அகல்யையைப்போல் மீண்டும் உருவம் பெற்று எழுந்துவிடலாம் என்ற நம்பிக்கை உண்டு. ஆனால் இந்தச் சாம்பலோ பிரம்மாவின் விரல்களின் வழியாக உதிர்ந்து காற்றில் இங்கும் அங்கும் பறந்து கொண்டிருக்கவேண்டும் என்று தோன்றுகிறது. அது குவித்து வைத்திருக்கிறதேயன்றி ஒருபோதும் ஒன்று சேரவில்லை. ஆனால் இன்று இந்தத் தளர்ந்த சாம்பற்குவியலுக்கும் உருவம் ஏற்பட்டு இடி முழக்கம் போன்ற குரலில் அது, 'இதோ நான் இருக்கிறேன்' என்று தன்னை வெளியிட்டுக்கொண்டது.

இதெல்லாம் மனித சக்திக்கு மீறியது என்று எப்படி நாம் நினைக்காமல் இருக்க முடியும்? நம் சரித்திரத்தில் ஏற்பட்டிருக்கும் இவ்வரிய க்ஷணமானது குடிகாரத் தேவதை ஒன்றின் முடியிலிருந்து நம் கையில் விழுந்த ரத்தினமோ என்று தோன்றுகிறது. சென்ற காலத்தில் இம்மாதிரியான சம்பவம் நிகழவில்லை. ஆகவே ஏதோ ஒரு மந்திர வித்தையினால் நம் கஷ்டங்களும் குறைகளும் நீங்கி

விடும் என்றும், இனிமேல் நமக்குச் சாத்தியமென்பதும் அசாத்தியம் என்பதும் இல்லை என்றும் நம்பிக்கை உண்டாயிற்று. 'இதோ வருகிறது, வந்துவிட்டது' என்றே ஒவ்வொன்றும் நம்மிடம் சொல்வதுபோல் இருந்தது.

ஆகவே மேலே செல்வதற்குக் குதிரை ஒன்றும் தேவை இல்லை என்றும் சொர்க்கலோகத்து விமானம்போல் அது தானே செல்வதற்குச் சக்தியுடையதென்றும் நாங்கள் நம்பினோம். அது எதுவானாலும் ரதத்தைச் செலுத்தும் சாரதிக்குச் சம்பளம் ஒன்றும் வேண்டாம். அவன் கையில் இருக்கும் கிண்ணத்தில் மட்டும் மதுவை விட்டு நிரப்பிக் கொண்டிருந்தால் போதும் என்றும், எங்கேயோ ஒரு கிட்டாத சொர்க்கத்தில் நாம் கொண்டிருக்கும் ஆசைகளெல்லாம் நிறைவேறிவிடும் என்றும் எண்ணினோம்.

என் கணவர் இந்த உத்சாகத்தில் அடியோடு சேராமல் இல்லை. அவர் மனத்தில் இருந்த வருத்தம் மட்டும் இன்னும் அதிகமாயிற்று. நிகழ்காலத்தை விட்டு வேறு எதிலோ அவர் திருஷ்டி லயித்திருந்தது என்று தோன்றிற்று.

ஒரு நாள் ஸந்தீபுடன் ஏதோ வாதம் செய்தபோது, "அதிருஷ்டம் நம் வீட்டு வாசலில் தானே வந்து நிற்கும் போது அதை வரவேற்றுக்கொள்வதற்கு நமக்குச் சக்தி இருப்பதில்லை. அதை உள்ளே அழைத்து உபசரிக்க நாம் சித்தமாகாமல் இருந்துவிடுவோம்" என்றார்.

"நம் தெய்வங்களிடம் உனக்கு நம்பிக்கை இல்லாததால் நீ ஒரு நாஸ்திகனைப்போல் பேசுகிறாய். ஸ்ரீதேவி தன் வரங்களுடன் வந்து காத்துக்கொண்டிருக்கிறாள் என்பது நன்றாகத் தெரிகிறது! ஆயினும் நீதான் நம்பமாட்டேன் என்கிறாய்" என்றார் ஸந்தீப்.

"கடவுளிடம் எனக்கு நம்பிக்கை மிகவும் அதிகமாக இருப்பதால்தான் அவரை நாம் வழிபடுவது போதாது என்று நிச்சயமாகத் தோன்றுகிறது. தெய்வம் வரம் கொடுத்தாலும் அதை ஏற்றுக்கொள்ள நமக்குச் சக்தி வேண்டாமா?" என்றார் என் கணவர்.

அவர் இம்மாதிரி பேசும்போது எனக்குக் கோபம் வந்துவிடும். என்றால் பதில் பேசாமல் இருக்க முடியாது.

"இது ஒரு குடிவெறி என்று நினைக்கிறீர்கள். அந்தக் குடிவெறியும் கொஞ்ச தூரம் பலத்தை உண்டாக்க வில்லையா?" என்றேன்.

"ஆம். அது பலத்தை அளிக்குமேயன்றி ஆயுதங்களை அளிக்காது" என்றார் என் கணவர்.

"பலம் உண்டாவதுதான் ஈசுவர அநுக்கிரகம். யந்திரங்களைக்கொண்டு ஆயுதங்கள் தயாரித்துக்கொள்ளலாம் அல்லவா?" என்றேன்.

"யந்திரங்களை உடையவர்கள் ஆயுதங்களைச் செய்து கொடுப்பதற்குமுன் தமக்குச் சேரவேண்டிய கூலியைக் கேட்கமாட்டார்களா?" என்றார் என் கணவர், புன்னகையுடன்.

"அதைப்பற்றி நீ கவலைப்பட வேண்டாம். அவர்கள் கூலியை யார் கொடுக்காமல் இருக்கப்போகிறார்கள்?" என்றார் ஸந்தீப், கம்பீரமாக.

"அவர்கள் கூலியைக் கொடுத்தாகட்டும். பிறகு கொண்டாட்டத்தைப்பற்றிப் பேசுவோம்" என்றார் என் கணவர்.

"அதற்கு உன் உதவியை எதிர்பார்த்துக்கொண் டிருப்பதாக நீ எண்ண வேண்டாம். எங்கள் உத்ஸவம் பண உதவிக்கெல்லாம் மேற்பட்டது" என்று ஸந்தீப் இகழ்ச்சியுடன் கூறிவிட்டுத் தம் கனத்த குரலில் பின்வருமாறு பாடத் தொடங்கிவிட்டார்.

"காதலர் அன்புக்கு விலையில்லை— அவர்
காசு பணத்தினை வேண்டிலர்
ஊதும் குழலுக்கும் விலையில்லை— அதை
ஊதிஉள் ளங்கொள்ளை கொண்டனர்."

பிறகு திரும்பி ஒரு புன்னகையுடன் என்னை நோக்கி, "ராணி, வாழ்க்கையில் பாடுவதற்கு வேண்டிய உத்ஸாகம் ஏற்பட்டால் அப்போது நல்ல குரல் இல்லாதது ஒரு குறையல்ல என்பதைக் காண்பிப்பதற்காகவே நான்

இப்போது பாடுகிறேன். நல்ல சாரீரம் இருக்கிறதென்று பாடினால் அப்பாட்டினால் என்ன பிரயோஜனம்? நம் நாட்டிலோ இப்போது ஒரு பெரும் இசைவெள்ளம் பெருகிச் சென்றுகொண் டிருக்கிறது. நிகில் வேண்டுமானால் ஸ்வரங்களைப் பிசகாமல் சாதகம் செய்துகொண் டிருக்கட்டும். நாம் நம்முடைய அபஸ்வரக் குரல்களைக் கொண்டே நாட்டைக் கிளர்ந்து எழச்செய்வோம்'' என்று பின்வரும் பாட்டைப் பாடினார்.

> **"இருப்பவை எல்லாம் தொலைந்திடும், வெளியினில்**
> **ஏதுதல் ஒழியெனும் வீடு;**
> **விருப்புடன் எல்லா உடைமையும் காற்றினில்**
> **விடுத்திடேன் றெனதுயிர் கூறும்**
> **உடைமைஎல் லாம்நாம் தொலைத்திட வந்திடின்**
> **ஒழிக, மற் றவைகளால் பயன்என்?**
> **திடமுடன் அழிவை முகமலர்ந் தேற்குவன்;**
> **சாவினில் அழிவின்மை சேர்வேன்!"**

"உண்மை என்னவென்றால், நிகில், நம் எல்லோருக்கும் இருதயமே இல்லை. அசாத்தியமானதை நாடி ஒரே வேகமாக முன்னேக்கிச் செல்லும்போது நம்மை இனி ஒருவரும் பிடித்து நிறுத்த முடியாது."

> **"எங்களைப் பின்னின் றிழுப்பவர் அறியார்**
> **இடர்கடந் திடுவெறி யினில்வரும் இன்பம்**
> **பங்கமென் றுரைக்கும் வழிமுடி வதுதான்**
> **பரிவோடும் எங்களை விளிப்பதை அறியார்;**
> **இங்கேது நன்மை, நேர்மைநல் ஒண்மை**
> **யாவையும் புழுதியிற் படிந்தொழிந் திடுக!"**

என் கணவர் இன்னும் மேலே ஏதாவது சொல்லுவார் என்று நினைத்தேன். அவர் ஒன்றும் சொல்லாமல் எழுந்து போய்விட்டார். நாடு முழுவதும் புயற்காற்றுப்போல் அடித்துக்கொண் டிருந்த உணர்ச்சி வேகந்தான் எனக்குள்ளும் அடித்துக்கொண் டிருந்தது. என் விதிக்கு அதிகாரியின் ரதம் வெகு வேகமாக வந்துகொண் டிருந்தது. இது வரையிலும் நடக்காத ஏதோ ஒன்று திடீரென்று நடந்து விடும்போல் ஒவ்வொரு நிமிஷமும் தோன்றிற்று. சரி,

தவறு, பிறருடைய உணர்ச்சி இவைகளை ஒன்றும் கவனிக்காத நிலைமைக்கு அல்லவா நான் இப்போது வந்திருக்கிறேன்! இந்த நிலையையா நான் விரும்பினேன்? இதற்காகவா நான் ஆவலுடன் காத்துக்கொண்டிருந்தேன்? என் வாழ்க்கை முழுவதையும் நன்ருகக் கவனித்துப் பார்த்து இவற்றுக்கெல்லாம் காரணம் நான்தாளு என்பதைச் சொல்லுங்கள்.

முன்பெல்லாம் நான் ஒரு தெய்வத்தை வழிபட்டு வந்தேன். ஆனுல் வரம் கொடுக்கும்போதோ அது வேருெரு தெய்வமாக மாறி இருந்தது! விழித்துக் கொண்ட இந்த நாடு, 'வந்தே மாதரம்' என்ற சப்தத்தால் எவ்வாறு எதிர்காலத்தை எண்ணிப் பரவசமாகிறதோ அவ்வாறே என் உள்ளமும் உடலும் இந்த முகம் அறியாத எதிர்பாராத தெய்வத்தை வரவேற்றுக் களிப்பெய்துகின்றன.

ஒரு நாள் இரவு படுக்கையினின்றும் மெதுவாக எழுந்து அறைக்கு வெளியே தாழ்வாரத்தில் வந்து நின்றேன். தோட்டத்துக்கு அப்பால் நெல்வயல்கள். வடக்கே தூரத்தில் நதி ஓடுவது தெரிந்தது. கர்ப்பத்தில் இருக்கும் சிசுவைப்போல் இருட்டில் எல்லாம் உருத் தெரியாமல் கிடந்தன.

எதிர்காலத்தைப்பற்றி எண்ணமிடும்போது என் தேசமும் என்னைப்போல் எதையோ எதிர்பார்த்து நிற்கும் ஒரு ஸ்திரீயைப்போல் தோன்றிற்று. அவளும் எங்கிருந்தோ ஓர் அழைப்புக் குரலைக் கேட்டுத் தன் வீட்டை விட்டு வெளிப்பட்டிருக்கிருள். நிற்பதற்கோ யோசிப்பதற்கோ தீபத்தை ஏற்றிக்கொள்வதற்கோ அவகாசம் இல்லாமல் அவள் இருட்டில் வேகமாகச் செல்லுகிருள். தூரத்தில் கேட்கும் புல்லாங்குழலின் நாதத்தைக் கேட்டு அவள் உள்ளம் கிளர்கிறது. இருதயம் படபடவென்று அடித்துக்கொள்ளக் கண்களைக் கட்டியிருப்பது போல் இருப்பினும், 'சப்தம் கேட்கும் இடத்தை அடைந்துவிட்டோம்' என்று அவள் மனம் குதூகலம் அடைகிறது. அவள் ஒரு தாயின் நிலையில் இருப்பதாகச் சொல்வதற்கில்லை. பசியால் தவிக்கும் குழந்தைகளைப்பற்றியும்

அவளுக்குக் கவலை இல்லை. இது வைஷ்ணவ பக்தர்கள் இருந்த தேசமாகையால் அவள் தன் காதலனைச் சந்திக்கச் செல்லுகிறாள் என்றுதான் கூறவேண்டும். அவள் வீட்டை விட்டு, வீட்டு வேலைகளை மறந்து செல்லுகிறாள். அளப்பரிய ஒரு மோகம் அவளைப் பிடித்து இழுத்துச் செல்கிறது. 'எங்கே போகிறோம், எந்த வழியாகப் போகிறோம்' என்ற ஒன்றையும் அவள் கவனிக்கவில்லை.

அம்மாதிரி மோகத்தில்தான் நானும் இப்போது ஆழ்ந்து கிடக்கிறேன். வீடு, வாசல் எல்லாவற்றையும் நானும் இழந்துவிட்டேன். போகும் இடத்தையும் வழியையும் நானும் அறிந்துகொள்ளவில்லை. அந்த ஆசையும் வேகமுமே என்னைக் கொண்டுசெல்கின்றன. 'ஆகா! அடி பாவி! இருட்டில் இப்படி அலைந்தால் பொழுது விடியும்போது திரும்பிச் செல்ல ஒரு வழியும் காண மாட்டாய்.' ஆனாலும் எதற்காகத் திரும்பிச் செல்ல வேண்டும்? மரணந்தான் இருக்கிறதே! பார்த்துக்கொள்வோம். இருட்டில் கேட்ட குழலோசை, நாசத்துக்கு ஹேதுவானால் பிறகு எது நடந்தால்தான் என்ன? என்ன கவலை? அந்த இருட்டுடன் கலந்து நானும் ஒன்றாகப் போய் விட்டால் பிறகு நானாவது நன்மை, தீமை, சந்தோஷம், துக்கம் இவைகளாவது எங்கே?

வங்காளத்தில் இவ்வாறு காலம் வெகு வேகமாகச் செல்லவே கஷ்டமான விஷயங்களெல்லாம் ஒன்றன்பின் ஒன்றாக வெகு சுலபமாக நடக்கத் தொடங்கின. நாங்கள் இருந்த இந்தப் பகுதியிலும் ஒன்றும் பின் தங்கவில்லை. ஆரம்பத்தில் எங்கள் ஜில்லா கொஞ்சம் பின்னேக்கித்தான் இருந்தது. என் கணவர் எந்த விதத்திலும் கிராமத்தார்களைக் கட்டாயப்படுத்துவதை விரும்பவில்லை.

"நாட்டுக்காகத் தியாகம் செய்பவர்கள் உண்மையில் அதற்குத் தொண்டு செய்பவர்கள்தாம். ஆனால் அதற்காக நாட்டின் பொருட்டுப் பிறரைக் கட்டாயப்படுத்துபவர்கள் அதற்கு விரோதிகள் ஆவார்களே ஒழிய வேறல்ல. அப்படிப்பட்டவர்கள் செய்கை சுதந்தரத்

தின் ஆணிவேரையே வெட்டுவது போலத்தான் ஆகும்'' என்று என் கணவர் கூறுவார்.

ஸந்தீப் ஊரில் வந்து தங்கியிருக்கிறார். அவரைச் சேர்ந்தவர்கள் பட்டணத்திலும் கடைத் தெருவுகளிலும் பேசுகிறார்கள். எல்லோருக்கும் உத்ஸாகம் பிறந்தது. எனவே ஊரில் உள்ள இளைஞர்கள்—அவர்களுள் சில காலிகளும் இருந்தார்கள்—ஒரு கூட்டமாகச் சேர்ந்து ஸந்தீபைப் பின்பற்றலானார்கள். உள்ளும் புறமும் ஒன்றாகும்படி அவர்கள் உத்ஸாகம் அதிகரித்தது. ஒரு பெரிய நம்பிக்கையும் உத்ஸாகமும் சுத்தமான காற்றுப் போல் வீசும்போது ஊரிலுள்ள அழுக்கும் அசுத்தமும் மறைந்துவிடும் அல்லவா? நாடு நலம் குன்றிக் கிடக்கும்போது மனிதர்கள் நேர்மையுடனும் ஆரோக்கியத்துடனும் எவ்வாறு இருக்க முடியும்?

எங்கள் ஜமீனில் மட்டும் விதேசித் துணி, சர்க்கரை, உப்பு முதலியவைகளை விலக்காமல் இருந்ததால் எல்லோரும் சந்தேகத்துடன் என் கணவரை நோக்கலானார்கள். ஜமீனில் வேலையாக இருந்தவர்கள் அதைப்பற்றி வருத்தமும் அவமானமும் கொண்டார்கள். ஆனாலும் கொஞ்ச காலத்துக்குமுன் என் கணவர் நம் நாட்டில் செய்த பொருள்களை வரவழைக்கத் தொடங்கியபோது பெரியவர்கள், சிறியவர்கள் எல்லோரும் சேர்ந்து, 'அது மதியீனம்' என்று ரகசியமாகவும் வெளிப்படையாகவும் வம்பளந்தார்கள். இப்போது சுதேசி இயக்கம் ஒரு பெருமையாகிவிட்டது. அப்போது நாங்கள் அதை மனமார வெறுத்தோம்.

என் கணவர் இப்போதும் இந்தியாவில் செய்த பென்ஸில்களை இந்தியாவில் செய்த கத்தியினால்தான் சீவிக் கூராக்கிக்கொள்ளுகிறார். அவர் தீர்த்தம் குடிப்பது வெண்கலப் பாத்திரத்தில்தான். இரவில் விளக்கெண்ணெய் விளக்குத்தான் உபயோகிக்கிறார். ஆனால் அவருடைய உப்புச் சப்பில்லாத 'சுதேசி' எங்களுக்குப் பெரியதாகத் தோன்றவில்லை. ஆங்கிலேயர் யாராவது வீட்டுக்கு வரும்போது உள்ளே இருந்த நாகரிகமில்லாத

சாதாரண நாற்காலிகளைப் பார்த்து நாங்கள் அவமான மடைவது வழக்கம்.

இந்த விஷயத்தைப்பற்றி என் கணவர் மிகவும் அலக்ஷ்யமாகப் பேசுவார்.

"இந்தச் சிறிய விஷயங்களுக்கெல்லாம் ஏன் இவ்வளவு கவலை?" என்று அவர் புன்னகையுடன் கேட்பார்.

"நம்மை அவர்கள் நாகரிகம் இல்லாத சுத்த நாட்டுப் புறம் என்று நினைக்கமாட்டார்களா?"

"அவர்கள் அப்படி நினைத்தால் நாமும் பதிலுக்கு அவர்கள் நாகரிகம் அவர்கள் வெள்ளைத் தோலுக்கு அப்பால் செல்லவில்லை என்று நினைத்து விட்டால் போகிறது!" என்பார் அவர்.

என் கணவர் உபயோகித்த மேஜையின்மேல் புஷ்பங்கள் வைப்பதற்கென்று ஒரு சாதாரணப் பித்தளைத் தொட்டி இருந்தது. யாராவது ஆங்கிலேயர் வருகிறார்கள் என்று செய்தி தெரிந்தால் நான் மெதுவாகச் சென்று அதை எடுத்துவிட்டு ஒரு சீமைப் பளிங்குத் தொட்டியை வைத்துவிடுவேன்.

"இதோ பார், விமலா; அந்த மலர்களைப் போல் அந்தப் பித்தளைத் தொட்டியும் இருக்கும் இடம் தெரியாமல் இருக்கிறது. இதுவோ, 'என்னைப் பார்' என்று மார் தட்டிக்கொண்டு நிற்பதுபோல் இருக்கிறது. அதில் வைப்பதற்குக் காகிதப் பூக்களே சரி" என்பார் என் கணவர்.

இவ்வாறெல்லாம் அவருக்குப் புதுக் கற்பனை தோன்றும். அதற்குச் சரியாக என் சிறிய ஓர்ப்படியும் பேசுவாள். ஒரு நாள் அவள் பரபரப்புடன் வந்து, "நிகில் கேட்டாயா? திவ்யமான நாட்டுச் சோப்புகள் வந்திருக்கின்றனவாம். நான் சோப்பும் கீப்பும் தேய்த்துக் கொள்ளும் காலம் போய்விட்டது. இருந்தாலும் அதில் ஒன்றும் மாமிசத்தின் கொழுப்புச் சேரவில்லை என்றால் வாங்கித் தேய்த்துக்கொண்டு பார்க்கலாமே" என்பாள்.

இதைக் கேட்ட என் கணவர் பூரித்துப் போவார். உடனே வீடு முழுவதும் நாட்டுச் சோப்புக்களும் வாச

ளைப் பொருள்களும் நிறைந்துவிடும். 'சோப்பாம்! முழு வதும் சுண்ணும்புக் கட்டிகள் அல்லவா அவை?' என் ஓர்ப்படி உபயோகிப்பவை யெல்லாம் சீமைச் சோப்புகளே ஒழிய வேறல்ல என்பது எனக்கு நன்ருகத் தெரியும். இந்தச் சோப்புகளைத் துணிகளுக்குப் போடுவதற்கென்று வேலைக்காரிகளிடம் கொடுத்து விடுவாள்.

மற்ருெரு சமயம், "நிகில்! புதிதாக வந்திருக்கும் சுதேசிப் பேனு எனக்கு வேண்டும். வாங்கி வாயேன்" என்பாள்.

உடனே அவர் வழக்கம்போல் உள்ளம் குளிர்ந்து சுதேசி என்ற பெயருடன் விளங்கும் வெறும் மரக்கட்டை களை வாங்கி உள் முழுவதும் நிறைத்துவிடுவார். ஆனுல் எதுவாக இருந்தால் அவளுக்கு என்ன? அவள்தான் படிப் பது, எழுதுவது என்பதே இல்லையே! ஆனுல் அவள் எப் போதாவது உபயோகிப்பது மட்டும் அவள் பெட்டியில் இருக்கும் உயர்ந்த பவுண்டன் பேனுவைத்தான்.

உண்மையில் இவ்விஷயங்களில் என் கணவருடன் நான் சேராததற்காக இவைகளெல்லாம் என் ஓர்ப்படி யால் வேண்டுமென்று என்னைக் குத்திக் காட்டுவதற் கென்றே செய்யப்பட்டவை. அவள் குட்டை வெளிப் படுத்திவிடலாம் என்ருலோ அதுவும் முடியாது. நான் சொல்லப் புகும்போதே என் கணவரின் முகம் மிகவும் சிறுத்துவிடும். பிறரிடம் ஏமாருமல் அவரைக் காப்பாற் றப் போனுல் அது நமக்குத்தான் கஷ்டமாக முடி கிறது.

என் ஓர்ப்படிக்குத் தையல் வேலை பிடிக்கும். ஒரு நாள் "மன்னி! என் இப்படிப் பொய் சொல்லுகிறீர்கள்? உங்கள் மைத்துனர் எதிரில் சுதேசிக் கத்தரிக்கோல் என்றதும் வாயைப் பிளக்கிறீர்கள்? ஆனுல் நீங்கள் உபயோகப்படுத்துவதோ சீமைக் கத்தரிக்கோல்" என்று வாய்தவறிக் கூறிவிட்டேன்.

"ஆம். அதனுல் என்ன? அப்படிச் சொன்னுல் அவ னுக்கு எவ்வளவு சந்தோஷமாக இருக்கிறது? அவன் சிறுவனுக இருக்கும்போதே நான் இங்கே வந்துவிட் டேன். அது முதல் நாங்கள் இருவரும் ஒன்ருகவே வளர்ந்தோம். அவன் முகம் வாடினுல் நான் பொறுக்க

மாட்டேன். பாவம்! இது ஒன்றுதான் அவனுக்குப் பொழுதுபோக்கு. உன் பித்துத்தான் அவனுக்குத் தலைக்கு ஏறி இருக்கிறதே! நீ அவனை ஒழித்துவிடுவாயோ?" என்றாள்.

"என்ன இருந்தாலும், உள்ளே ஒன்று வெளியில் ஒன்று என்று இப்படிப் பேசலாகாது" என்றேன்.

என் ஓர்ப்படி இடி இடி என்று சிரித்து, "ஓகோ! சின்ன ராணி! பொய் சொல்லக்கூடாதா? பெண்களுக்கு அந்த விதியெல்லாம் கிடையாதம்மா! அவள் மிருதுவாகச் சமயத்துக்குத் தக்கபடி வளைந்து கொடுப்பாள்" என்றாள்.

"உன் பித்து அவனுக்குப் பிடித்திருக்கிறது. நீ அவனை ஒழித்துவிடாதே!" என்ற வார்த்தைகளை என்னால் மறக்க முடியவில்லை.

'புருஷனுக்கு லாகிரி வஸ்து வேண்டியதுதான். ஆனால் அது ஸ்திரீயாக இருக்கவேண்டாம்' என்று எனக்கு இப்போது தோன்றுகிறது.

எங்களுக்குச் சொந்தமான சுக்ஸாயர் என்ற ஊர் ஜில்லாவுக்கே பெரிய வியாபார ஸ்தலமாக இருந்தது. அங்கே ஒரு சிறு வாய்க்கால். அதன் கரையோரமாகக் கடைத் தெரு. அக்கரையில் வாரத்துக்கு ஒரு முறை சந்தை கூடும். மழைநாளில் இந்தச் சிறு வாய்க்காலும் நதியும் ஒன்றாகிவிடும். அப்போது படகுகளில் பருத்தி நூல், கம்பளி எல்லாம் விற்பனைக்கு வருவது உண்டு.

எங்களுக்கு இருந்த உத்சாகத்தில் ஸந்தீப் விதேசிச் சாமான்களுடன் அந்நிய நாட்டுப் பழக்கத்தையும் ஒழிக்க வேண்டும் என்று இருந்தது; "ஆம். அடியோடு தொலைக்க வேண்டும்" என்று நானும் ஒத்துப் பாடிக்கொண்டு சண்டைக்குத் தயாரானேன்.

"நிகிலுடன் அதைப்பற்றி எனக்குச் சண்டை. பிரசங்கங்கள் வேண்டுமானால் செய்யுங்கள், பலவந்தம் செய்யக்கூடாது என்கிறான்" என்றார் ஸந்தீப்.

"அதை நான் பார்த்துக்கொள்கிறேன்" என்று நான் தைரியமாகக் கூறினேன். என் கணவருக்கு என்

மேலுள்ள அபார அன்பு எனக்குத் தெரியும். நான் சரியான புத்தியுடன் இருந்தால் இப்படிப்பட்ட சமயத்தில், 'என் உரிமையைப் பாராட்டுவதைக்காட்டிலும் தேகத்தை மாய்த்துக்கொள்வதே மேல்' என்று நினைத்திருப்பேன். ஆனால் அப்போது ஸந்தீபுக்கு என் சக்தியின் பெருமைய்யை எப்படிக் காட்டுவது?

ஜகத்தின் சக்தியானது எப்படி ஒவ்வொருவருக்கும் அவரவர்கள் மனோபாவத்தின் ரூபத்தில் தோன்றுகிறது என்பதை ஸந்தீப் எனக்கு வெகு நன்றாக எடுத்துக் காட்டியிருக்கிறார். சிருஷ்டியின் 'ஆத்திர உணர்ச்சியான இன்பமே சக்தியின் வடிவம் என்றும் அவள் தன் காதலனை எப்போதும் வசீகரித்துக்கொண் டிருக்கிறாள் என்றும் வைஷ்ணவ மதத்தில் இருப்பதாக அவர் கூறுவார். தம்முள்ளே ஆழ்ந்து கிடக்கும் இந்தச் சக்தியை வெளிக் கொண்டு வருவதற்குத்தான் மனிதர்கள் என்றென்றும் விரும்புகிறார்கள். அது நிறைவேறியவர்கள் இருட்டினின்று கிளம்பும் ஓசையின் பொருளை உள்ளே நன்றாக அறிந்துகொண்டு விடுகிறார்கள் என்று அவர் சொல்லி விட்டு ஒரு பாட்டைப் பாடலானார்.

இவ்வாறு அவர் பேசுவதைக் கேட்க விமலா ஒரு சாதாரணப் பெண் என்பதையே நான் மறந்துவிட்டேன். 'நான்தான் சக்தி, ஜகத்தின் இன்ப வடிவானவள். அசாத்தியம் என்பது எனக்கு இல்லை. எனக்கு ஒன்றும் பந்தம் ஆகாது. நான் தொட்டதெல்லாம் புதிய ஜீவ சக்தியுடன் கிளம்பும்' என்று மனோராஜ்யம் பண்ணி என்னைச் சுற்றிலும் ஒரு புதிய உலகத்தை நான் சிருஷ்டித்துக் கொண்டேன். என் உள்ளத்தில் இந்த உணர்ச்சி ஏற்படுவதற்கு முன்பு ஆகாயம் இப்படிப் பொன்னிறமாகத் தோன்றவில்லையே! நாட்டின் உண்மைத் தொண்டரான இந்த வீரபுருஷனையும், மேதா விலாசமும் அபூர்வ சக்தியும் பூண்ட இந்த என் பக்தனையும் நான் ஒவ்வொரு க்ஷணமும் புதிது புதிதாகச் சிருஷ்டித்தேன். ஏன்? என் தரிசனத்தால் அப்போதைக்கப்போது அவர் உடலில் புதிய ஜீவசக்தி தோன்றிக்கொண் டிருப்பதை நான் பார்க்கவில்லையா?

அன்று ஒரு நாள் ஸந்தீப் தம் சிஷ்யனுன அமூல்ய சரணன் என்ற ஒரு சிறுவனை என்னிடம் அழைத்துக் கொண்டு வந்தார். அவன் கண்கள் உடனே ஒரு புது உத்ஸாகத்துடன் பிரகாசிப்பதைக் கண்டேன். அவனும் என்னைச் சக்தியின் வடிவமாகக் கருதித் தொழுபவன்.

''நீங்கள் என்ன மந்திரம் போட்டீர்கள்? அமூல்யன் இப்போது முன்போல் சாதாரணப் பையனுக இல்லை. உத்ஸாகமாக இருக்கிருன்! உங்களுடைய இந்தச் சக்தியை நீங்கள் இந்த வீட்டில் மறைத்து வைத்துவிட முடியுமா? அதன் பிரகாசம் ஒரு நாள் எல்லோர் மேலும் விழுந்து தானே ஆகவேண்டும்? அந்த ஜ்வாலையைக்கொண்டு நாட்டிலுள்ள எல்லாத் தீபங்களையும் ஏற்றி எங்கும் தீபாவளி யாகக் கொண்டாடலாம்'' என்ருர் ஸந்தீப்.

என் பெருமையின் பிர்காசத்தில் மங்கிய கண்களுடன் நான் என் பக்தனுக்கு இந்த வரத்தை அளிப்பதாகத் தீர்மானித்தேன். நான் நினைத்ததை அடையாமல் செய்ய ஒருவராலும் முடியாது என்று எனக்கு மிகுந்த தைரியம். ஸந்தீப் பாபுவுடன் பேசிவிட்டு வந்த பிறகு நான் என் கூந்தலை அவிழ்த்து மறுபடியும் கட்டிக்கொண்டேன். மிஸ் கில்பி இருந்தபோது ஒருவிதமாக வாரி முடிப்பாள். அந்தப் 'பேஷன்' என் கணவருக்கு நிரம்பப் பிடிக்கும்.

''ஒரு ஸ்திரீயின் கழுத்தின் லாவண்யத்தையெல்லாம் எடுத்துக் காட்டுவதற்குக் காளிதாச மகாகவியைத் தேர்ந்தெடுக்காமல் தெய்வம் எனனைத் தேர்ந்தெடுத்ததே, என்ன பரிதாபம்! தாமரை மலரின் அடித்தண்டோ என்று கவிகள் இதை வர்ணிப்பார்கள். உன் கருங் கூந்தலாகிய அனல் பிழம்பைத் தாங்கி நிற்கும் தீவட்டி என்றே உன் கழுத்தை நான் நினைக்கிறேன்'' என்று கூறிவிட்டு, என் கணவர் என் கழுத்தை......அந்தோ! அதைப்பற்றியெல்லாம் இப்போது சொல்லுவானேன்?

நான் என் கணவரைக் கூப்பிட்டனுப்பினேன். முன்பெல்லாம் அவரைக் கூப்பிடுவதற்கு எவ்வளவோ வியாஜங்களையெல்லாம் கற்பித்துக் கூறுவேன். அதெல்லாம் இப்போது நின்று போய்விட்டது. அப்படிக் கற்பிக்கும் வன்மைகூட இப்போது எனக்கு இல்லை.

# நிகிலேசன்

பஞ்சுவின் மனைவி நீண்ட காலம் க்ஷயரோகத்தினால் பீடிக்கப்பட்டிருந்து கடைசியில் இறந்துபோனாள். அந்தத் தோஷத்தை நிவர்த்தி செய்வதற்கு ரூபாய் இருபத்து மூன்றரை செலவு செய்ய வேண்டும் என்று சொன்னார்கள்.

''நன்றாக இருக்கிறது பஞ்சு! அவர்கள் சொல்வதைக் கேட்காதே!'' என்றேன் நான், வெகு கோபத்துடன்.

தளர்ந்த பார்வையுடன் பஞ்சு என்னை நிமிர்ந்து பார்த்தான். ''பிரபு, என் மூத்த பெண்ணுக்கு வயசாகி விட்டது. கல்யாணம் செய்ய வேண்டும். மனைவியின் உத்தரக்கிரியைகள் வேறு நடக்கவேண்டும்'' என்றான்.

''தோஷ பரிகாரம் செய்ய வேண்டும் என்றால், நீதான் வேண்டிய அளவு கஷ்டப்பட்டிருக்கிறாயே!'' என்றேன்.

''ஆம் பிரபு! இருந்த நிலத்தையெல்லாம் விற்று டாக்டருக்குக் கொடுத்துவிட்டேன். ஆனாலும் பிராம்மணர்களுக்குக் கொடுக்க வேண்டியதைக் கொடுத்துத்தானே ஆகவேண்டும்? வேறு வழி இல்லையே!''

மேலும் மேலும் பேசி என்ன பயன்? இப்படித் தானம் வாங்கும் பிராம்மணர்களின் பாவத்தை யார் போக்குவது? அந்தக் காலம் எப்போது வருமோ!

மனைவி இறந்து கிரியைகள் எல்லாம் முடிந்தன. ஏற்கனவே பட்டினி கிடந்துகொண்டிருந்த பஞ்சுவின் நிலைமையை இப்போது கேட்க வேண்டுமா? எப்படியாவது நெஞ்சம் சாந்தியடைவதற்காக அவன் ஒரு சந்நியாசியைத் தேடி அடைந்தான். அதனால் குழந்தைகள் பட்டினியாகக் கிடப்பதையும் மறந்துபோவதற்கு வேண்டிய வேதாந்தம் அவனுக்கு ஏற்பட்டது. உலகமே ஒரு மாயை, அதில் சந்தோஷமும் இல்லை துக்கமும் இல்லை என்ற நம்பிக்கையை மேற்கொண்டான். கடைசியாகத் தானே ஒரு

சந்நியாசியாகி ஒரு நள்ளிரவில் குழந்தைகளையும் வீட்டையும் விட்டுவிட்டுச் சென்றுவிட்டான்.

இந்த விவரமெல்லாம் எனக்கு உடனே தெரியாது. நான் என்ன என்னவோ கவலைகளில் மூழ்கியிருந்தேன். பஞ்சுவின் குழந்தைகளைத் தம் வீட்டுக்கு அழைத்துக் கொண்டு வந்து தம் பராமரிப்பில் வைத்துக்கொண்டிருக்கும் விஷயத்தை என் குருதேவரும் என்னிடம் சொல்லவில்லை.

ஒரு மாதம் கழித்துப் பஞ்சு விரக்தி மாறியவனாகத் திரும்பி வந்தான். அவன் மூத்த பெண்ணும் பிள்ளையும் அவனைக் கட்டிக்கொண்டு, "அப்பா! இவ்வளவு நாள் எங்கே போயிருந்தீர்கள்?" என்று அழுதார்கள். அவன் கடைசிப் பிள்ளை அவன் மடியில் ஏறி உட்கார்ந்து கொண்டான். அவன் இரண்டாவது பெண் அவன் முதுகில் சாய்ந்து கழுத்தைக் கட்டிக்கொண்டாள்.

"ஐயோ சுவாமி! நான் என்ன செய்வேன்? இவர்களுக்கு வயிறு நிறைய ஆகாரம் இடக்கூட எனக்குச் சக்தி இல்லையே. ஆயினும் இவர்களை விட்டுச் செல்லவும் என்னால் முடியவில்லையே! இப்படிக் கஷ்டப்பட நான் என்ன பாவம் செய்தேன்!" என்று பஞ்சு என் குருதேவரிடம் அழுதான்.

பஞ்சுவின் வியாபாரம் இடையில் நின்றுபோனதால் அதை மறுபடியும் ஆரம்பிப்பதும் இயலாது போல் இருந்தது. ஆகவே அவன் என் குருதேவரையே நம்பி அவர் வீட்டை விட்டுச் செல்லும் பேச்சே எடுக்காமல் இருந்துவிட்டான்.

"இதோ பார் பஞ்சு!" என்றார் என் குருதேவர் கடைசியாக. "உன் வீட்டைப் போய்ப் பார்க்காவிட்டால் அது அடியோடு இடிந்து விழுந்துவிடும். நான் கொஞ்சம் பணம் கடனாகத் தருகிறேன். அதை வைத்துக்கொண்டு நீ முன் போல் வியாபாரம் செய். மெதுவாகக் கொஞ்சம் கொஞ்சமாக நீ கடனைத் திருப்பிக் கொடுத்துவிடலாம்" என்றார்.

இது பஞ்சுவுக்குப் பிடிக்கவில்லை. உலகில் ஈகை என்பதே இல்லையா என்று நினைக்கலானான். கடன் வாங்கிய

பணத்துக்கு, 'ரசீது வேண்டும்' என்று என் குருதேவர் கேட்டபோது அவனுக்கு அது ஓர் உபகாரமாகவே தோன்றவில்லை. என் குருதேவரோ கடனைக் கொடுக்க வில்லை என்றால் வாங்கியவர்கள் கடமைப்பட்டவர்களாக ஆய்விடுவார்களே என்ற எண்ணத்தினால் அவ்வாறு செய்யவில்லை. தம் மதிப்பை இழப்பது ஜாதிப் பிரஷ்ட மாவதற்குச் சமானம் என்பது அவர் கொள்கை.

பணத்துக்கு ரசீது எழுதிக் கொடுத்த பிறகு பஞ்சு வுக்கு அவரிடம் இருந்த பக்தியெல்லாம் குறைந்து விட்டது. காலில் விழுந்து நமஸ்கரிப்பதைக்கூட விட்டு விட்டான். அதைக் கண்டு என் குருதேவர் புன்னகை கொண்டார். அவன் சாஷ்டாங்க நமஸ்காரம் செய் யாததே அவருக்குத் திருப்தியாக இருந்தது. "ஒருவருக்கு ஒருவர் மரியாதையுடன் பழகவேண்டுமே ஒழிய, பக்தி யெல்லாம் அதிகப்படிதான்" என்று அவர் சொல்லுவார்.

பஞ்சு, சந்தையில் துணிகள் வாங்கி, கிராமங்களில் விற்றுவந்தான். அதில் அவனுக்கு அதிக லாபம் கிடைக்க வில்லை என்றாலும் அரிசி, சணல் முதலியவைகளையும் விற்று வந்ததில் கிடைத்ததைக்கொண்டு கடனை அடைத்து வந்தான். இரண்டு மாதத்தில் அவன் கடனை முற்றும் திருப்பிக் கொடுத்துவிட்டான். அதனுடன் அவன் நமஸ் காரமும் குறைந்துகொண்டே வந்தது. ஒரு பெரிய மகான் என்று தான் போற்றியவர் கேவலம் பண ஆசையை வெல்லமுடியாத சாதாரண மனிதரே என்று அவன் கருதி யிருப்பான்.

அவன் இவ்வாறு காலக்ஷேபம் செய்துகொண் டிருந்த போதுதான் சுதேசி இயக்கம் அவனையும் தாக்கலாயிற்று.

அப்போது விடுமுறைக் காலம். எங்கள் கிராமத் திலும், சுற்றுவட்டத்திலும் உள்ள அநேக இளைஞர்கள் விடுமுறைக்கு ஊருக்கு வந்திருந்தனர். அவர்கள் அனைவரும் ஸந்தீபைத் தலைவனாக ஏற்று அவனைப் பின்பற்றலாயினர். சிலர் ஆர்வம் மிஞ்சிப்போய்த் தங்கள் படிப்பையே துறந் தனர். பல பையன்கள் என் பள்ளிக்கூடத்தில் சம்பளம் இல்லாமல் படித்துவந்தார்கள். சிலர் கல்கத்தாவில் என்னு டைய உபகாரச் சம்பளத்தில் படித்தார்கள். அவர்கள்

ஒன்றுகூடி என்னிடம் வந்து, "சுக்ஸாயர் கடைகளில் விதேசிப் பொருள்களை விற்கக்கூடாது" என்று சொன்ஞர்கள்.

"அவ்வாறு நான் செய்ய முடியாது" என்று சொன்னேன்.

"ஏன் ஐயா? அதனால் உங்களுக்கு அதிக நஷ்டம் ஏற்படுமோ?" என்று அவர்கள் இடைவெட்டாகக் கேட்டார்கள்.

அவர்கள் இகழ்ச்சியாகப் பேசியதை ஒன்றும் நான் கவனிக்கவில்லை. "நஷ்டம் எனக்கல்ல, எளிய வியாபாரிகளும் வாடிக்கையாக வாங்கும் ஜனங்களுமே நிரம்பவும் பாதிக்கப்படுவார்கள்" என்று சொல்ல வாயெடுத்தேன். அதற்குள் என் பக்கத்தில் இருந்த குருதேவர் குறுக்கிட்டு, "ஆம், நஷ்டம் அவருக்கேயொழிய உங்களுக்கு இல்லை. அதில் என்ன சந்தேகம்?" என்ருர்.

"ஆயினும் தேசத்துக்காக...."

"தேசம் என்ருல் வெறும் பூமியா? அதில் இருக்கும் ஜனங்கள் அல்லவா?" என்ருர் குருதேவர். மறுபடியும், "அவர்கள் ஸ்திதி எப்படி இருந்தது என்பதை நீங்கள் கொஞ்சமாவது யோசித்திருக்கிறீர்களா? இப்போது நீங்கள் வந்து அவர்கள் இந்தத் துணிதான் கட்டவேண்டும், இந்த உப்பைத்தான் உபயோகிக்கவேண்டும் என்றெல்லாம் உத்தரவிடுகிறீர்களே. அவர்கள் ஏன் இந்தக் கொடுமையைப் பொறுத்துக்கொண்டிருக்கவேண்டும்? நாங்களும் எதற்காகப் பேசாமல் இருக்கவேண்டும்?" என்ருர்.

"நாங்கள் நாட்டுத்துணி, நாட்டு உப்பு, நாட்டுச் சர்க்கரை இவைகளைத்தான் உபயோகிக்கிறோம்."

"நீங்கள் உங்கள் இஷ்டப்படி செய்துகொள்ளுங்கள். உங்களுக்குப் பணம் இருப்பதால் கவலை இல்லை. ஆனால் எளிய ஜனங்கள் உங்களை என்ன செய்தார்கள்? அவர்களை நீங்கள் எதற்காகப் பலவந்தப்படுத்தவேண்டும்? அவர்கள் ஜீவித்திருப்பதே மிகுந்த சிரமமாக இருக்கிறது. அவர்கள் தரித்திரத்தின் கொடுமை எவ்

வளவு என்பதுகூட உங்களுக்குத் தெரியாது. நீங்கள் எவ்வளவோ மேன்மையாக வளர்ந்தவர்கள். உங்கள் கோபத்தைக் காட்டுவதற்கு இந்த ஏழைகளையா பிணை யாக்குவது? அது பேடித்தனம் அல்லவா?''

அவ்விளைஞர்கள் அனைவரும் குருதேவரிடம் கல்வி பயின்றவர்கள். ஆகையால் அவர்கள் உள்ளம் கோபத் துடன் கொதித்தெழுந்த போதிலும் மரியாதைக் குறை வாகப் பேச அவர்கள் துணியவில்லை.

''அப்படியானால் ஐயா, நீங்கள் ஒருவர்தாம் தேச சேவைக்குத் தடையாக இருப்பீர்களோ?'' என்றார்கள் அவர்கள் என்னை நோக்கி.

''அப்படிச் செய்யத் துணிவதற்கு நான் யார்? தேச சேவைக்காக என் உயிரையும் கொடுப்பவன் அல் லவா நான்?'' என்றேன்.

எம். ஏ. க்குப் படித்துக்கொண்டிருந்த ஓர் இளைஞன் ஒருவிதமான புன்னகையுடன், ''ஆனால் நீங்கள் எவ்வி தத்தில் தேச இயக்கத்துக்கு உதவி செய்துகொண் டிருக்கிறீர்கள் இப்போது?'' என்று கேட்டான்.

''நம் தேசத்தில் நூற்ற மில் நூல்களை நம்மூர்க் கடைகளிலும் பக்கத்தூர்க் கடைகளிலும் விற்பதற் காக வரவழைத்திருக்கிறேன்.''

''நாங்கள் கடைகளுக்குப் போய்ப் பார்த்தோம். அந்த நூல்களை ஒருவரும் வாங்குவார் இல்லையே!'' என்றான் அதே இளைஞன்.

''அது என் தவறு? அல்லது கடைகளின் தவறு என்றுதான் சொல்ல முடியுமா? இதனால் நாட்டில் ஜனங் கள் இன்னும் உங்கள் கொள்கைகளை ஏற்றுக்கொள்ள வில்லை என்று ஏற்படுகிறது அல்லவா?''

''அதுமட்டும் அல்ல'' என்றார் குருதேவர்; ''நீங்கள் பிறரை இம்சிப்பதென்று பிரதிக்ஞை செய்துகொண் டிருக்கிறீர்கள் என்றும் ஏற்படுகிறது. உங்களைப்போல் பிரதிக்ஞை செய்துகொள்ளாத வியாபாரிகள் அந்த நூல் களை வாங்கவேண்டும். நெசவுக்காரர்கள் அவைகளை

நெய்யவேண்டும்; அந்தத் துணிகளை ஜனங்கள் வாங்க வேண்டும் என்று சொல்கிறீர்கள். அதற்கு ஏற்பட்ட வழி என்ன? நீங்கள் கூச்சல் இடுகிறீர்கள்; கஷ்டம் ஜமீன்தார்களுக்கு. முடிவு: நியாயம் எல்லாம் உங்கள் பக்கம்; கஷ்டம் எல்லாம் அவர்களுடையது.''

''நீங்கள் என்ன கஷ்டம் அடைந்தீர்கள் என்று தெரிந்துகொள்ளலாமா?'' என்று ஒரு விஞ்ஞான மாணவன் கேட்கலானான்.

''நீங்கள் தெரிந்துகொள்ளவேண்டுமா? சொல்லுகிறேன் கேளுங்கள்'' என்றார் என் குருதேவர்; ''அந்த மில் நூல்களையெல்லாம் வாங்குவது யார்? நிகில்தான். அந்த நூலை நெய்வதற்கென்று ஒரு நெசவுப் பள்ளிக் கூடம் ஏற்படுத்தவேண்டி யிருக்கிறது. கடைசியில் ஒரு வழியாக நெய்து முடித்தபோது பார்த்தால் சரிகைத் துணி நெய்த செலவு ஆய்விடுகிறது. துணி லேசாக, உபயோகம் அற்றதாக இருந்தபோதிலும் டிராயிங் ரூம் வாசலுக்குத் தொங்கவிடுவதற்கு ஒரு வேளை பிரயோஜனப்படலாம். உங்களுக்கே உங்கள் விரதத்தைப்பற்றி அலுப்பு ஏற்படும்போது அந்தத் துணியைப் பார்த்து நீங்கள்தாம் யாவரையும்விட அதிகமாகச் சிரிப்பீர்கள். அதன் வேலைப்பாட்டைப் பார்த்து யாராவது உண்மையில் வியப்பதாக இருந்தால் அவர் அந்நிய தேசத்தவராகத்தான் இருப்பர்.''

என் குருதேவர் எனக்கு இவ்வளவு காலமாகப் பழக்கமாக இருந்தபோதிலும் அவ்வளவு படபடப்பாக அவர் பேசியதை அன்றுதான் கண்டேன். அவருக்கு என்மேலுள்ள அன்பினால் இதுகாறும் அவர் தம் வருத்தத்தை உள்ளூற அடக்கி வைத்திருந்தார்; அது இன்று அவரையும் மீறி வெளிப்பட்டது.

''நீங்கள் பெரியவர்கள். உங்களுடன் நாங்கள் வாதாடுவது அழகல்ல. ஆயினும் முடிவாகச் சொல்லுங்கள். விதேசித் துணிகளைக் கடைகளில் விற்பதை நீங்கள் தடுக்கப்போவதில்லையே?'' என்று டாக்டர் பரீக்ஷைக்குப் படித்துக்கொண்டிருந்த மாணக்கன் ஒருவன் வினவினான்.

''இல்லை. அவை என் கடைகளா, நான் அப்படிச் செய்வதற்கு?'' என்றேன்.

''உங்களுக்கு அதனால் நஷ்டம் உண்டாகும் அல்லவா?'' என்றான் அந்த எம். ஏ. வகுப்பு இளைஞன்.

''நஷ்டம் யாருக்கோ அவன்தான் அதைச் சொல்ல முடியும்'' என்றார் என் குருதேவர்.

''வந்தே மாதரம்'' என்று சத்தம் போட்டுக்கொண்டு அவ்விளைஞர்கள் அவ்விடத்தை விட்டுச் சென்றார்கள்.

சில நாளைக்குப் பிறகு குருதேவர் பஞ்சுவை என்னிடம் அழைத்து வந்தார். அவன் ஊர் ஜமீன்தார் அவனுக்கு நூறு ரூபாய் அபராதம் விதித்ததும் அன்றி அவனை ஊரை விட்டும் துரத்திவிடுவதாகப் பயமுறுத்தியதாகத் தெரிந்தது.

''ஏன், என்ன குற்றத்துக்காக?'' என்று கேட்டேன்.

''விதேசித் துணிகளை விற்றதற்காக'' என்றான். பஞ்சு; ''கடன் வாங்கிய பணத்தைக்கொண்டு வாங்கிய துணிகள் ஆகையால் அவற்றை இப்போது விற்றுவிடுகிறேன். இனிமேல் அவ்வாறு செய்வதில்லை'' என்று எங்கள் ஜமீன்தார் ஹரீசகுண்டரை வேண்டிக்கொண்டேன். ஆனால் அவர் அதைக் காதில் வாங்கிக்கொள்ளவே இல்லை. 'உடனே துணிகள் அவ்வளவையும் கொளுத்திவிட வேண்டும்' என்று கட்டளையிட்டார். நான் ஒன்றும் தோன்றாமல், 'ஐயோ, என்னால் அப்படிச் செய்ய முடியுமா? நீங்கள் தாம் பிரபு ஆயிற்றே! நீங்களே அவைகளை வாங்கி எரித்துவிடுங்களேன்!' என்று கூச்சலிட்டேன். அதனால் அவருக்குப் பின்னும் கோபம் அதிகரித்தது. என்னைச் செருப்பால் அடிக்கும்படி செய்து நூறு ரூபாய் அபராதமும் விதித்துவிட்டார்'' என்றான்.

''துணிகள் என்ன ஆயின?''

''எல்லாவற்றையும் கொளுத்திவிட்டார்கள்.''

''அங்கே இன்னும் யார் இருந்தார்கள்?''

"எவ்வளவோ பேர்கள். எல்லோரும் 'வந்தே மாதரம்' என்று கத்தியவண்ணம் இருந்தார்கள். ஸந்தீப் பாபுவும் இருந்தார். எரிந்த சாம்பலை அவர் கொஞ்சம் கையில் எடுத்துக்கொண்டு, 'சகோதரர்களே! விதேசி வியாபாரத்துக்கு அந்திமக் கிரியைகளைச் செய்யும்பொருட்டு இட்ட முதல் தீ இது. இந்தச் சாம்பல் பாவனமானது. உங்கள் சுதேசி விரதத்துக்கு அறிகுறியாக இதை உடம்பில் பூசிக் கொள்ளுங்கள்' என்றார்."

"பஞ்சு! நீ இதற்குப் பிராது கொடுக்க வேண்டியது தான்" என்றேன்.

"எனக்குச் சாட்சி யார் சொல்லுவார்கள்?"

"ஏன் சாட்சி இல்லை? ஸந்தீப், ஸந்தீப்!" என்று கூப்பிட்டேன்.

"ஏன்? என்ன சமாசாரம்?" என்று கேட்டுக்கொண்டு ஸந்தீப் அறையை விட்டு வெளியே வந்தான்.

"இம்மனிதனுடைய துணிகளைக் கொளுத்தினதாக நீ சாட்சி சொல்லுவாய் அல்லவா?"

"ஆம்; ஆனால் கேஸில் நான் எதிர்க்கட்சியில் அல்லவா இருப்பேன்?" என்றான் ஸந்தீப் புன்னகையுடன்.

"கட்சியைப்பற்றி என்ன? நீ உண்மையைத்தானே சொல்ல வேண்டும்?" என்றேன்.

"நடப்பதெல்லாந்தான் உண்மையா?"

"பின்பு வேறு எது உண்மை?"

"எது சரியோ அது அல்லவா உண்மை? உண்மைக்கு நாம் பாடுபடும்போது எவ்வளவோ பொய்யும் கலந்துதான் இருக்கும். உலக வாழ்க்கையில் வெற்றியடைந்தவர்கள் உண்மையைத் தாமே உண்டாக்குவார்கள். வேறு எதையும் கண்ணை மூடிக்கொண்டு பின்பற்ற மாட்டார்கள்."

"அப்படியானால்..."

"ஆகவே, நானும், பெரிய சாம்ராஜ்யங்களை நிலை நாட்டியவர்கள், மதங்களை ஸ்தாபித்தவர்கள், சமூகக்

கோட்பாடுகளை வகுத்தவர்கள் இவர்களைப்போல் பொய்ச் சாட்சிதான் சொல்லப்போகிறேன். ஆள்வன்மை உள்ள வர்கள் பொய்க்குப் பயப்படமாட்டார்கள். உண்மைக்கு அஞ்சுபவர்களுக்குத்தான் அதன் சிரமம் ஏற்படுகிறது. நீ சரித்திரங்களில் படித்ததில்லையா? பெரிய அரசியல் விவகாரங்கள் நடக்கும்போது பொய்யல்லவா அவை களில் பிரதானமாக இருக்கிறது?''

''பெரிய அரசியல் விவகாரங்கள் கிடக்கட்டும்; இப்போது...''

''நீ அவைகளில் சம்பந்தப்பட மாட்டாய் என்பது எனக்குத் தெரியும். விவகாரங்களெல்லாம் தீர்ந்த பிறகு கலந்துகொள்பவர்களில் சேர்ந்தவன் நீ. அவர்கள் வங்காளத்தைப் பிரித்துவிட்டு உனது நன்மைக்குத்தான் என்று சொல்லுவார்கள். கல்வியின் கதவுகளை நன்ருக அடைத்துவிட்டுக் கல்வி முறையையே உயர்த்துவதாகச் சொல்லிவிடுவார்கள். ஆனுல் எது நடந்தாலும் நீங்கள் ஒரு மூலையில் உட்கார்ந்து முணுமுணுத்துக் கொண்டு மிக நல்லவர்களாக இருந்துவிடுவீர்கள். கெட்டவர்களாகிய நாங்கள்தாம் பொய்யினுல் பாது காப்பு ஏதாவது உண்டுபண்ண முடியுமா என்று பார்க்கவேண்டும்.''

''நிகில்! இவ்விஷயங்களைப் பற்றி வாதிப்பதில் பயன் இல்லை. 'உண்மையை இருட்டை விட்டு வெளிச் சத்தில் கொண்டு வருவதுதான் மனிதனின் உயர்ந்த நோக்கம்; இம்மைப் பொருள்களைச் சேமிப்பதல்ல' என் பதில் உள்ள உண்மையை உணராதவர்கள் இதை எவ்வாறு அறியக்கூடும்?'' என்று குருதேவர் நடுவில் கூறினுர்.

இதைக் கேட்ட ஸந்தீப் சிரித்தான். ''வாஸ்தவம் சுவாமி! ஒரு பள்ளிக்கூட உபாத்தியாயருக்கு ஏற்ற படியே பேசுகிறீர்கள். இம்மாதிரி நான் புஸ்தகங்களி லும் படித்திருக்கிறேன். ஆனுல் உலகில் அதிகப் பொரு ளைச் சேர்ப்பதுதான் மனிதனின் முக்கிய வேலை என்று தெரிகிறது. அதில் கைதேர்ந்தவர்கள் பெரிய பொய் களைத்தான் விளம்பரம் செய்கிருர்கள். கூர் மழுங்கின

பேனுக்களைக் கொண்டு அரசியல் கணக்குப் புத்தகங்களில் பொய்க்கணக்கு எழுதி வைக்கிறார்கள். தினசரிப் பத்திரிகைகளில் பொய்யை நிரப்பி, தொத்து நோய்களைக் கொண்டுசெல்லும் பூச்சிகளைப் போல் பொய்யையே எங்கும் பிரசாரம் செய்கிறார்கள். இப்பெரியார்களைப் பின்பற்றுபவர்களில் நானும் ஒருவன். காங்கிரஸ் கட்சியில் நான் சேர்ந்தபோது நூற்றுக்குத் தொண்ணூறு வீதம் பொய்யையே உபயோகிக்க நான் தயங்கியவன் அல்ல. இப்போது நான் அதை விட்டு வந்து விட்டாலும் மனிதன் அடைய வேண்டியது வெற்றியே ஒழிய உண்மை அல்ல என்னும் மூலக்கொள்கையை நான் மறக்கவில்லை.''

''ஆம், சத்தியமான வெற்றி'' என்று குருதேவர் அவன் சொற்களைத் திருத்தினார்.

''அப்படித்தான் இருக்கட்டுமே. ஆனால் சத்தியமான வெற்றியென்னும் பலமானது அசத்தியம் என்னும் வயலை உழுது பயிரிட்டால்தான் ஏற்படுகிறது. அதை அடியோடு நன்றாகக் கிளற வேண்டும். சத்தியமோ முட்களையும் பூண்டுகளையும்போல் தானே வளருகிறது. அதனால் புழுக்களுக்குத்தான் பலன் ஏற்படும்.'' இவ்வாறு கூறிவிட்டு ஸந்தீப் வெளியே சென்று விட்டான்.

குருதேவர் சிறிது புன்னகையுடன் என்னை நோக்கினார். ''நிகில்! ஸந்தீப் மதப்பற்றே ஒன்றும் இல்லாத நாஸ்திகன் என்று தோன்றவில்லை. அவன் மதம் சந்திரனின் மறுபுறம்போல் உண்மைக்குப் புறம்பாக இருக்கிறது. பிரகாசம் எல்லாம் மேல் பக்கத்துக்குப் பதிலாகப் பின் பக்கத்துக்குப் போய்விட்டது; அவ்வளவுதான்'' என்றார்.

''அதனால்தான் எங்கள் இருவருக்கும் ஒத்துக் கொள்ளாவிட்டாலும் எனக்கு அவனிடம் எப்போதும் பிரியம் மட்டும் இருக்கிறது. அவன் என்னை எவ்வளவோ வருத்தப்படுத்தியிருக்கிறான். இனியும் செய்வான். என்றாலும் அவனோடு சண்டையிட என்னால் முடியவில்லை.''

''எனக்கு அது இப்போதுதான் தெரிந்தது'' என்றார் குருதேவர். பின்னும் அவர், '''நீ எப்படி அவனைச் சகித்துக்கொண் டிருக்கிறாய் என்று நான் வெகு நாளாக ஆச்சரியப்பட்டது உண்டு. கோபத்தைக் காட்ட உனக்குத் தைரியம் இல்லை என்றுகூட நான் சில சமயம் சந்தேகிக்கிறேன். நீங்கள் இருவரும் சேரா விட்டாலும் உங்களிடம் ஒற்றுமை இருக்கிறது என்பது இப்போது விளங்குகிறது'' என்றார்.

''என் விஷயத்தில் எதுகை மோனை இல்லாத சாதா ரணச் செய்யுள்தான் விதிக்கப்பட்டிருக்கிறது. ஆகவே அத்தகைய கவிதையுள்ள நண்பன் எனக்கு எதற்கு?'' என்று அவர் பேசிய ரீதியிலேயே பதில் கூறினேன்.

''சரி; அப்புறம் பஞ்சு விஷயத்தில் என்ன செய்கிறது?''

''ஹரீசகுண்டன் அவனை வீடுவாசலினின்றும் துரத்திவிடுவதாக இருக்கிறான் என்று சொன்னீர்களே? நான் அவற்றை விலை கொடுத்து வாங்கி அவனை என் ஆதீனமாகச் செய்துவிடுகிறேன்.''

''பிரபுக்களாகிய நீங்கள் சண்டையிட்டால், போலீஸ் கழுகுகள் சந்தோஷமாக வந்து கூடும். ஜனங்களுக்கும் வேடிக்கையாக இருக்கும். ஆனால் கடைசியில் ஏழையாகிய நான்தான் கொல்லப்படுவேன்'' என்றான் பஞ்சு, வேதனையோடு.

''உனக்கு அதில் என்ன கஷ்டம் உண்டாகும்?''

''அவர்கள் என்வீடு, குழந்தைகள் எல்லாவற்றையும் கொளுத்தித் தீர்த்துவிடுவார்களே!''

''நான் குழந்தைகளைப் பார்த்துக்கொள்ளுகிறேன். நீ உனக்கு இஷ்டமான வியாபாரம் செய். அவர்கள் உன்னை ஒன்றும் செய்யமாட்டார்கள்'' என்றார் குருதேவர்.

நான் அன்றைத்தினமே பஞ்சுவின் வீடு வாசலை யெல்லாம் வாங்கி என்னுடையவை ஆக்கிக்கொண்டேன். அப்புறந்தான் கஷ்டம் ஏற்பட்டது.

பஞ்சுவின் பாட்டன் நிலத்துக்குப் பஞ்சு ஒரே வார்சுதான் என்பது யாவருக்கும் தெரிந்ததே. ஆனால் இப்போது எங்கிருந்தோ மாமி ஒருத்தி தன் மூட்டை முடிச்சுகளுடனும் விதவையான ஒரு மருமகளுடனும் வந்து முளைத்தாள். அவள் பஞ்சுவின் வீட்டில் டிகானு போட்டதுடன் ஆயுள் பரியந்தம் சொத்து வரும்படியில் தனக்கும் ஒரு பங்கு கேட்கலானாள்.

பஞ்சு திகைத்துப் போய்விட்டான். "என் மாமி வெகு நாளைக்கு முன்னமே இறந்துவிட்டாளே!" என்றான்.

அதற்கு அவள், மாமாவின் முதல் மனைவியை நினைத்து அவன் சொல்லுகிறான் என்றும் அவன் மாமா உடனே மறுபடியும் கல்யாணம் செய்துகொண்டார் என்றும் சொன்னாள்.

"மாமிக்கு முன்பே என் மாமா போய்விட்டாரே! அவர் எப்படி மறுபடியும் கல்யாணம் செய்துகொள்வது?" என்றான் பஞ்சு, ஒன்றும் விளங்காமல்.

"ஆம், முதல் மனைவி இறந்த பிறகுதான் இரண்டாவது கல்யாணம் செய்துகொண்டார் என்று ஒருவரும் சொல்லவில்லை. முதல் மனைவி இருக்கும்போதே செய்துகொண்டதுதான்" என்று அதற்கும் சமாதானம் கூறியாகிவிட்டது. சக்களத்தியுடன் இருக்கப் பிரியம் இல்லாமல் புருஷன் இறந்து போகும் வரையில் தான் பிறந்த வீட்டிலேயே இருந்ததாகவும் கணவன் இறந்த பிறகு பிருந்தாவனத்துக்குச் சென்று இப்போது அங்கிருந்து நேரே வருவதாகவும் அவள் சொன்னாள். இந்த வரலாறெல்லாம் ஹரீசகுண்டரின் வேலையாட்களுக்கும் இன்னும் சில பேர்களுக்கும் தெரியும் என்று சாட்சிகளையும் எடுத்துக் கூறினாள்.

அன்று மத்தியான்னம் பஞ்சுவின் விஷயமாக விசாரணை செய்து நான் அலுத்துப் போயிருந்த சமயத்தில், விமலா கூப்பிடுவதாக ஆள் வந்து சொன்னான். எனக்குக் கொஞ்சம் திகைப்பாக இருந்தது.

"யார் கூப்பிடுவதாகச் சொன்னாய்?" என்று வந்த ஆளைக் கேட்டேன்.

"ராணி அவர்கள்தாம்" என்ருன்.

"பெரிய ராணியா?"

"இல்லை எசமான்! சின்ன ராணி அவர்கள்தாம்."

சின்ன ராணியா? அவள் என்னைக் கூப்பிட்டு எவ்வளவோ காலம் ஆகிவிட்டதுபோல் தோன்றிற்று. நான் உடனே எழுந்து அந்தப்புரத்துக்குச் சென்றேன். நான் அறைக்குள் நுழைந்ததும் விமாலவைப் பார்த்து ஆச்சரியம் அடைந்தேன். அவள் புதிதாக அலங்கரித்துக் கொண்டிருப்பதுபோல் காணப்பட்டாள். கொஞ்ச காலமாகக் கவனிக்காமல் அலங்கோலமாக இருந்த உள்ளும் பழையபடி சுத்தமாக விளங்கியது. விமலாவை மௌனமாக நோக்கிக்கொண்டு நின்றேன்.

வெட்கத்திஞல் அவள் முகம் கொஞ்சம் சிவந்தது. வலதுகை விரல்களிஞல் இடது கையில் இருந்த வளைகளை முன்னும் பின்னுமாகத் தள்ளி விட்டுக்கொண் டிருந்தாள். சற்றுப் பொறுத்து, "இதோ பாருங்கள். நம் ஊர்க் கடைகளில் மட்டும் விதேசிச் சாமான்களை விற்கலாமா?" என்ருள்.

"ஆஞல் என்ன செய்யவேண்டும் என்று சொல்லுகிருய்? அவைகள் என் சாமான்கள் அல்லவே!"

"ஆஞல், சாமான்கள் விற்கும் இடம் உங்களுடையது அல்லவா?"

"அங்கே வியாபாரம் செய்பவர்களுக்குத்தான் அந்த இடம் என்னைக்காட்டிலும் சொந்தம்."

"அவர்கள் உள்நாட்டுச் சாமான்களை வைத்து வியாபாரம் செய்யட்டுமே!"

"எனக்கு வெகு சந்தோஷந்தான். ஆஞல் அவர்கள் மாட்டேன் என்ருல்..."

"என்ன பேச்சு! அப்படிச் சொல்ல அவர்களுக்குத் தைரியம் வந்துவிடுமா? நீங்கள் அல்லவா......"

"எனக்கு இன்று அதிக வேலை இருக்கிறது. இதைப்பற்றித் தர்க்கம் செய்ய முடியாது. நான் ஒருவரையும் பலவந்தம் செய்யமாட்டேன்."

"சொந்த நலத்துக்கென்றால் தவறுதான். தேசத்துக்காக அவ்வாறு செய்வது பலவந்தமாகாது."

"தேசத்துக்காகப் பிறரைப் பலவந்தம் செய்வது, தேசத்தையே பலவந்தம் செய்வது போலத்தான். அதெல்லாம் உனக்கு விளங்காது என்று நினைக்கிறேன்" என்று கூறிவிட்டு நான் வெளியே வந்துவிட்டேன்.

திடீரென்று எனக்கு எல்லாம் பளிச்சென்று தெரிவதுபோல் தோன்றிற்று. பூமியே லேசாகித் தினமும் சகல ஜீவராசிகளையும் உஜ்ஜீவிக்கும் பெரும்பாரத்தை அலக்ஷ்யமாக ஏற்றுச் சுற்றிக்கொண் டிருப்பது போன்ற உணர்ச்சி ஒன்று உண்டாயிற்று. ஆகா! அதற்குத்தான் என்ன சக்தி! இரவு பகல் இடைவிடாமல் சுழன்று கொண்டிருக்கிறதே! யார்தாம் அதைப் பிடித்து நிறுத்த முடியும்? என்னுள்ளிருந்து ஏதோ ஓர் ஆனந்தம் நீர்த்தாரைபோல் மேலே எழும்பி ஆகாயத்தை எட்டியது போல் தோன்றிற்று.

இத்தகைய உணர்ச்சி உண்டாவதற்கு என்ன காரணம் என்று நானே அடிக்கடி கேட்டுக்கொண்டேன். முதலில் ஒன்றும் விளங்கவில்லை. பிறகுதான் இரவும் பகலும் நான் நினைத்து வேதனையுற்றிருந்த பந்தம் அறுந்தது என்பது எனக்குத் தெளிவாகத் தெரியலாயிற்று. இனி என் மனத்தில் ஒரு சஞ்சலமும் இல்லை என்பதைக் கண்டேன். விமலாவின் சம்பந்தமான ஒவ்வொன்றும் திரையில் காணும் படம்போல் எனக்குத் தெளிவாகத் தெரியலாயிற்று. என்னைத் திருப்தி செய்து காரியத்தை நிறைவேற்றிக்கொள்வதற்காக அவள் பிரத்தியேகமாக அலங்கரித்துக்கொண் டிருந்தாள். அதுவரையில் விமலாவையும் அவள் அலங்காரத்தையும் நான் வேறு வேறாகவே பார்த்ததில்லை. இன்று அவள் ஆங்கிலப் பாணியில் தலையை வாரிக் கட்டியிருந்தது எனக்கு வெறும் அலங்காரமாகவே பட்டது. அவள் இயற்கை உருவத்துடன் சேர்ந்து மிக்க அருமையாகத் தோன்றியது போய் இப்போது அற்பமாகித் தன்னைத் தானே விலை கூறிக்கொள்வதுபோல் இருந்தது.

நான் அவ்வறையை விட்டு வெளியே வந்தேன். எதிரில் இரு பக்கங்களிலும் புஷ்பச் செடிகள் வைத்துப் பயிராக்கிய நடைபாதை தெரிந்தது. செடிகளில் இருந்த சிவந்த மலர்கள் சூரிய வெளிச்சத்தில் ஒரே சிவப்பாகத் தோன்றின. மரங்களில் சில பட்சிகள் உட்கார்ந்து கத்திக்கொண் டிருந்தன. தூரத்தில் ஒரு மாட்டு வண்டி இருந்தது. மாடுகள் இரண்டையும் அவிழ்த்து விட்டிருந்தனர். அவைகளுள் ஒன்று மேய்ந்துகொண் டிருந்தது. மற்றொன்று புல்தரையில் சுகமாகக் கண்ணை மூடிக் கொண்டு படுத்திருந்தது. காக்காய் ஒன்று அதன்மேல் உட்கார்ந்து பூச்சிகளைக் கொத்திக்கொண் டிருந்தது.

இயற்கையின் உள்ளத்துடன் நானும் கலந்துகொண்டதுபோல் எனக்குத் தோன்றிற்று. அதன் மூச்சுக் காற்று வெளியில் இருக்கும் மலர்களின் மணத்துடன் என்மேல் படுவதுபோல் இருந்தது. உலகெல்லாம் சுயேச்சையுடன் இருக்க விவரிக்க முடியாத ஒரு மங்கல இன்னிசை கிளம்பி எங்கும் நிறைந்தது போலும் தோன்றிற்று.

அந்தச் சுதந்தர நிலைதான் நம்முடைய லக்ஷ்யம். அதைத் தேடிக்கொண்டு செல்லும் வீர புருஷர்கள் நாங்கள். செல்வதற்குக் கையில் கொடி தயார் செய்து கொடுப்பவள்தான் நமக்கு ஏற்றவள். வீட்டில் நமக்கு மோகன வலையை விரித்திருக்கும் பெண்ணின் மாறு வேஷத்தைக் களைந்து அவளுடைய உண்மை இயல்பை அறியவேண்டும். நம்முடைய ஆவல்களினாலும் கற்பனைகளாலும் அவளை அலங்கரித்து நாம் எதை அடைய விரும்புகிறோமோ அதை நாம் அடையவொட்டாமற் செய்யும்படி விடக்கூடாது.

நான் இதில் வெற்றியடைந்து விடுவேன் என்று எனக்கு இன்று தோன்றுகிறது. எளியவர்களுடைய வாசலை நான் அடைந்துவிட்டேன். விஷயங்களை உள்ளபடி பார்க்கும் திறமை எனக்கு ஏற்பட்டுவிட்டது. நான் சுதந்தர நிலையை அடைந்துவிட்டேன். பிறரும் சுதந்தரம் அடையும்படி செய்வேன். இனி இதில்தான் எனக்கு விமோசனம் உண்டாகும்.

ஒவ்வொரு சமயம் என் உள்ளத்துக்கு ஏதாவது வேதனை உண்டாகலாம். ஆனாலும் அவ்வேதனை என்ன என்பது எனக்கு நன்றாக விளங்குவதால் இனி நான் அதைப் பாராட்டாமல் இருக்க முடியும். என் ஒருவனை மட்டும் பொறுத்த விஷயந்தானே அது? அது எப்படிப் பிரமாதமாகும்? எல்லா மக்களையும் பாதிக்கும் கஷ்டங்களே இனி எனக்கும் உரியனவாகும்.

சத்தியமே! என்னைக் காப்பாற்று. மாயையின் பொய்யில் இனி நான் மோகம் கொள்ளும்படி செய்யாதே! நான் தனியாகத்தான் செல்லவேண்டும் என்றால் உன் வழியையே பின்பற்றி நடப்பேன். சத்தியத்தின் முழக்கமானது என்னை வெற்றிப்பாதையில் கொண்டு செல்லட்டும்.

# ஸந்தீப்

அன்று விமலா என்னைக் கூப்பிட்டனுப்பினுள். ஆனல் சிறிது நேரம் வரையிலும் அவளால் ஒன்றும் பேச முடியவில்லை. அவள் கண்களில் கண்ணீர் நிறைந் திருந்தது. அவளால் நிகிலேச் சம்மதிக்கச் செய்ய முடிய வில்லை என்பதை உடனே அறிந்துகொண்டேன். தான் நினைத்ததை நிறைவேற்றிக்கொள்ள முடியும் என்று அவளுக்கு எவ்வளவோ நம்பிக்கை இருந்தது. எனக்கு மட்டும் தெரியும்; அவள் விரும்பியது நடக்காது என்று. புருஷர்களின் மனம் சலிக்கும்போது ஸ்திரீகள் தெரிந்துகொண்டு விடுவார்கள். ஆனல் புருஷர்கள் உறுதியாக இருக்கும்போது அவர்களால் கொஞ்சமும் அறிந்துகொள்ள முடியாது. உண்மை என்னவென்ருல் எப்படி ஸ்திரீ புருஷனுக்கு விளங்காத நிலையில் இருக் கிருளோ அப்படியேதான் புருஷனும் ஸ்திரீயின் கண்க ளுக்குத் தோன்றுகிருன். அது அவ்வாறு இல்லாவிட்டால் இயற்கையில் ஆண் பெண் என்று இரு பிரிவு ஏற்பட் டிருப்பது வீண் என்றுதான் சொல்லவேண்டும்.

ஆகா! அவள் செருக்கு அல்லவா குன்றிவிட்டது! நடக்க வேண்டியது நடக்கவில்லையே என்றுகூட வருத்தம் இல்லை. அவள் தன் மானத்தையெல்லாம் விட்டு வேண் டிக்கொண்டபோதும் பயனில்லை என்ருல்! ‘நான்’ என்றும், ‘என்னுடையது’ என்றும் நினைக்கும் விஷயத் தில் ஸ்திரீயினிடம் எவைகளெல்லாம் குறிப்பாகவும் இங் கிதமாகவும் வெளியாகின்றன. அவளுடைய அழகெல்லாம் அதில்தான் அமைந்திருக்கிறது. தன்னைப்பற்றிய எண் ணம் புருஷனைக்காட்டிலும் அவளுக்கு எவ்வளவோ அதிகம். புருஷனைச் சிருஷ்டிக்கும்போது பிரம்மா நீதிகளையும் கொள்கைகளையும் வைத்துக்கொண்டு வெறும் உபாத்தியாயராக இருந்தார். ஆனல் ஸ்திரீயைப் படைக்கும்போதோ, அவர் உபாத்தியாயராக இருப்

பதை விட்டு வர்ணப்பெட்டியையும் எழுதுகோலையும் கொண்ட ஓர் ஓவியர் ஆகிவிட்டார்.

அவமானத்தினால் நீர் துளும்பிய கண்களுடன் விமலா கீழ்வானத்தில் மின்னலுடன் தங்கி நிற்கும் நீருண்ட மேகம்போல் மௌனமாக நின்றபோது விளங்கிய அவள் அழகைக் கண்டதும் என்னால் பேசாமல் இருக்க முடியவில்லை. அவளிடம் சென்று அவள் கையைப் பற்றிக் கொண்டேன். அது நடுங்கிக்கொண்டிருந்தது. அவள் அதை என்னிடமிருந்து இழுத்துக்கொள்ளவே இல்லை.

"ராணி! நாம் இருவரும் சேர்ந்து வேலை செய்பவர்கள். நம் இருவர் நோக்கமும் ஒன்று. ஆகவே உட்கார்ந்து அதைப்பற்றிப் பேசுவோம்" என்று கூறிவிட்டு அவளை ஒரு நாற்காலிக்கு இட்டுச் சென்று உட்காரச் செய்தேன். என்ன விந்தை! இந்தச் சமயத்தில் என் வேகத்துக்கு ஏதோ ஒரு முட்டுக்கட்டை ஏற்பட்டுவிட்டதே! பத்மா நதியில் வெள்ளம் ஒரே அடியாகப் பெருகிக் கரையுடைத்துச் செல்லும்போது இப்படித்தான் திடீரென்று நிதானமாகிவிடும். அதுபோல் உள்ளுக்குள் தோன்றும் ஏதோ ஒரு சிறிய தடங்கல் என் தேகத்தை ஒன்றும் இல்லாமல் செய்துவிடுகிறது. விமலாவின் கையைப் பற்றிக்கொண்டிருந்தபோது என் நரம்புகளெல்லாம் சேர்ந்து வீணை நாதம்போல் ஒலித்தன. ஆனாலும் திடீரென்று அவ்வின்னிசை நின்றுவிட்டதே!

ஏன்? என்ன இடையூறு சம்பவித்தது? ஒன்றல்ல; எவ்வளவோ இடையூறுகள். ஒன்றும் தெளிவாகத் தெரியாவிட்டாலும் சொல்ல முடியாத ஏதோ ஒரு தடங்கல் நேரிட்டதுபோன்ற உணர்ச்சி! என்னைப்பற்றியே என்னால் நிச்சயமாகச் சொல்ல முடியவில்லை என்று மட்டுந்தான் விளங்குகிறது. எனக்கே நான் ஒரு மர்மமாக இருப்பதனாலா என்னிடமே எனக்கு ஒரு வசீகர உணர்ச்சி தோன்றுகிறது? நானே என்னை முற்றும் ஒரு தரம் அறிந்து கொண்டுவிட்டால் பிறகு எனக்கு ஒன்றும் தேவையில்லை.

நாற்காலியில் உட்கார்ந்திருந்த விமலாவின் முகம் வெளுத்துப் போய்விட்டது. மிக்க நெருக்கடியான நிலைமை ஒன்று ஏற்பட்டும் அது தன்னை ஒன்றும் செய்யாமல் சென்

றதை அவளும் அறிந்துகொண்டுதான் இருப்பாள். தூமகேது தாண்டிப் போய்விட்டாலும் அதன் வாலின் ஸ்பரிசமே அவள் சக்திக்குமேல் போய்விட்டது.

அவள் தன் பழைய நிலையை அடைவதற்காக நான், "ராணி, இடையூறுகள் அப்படித்தான் இருக்கும். அத ஞல் நாம் மனம் தளர்ந்துபோகக்கூடாது" என்றேன். விமலா சிறிது கனைத்துத் தொண்டையைச் சரிப்படுத்திக் கொண்டு, "ஆம்" என்று முணுமுணுத்தாள்.

"சரி, இப்போது என்ன செய்யலாம் என்று பார்ப் போம்" என்று சொல்லிச் சட்டைப்பையிலிருந்து ஒரு பேப் பரையும் பென்சிலையும் எடுத்தேன்.

கல்கத்தாவிலிருந்து வந்த தொண்டர்களின் பெயர் களையெல்லாம் ஒவ்வொன்ருகக் குறித்து அவர்களுக்கு இடவேண்டிய வேலையையும் குறிக்கத் தொடங்கினேன். அதற்குள் விமலா எழுந்து, "இப்போது வேண்டாம். சாயங்காலம் வருகிறேன். அப்போது பார்த்துக்கொள் ளலாம்" என்று சொல்லிவிட்டு வேகமாக அறையை விட்டுப் போய்விட்டாள். அவள் ஒன்றையும் கவனிக் கக்கூடிய நிலைமையில் இல்லை என்று தெரிந்தது. தனியாகச் சிறிது நேரம் படுக்கையில் படுத்துக்கொண்டு அழவேண் டும் என்று தோன்றிற்ருே என்னவோ!

சூரியாஸ்தமனம் ஆனவுடன் மேகங்கள் வர்ணப் பொலிவுடன் விளங்குவதுபோல் அவள் சென்ற பிறகு என் உள்ளத்தின் மயக்கம் இன்னும் அதிகமாயிற்று. 'அடடா! எப்படிப்பட்ட அரிய சந்தர்ப்பத்தை நழுவ விட் டோம்!' என்று எண்ணினேன். 'என்ன கோழையாகிவிட் டேன்! என் தாமதத்தைப் பார்த்து வெறுப்புடன் அல்லவா அவள் சென்றிருப்பாள்! ஏன் செல்ல மாட்டாள்?'

இத்தகைய உணர்ச்சிகளின் வசத்தில் நான் ஆழ்ந் திருந்தபோது ஒரு வேலையாள் வந்து அமூல்யன் வந்திருப்ப தாகச் சொன்ஞன்.

"அவனைப் பார்க்க முடியாதென்று சொல்லி அனுப்பி விடவேண்டும் என்று நினைத்தேன். அதற்குள் அவன் உள்ளே வந்துவிட்டான். துணி, சர்க்கரை, உப்பு இவை

காரணமாக அங்கங்கே நடந்துகொண் டிருந்த சண் டையைப்பற்றிய சமாசாரங்களை இருவரும் சிறிது நேரம் பேசியதும் என் மயக்கம் குறைந்துவிட்டது. ஏதோ ஒரு கனவினின்றும் விழித்து எழுந்தவன்போல் தோன்றிற்று. தேசத்தின் நிமித்தம் சண்டையிட உத்சாகத்துடன் தயா ரானேன்.

ஜமீன்தார் ஹரீசகுண்டரின் குடிகள் அநேகம் பேர் எங்கள் பக்கம் சேர்ந்துவிட்டார்கள். நிகிலின் கீழ் வேலை பார்த்திருந்தவர்கள்கூட அநேகர் ரகசியமாக எங் கள் கட்சியில் சேர்ந்துகொண்டனர். தங்களிடம் இருந்த சாமான்களை விற்றுவிட அநுமதி அளிப்பதாக இருந்தால் மார்வாடி வியாபாரிகள் அபராதம் செலுத்திவிடுவதாகச் சொன்னார்கள். சில முகம்மதிய வியாபாரிகள்தாம் கொஞ் சம் பிடிவாதமாக இருந்தனர்.

ஒரு குடியானவன் தன் குடும்பத்துக்கென்று சில ஜர்மான் சால்வைகளை வீட்டுக்குக் கொண்டுபோய்க் கொண்டிருந்தான். அவைகளைப் பிடுங்கிக் கொளுத்திவிட்ட னர், எங்களைச் சேர்ந்த சில கிராம இளைஞர்கள். அதனால் கொஞ்சம் கலவரம் ஏற்பட்டது. அவைகளுக்குப் பதிலாகச் சுதேசிச் சால்வைகள் வாங்கித் தருவதாகக் கூறினோம். ஆனால் மலிவான சுதேசிச் சால்வைகள் எங்கே கிடைக்கும்? காஷ்மீர் சால்வைகளை வாங்கிக் கொடுக்க முடியுமா? அவன் நிகிலிடம் போய் முறையிடவே நிகில் கோர்ட்டில் பிராது கொடுக்கும்படி அவனிடம் கூறினான். ஆனால் நிகி லின் வழக்கு ஏஜண்டே எங்கள் கட்சியில் இருந்ததால் விசாரணையால் ஒரு பயனும் ஏற்படாமல் நிகிலின் ஆட் களே பார்த்துக்கொண்டுவிட்டார்கள்.

கொளுத்திய துணிகளுக்குப் பதில் சுதேசித் துணிகளை வாங்கிக் கொடுத்து அதற்குமேல் வழக்கும் ஆடுவதென் றால் இவைகள் யாவற்றுக்கும் பணம் எங்கே கிடைக்கும்? எல்லாவற்றுக்கும் மேல் பெரிய விசேஷம் என்னவென்றால் விதேசிப் பொருள்களைக் கொளுத்துவதாலேயே அவை களுக்கு அதிகக் கிராக்கி ஏற்பட்டு லாபம் அந்நிய நாட்டுக் குப் போய்ச் சேருவதாக இருந்தது. கண்ணாடி உடையும் சத்தத்தைக் கேட்டுச் சந்தோஷித்துக் கடைக்காரனுடைய

விளக்குகளையெல்லாம் நவாப் உடைத்தது கடைக்கார னுக்கு லாபமானது போலத்தான் இதுவும் ஆயிற்று.

மலிவாகவும் பகட்டாகவும் உள்ள சுதேசிக் கம்பளிகள் இல்லாததால் விதேசிக் கம்பளித் துணிகளை ஒழிப்பதா அவைகளை மட்டும் விற்க அநுமதிப்பதா என்ற பிரச்னை எழுந்தது.

"இதோ பார். விதேசிச் சாமான்களைக் கொளுத்திய பிறகு அவைகளுக்குப் பதில் சுதேசிச் சாமான்களை வாங்கி அவர்களுக்கு அளிப்பதென்பது முடியாத காரியம்: அவர்கள்தாமே அபராதம் கொடுக்கப்போகிறார்கள். கொடுக்கட்டும்! அவர்கள் கோர்ட்டுக்குச் சென்றால் நாம் அவர்கள் நெல் களஞ்சியத்தைக் கொளுத்திவிட்டால் போகிறது. என்ன திடுக்கிட்டுப் பார்க்கிறாய்? அமூல்யா, எல்லாவற்றையும் தீக்கு இரையாக்குவதில் எனக்கு ஆனந் தமா? இது தேசப்போர் என்பது ஞாபகம் இருக்கட்டும். உனக்கு அப்படிச் செய்யப் பயமாக இருந்தால் நீ காதல் விளையாட்டு விளையாடிக்கொண் டிரு. இம்மாதிரி வேலைக்கு ஏற்றவனல்ல" என்றேன்.

என்னவானாலும் விதேசிச் சாமான்கள் விஷயத்தில் ஒரு தயவும் பார்ப்பதில்லை என்று தீர்மானித்தேன். பழைய காலத்தில் விதம் விதமான அந்நிய நாட்டுக் கலர் சால்வைகள் கிடைக்காதபோது நம் ஜனங்கள் சாதா ரணத் துணிப்போர்வைதானே போர்த்துக்கொண் டிருந் தார்கள்? இனிமேலும் அவர்கள் அப்படியே செய்யக் கற்றுக்கொள்ளட்டுமே! துணிப் போர்வைகள் அவ்வளவு பகட்டாக இரா; உண்மைதான். ஆனால் கண்ணுக்கு அழகாக இருப்பவைகளைக் கவனிக்கும் காலமா இது?

விதேசிச் சாமான்களை ஏற்றிவர முடியாதென்று பட குக்காரர்களை யெல்லாம் சொல்லும்படி செய்துவிட் டோம். அவர்களுள் முக்கியமான மீர்ஜான் என்பவன் தான் கொஞ்சம் பிடிவாதமாக இருந்தான்.

"அவன் படகை முழுக அடிக்க முடியாதா?" என்று மானேஜரைக் கேட்டேன்.

"அதை ஒரு நொடியில் செய்துவிடலாம். ஆனால் கடைசியில் குற்றம் என் தலையில் விழுந்துவிட்டால்?" என்றான் அவன்.

"அப்படியெல்லாம் நேரும்படி செய்வானேன்? ஏதாவது நேர்ந்தால் அதை ஏற்றுக்கொள்வதற்கு நான் இருக்கிறேன்."

சாமான்களை யெல்லாம் இறக்கிய பிறகு மீர்ஜானுடைய படகைக் கரைக்கு அருகில் நிறுத்தியிருந்தார்கள். மானேஜர் ஏதோ தமாஷ் ஏற்படுத்தி அதற்கு யாவரையும் அழைத்திருந்ததால் படகில் ஒருவரும் இல்லை. இருட்டிய பிறகு தட்டுமுட்டுச் சாமான்களுடன் ஆற்றில் விடப்பட்டு நடு ஆற்றை அடைந்ததும் அது முழுகிப் போயிற்று.

மீர்ஜானுக்கு விஷயம் விளங்கிவிட்டது. கண்ணீருடன் என் காலில் விழுந்தான். "நான் செய்தது தவறுதான்" என்று ஆரம்பித்ததும், "அதை எப்படித் திடீரென்று தெரிந்துகொண்டாய்?" என்றேன் கடுமையாக.

அவன் அதற்குச் சரியான பதில் சொல்லாமல், "அந்தப் படகு 2000 ரூ. விலை பெறும். என் பிழையைத் தெரிந்துகொண்டேன். இப்போது மன்னித்துவிட்டால் இனிமேல் நான் ஒருபோதும்..." என்றான்.

அவனைப் பத்து நாளைக்குப் பிறகு வரச்சொன்னேன். அவனுக்கு அந்த ரூபாய் 2000-த்தையும் கொடுத்துவிட்டால் அப்புறம் அவன் முற்றும் எங்களைச் சேர்ந்தவன் ஆகிவிடுவான். இப்படிப் பட்ட மனிதன்தான் எவ்வளவோ பிரயோசனமாக இருப்பான். வேண்டும்போதெல்லாம் நிறையப் பணம் கிடைக்கவில்லை என்றால் ஒரு காரியமும் ஆகாது.

சாயங்காலம் விமலா டிராயிங் ரூமுக்கு வந்ததும் நான் அவளிடம், "ராணி, எல்லாம் தயாராக இருக்கிறது. வெற்றி கையிலேயே இருக்கிறது. ஆனால் பணந்தான் தேவை" என்றேன்.

"பணமா? எவ்வளவு?" என்றாள் விமலா.

"அவ்வளவு அதிகம் ஒன்றும் இல்லை. ஆனால் எப்படி யாவது கிடைக்கவேண்டும்."

"எவ்வளவு என்று தெரியவில்லையே?"

"ஓர் ஐம்பதினாயிரம் கிடைத்தால் இப்போது சத்தியாகப் போதும்."

அந்தத் தொகையைக் கேட்டதும் விமலாவுக்கு உள்ளுக்குள் பகீரென்றது. ஆனால் அவள் அதைக் காட்டிக்கொள்ளவில்லை. மறுபடியும் தோல்வியடைவ தென்றால் கஷ்டமாக இராதா?

"ராணி! உங்களுக்குத்தான் அசாத்தியமெல்லாம் சாத்தியமாகும். ஏற்கனவே செய்து காட்டியிருக்கிறீர் கள். நீங்கள் செய்தது எவ்வளவு என்று மட்டும் என்னால் காட்ட முடிந்தால் அப்போது உங்களுக்குத் தெரியும். ஆனால் அதற்கெல்லாம் இப்போது நேரம் இல்லை. இப்போது பணந்தான் வேண்டும்."

"பணம் கிடைக்கும்" என்றாள் விமலா.

தன் நகைகளை விற்றுக் கொடுத்துவிடலாம் என்ற எண்ணம் அவள் மனத்தில் எழுந்தது என்று தெரிந்தது.

"உங்கள் நகைகளை ஒன்றும் செய்யக் கூடாது. அவை கள் அப்படியே இருக்கட்டும். எப்போது அவைகளும் வேண்டியிருக்குமோ யார் கண்டார்கள்?"

இதைக் கேட்டதும் விமலா பேசாமல் என்னைப் பார்த்துக்கொண்டு நின்றாள்.

"நிகிலின் கஜானாவிலிருந்துதான் இந்தப் பணம் வர வேண்டும்" என்றேன்.

விமலா திகைத்துப் போய்விட்டாள். வெகுநேரம் கழித்து அவள், "அவர் கஜானாவிலிருந்து எப்படி எடுப் பது?" என்றாள்.

"நிகிலின் பணம் என்றால் அது உங்கள் பணம் அல்லவா?"

"அது எப்படி ஆகும்?" அதைச் சொன்னபோது அவ்ளுக்கு ரோஷமாக இருந்தது.

"உங்களுக்குச் சொந்தம் இல்லை என்றால் அந்தப் பணம் நிகிலுக்கும் சொந்தம் இல்லைதான். அது தேசத்துக்கே சொந்தமாகும். தேசத்துக்குத் தேவையாக இருக்கும் போது அதை அவன் வைத்துக்கொள்ளலாமா?"

"ஆனால் அது எப்படி நமக்குக் கிடைக்கும்?"

"நீங்கள் தாம் எப்படியாவது கொண்டுவர வேண்டும். அது உங்களுக்குத்தான் தெரியும். பாரதமாதாவுக்கு உரியதை நீங்கள் அவளுக்கே அளிக்கவேண்டும். வந்தே மாதரம்! இந்த மந்திரத்தைச் சொன்னால் அவன் கஜானாவின் இரும்புக் கதவுகள் தாமே திறந்துவிடும். ராணி! எங்கே, 'வந்தே மாதரம்' என்று சொல்லுங்கள்."

"வந்தே மாதரம்" என்றாள் விமலா.

ஆண்களாகிய நாங்கள் அரசர்கள் போன்றவர்கள். பிறர் எங்களுக்குக் காணிக்கை செலுத்தவேண்டும். பூமியில் நாங்கள் தோன்றியது முதல் அதைக் கொள்ளை யடித்து வருகிறோம். நாங்கள் கேட்கக் கேட்க அதுவும் கொடுத்துக்கொண்டு வருகிறது. சிருஷ்டியின் ஆரம்பம் முதலே நாங்கள் பூமியை உழுவது, மரங்களை வெட்டு வது, மிருகங்களையும் பறவைகளையும் மீன்களையும் கொன்று தின்பது ஆகிய இந்தக் காரியங்களைச் செய்து வருகிறோம். கடலுக்கு அடியோ பூமியோ யம புரமோ எதுவானாலும் எங்கானாலும் ஒரே அடி அடித்துப் பிடுங்குவதுதான் எங்கள் வேலை. இயற்கைத் தேவியின் எவ்வளவு பந்தோபஸ்தான இடத்திலும் நாங்கள் கை வைக்காமல் விட்டு வைப்பதில்லை.

ஆண் மக்களாக உள்ளவர்கள் கேட்பதை அளிப்பதில் தான் பூமிதேவிக்கு ஒரே மகிழ்ச்சி. அவர்களுக்காக அவள் செய்யும் கணக்கற்ற தியாகங்களினால்தான் அவள் அழகும் வளமும் பெற்று விளங்குகிறாள். அப்படி இல்லை யென்றால் அவளை அடையாளம் கண்டுகொள்வது எது? அவள் முத்தும் வைரமும் அடியில் புதைந்து கிடக்க வேண்டியன அல்லவா?

இதைப்போலவே, மேன்மேலும் கேட்பதாலேயே ஸ்திரீகளிடம் உள்ள முழுத் திறமையையும் நாமே வெளிக் குக் கொண்டு வருகிறோம். சரண் புகுவதில்தான் அவர் களுக்கு உண்மையான உயர்வு ஏற்படுகிறது. சந்தோஷ மாகிய வைரங்களையும் துக்கமாகிய முத்துக்களையும் நம் கஜானாவில் சேர்த்தவுடன்தான் அவர்கள் உண்மையான செல்வத்தைப் பெறுகிறார்கள். ஆகவே தமக்கென்று ஏற்றுக் கொள்ளும்போதே புருஷர்கள் உண்மையாக அளிப்பவர் களாகவே இருக்கிறார்கள். ஸ்திரீகளுக்கோ கொடுப்பதில் தான் நிறைவு ஏற்படுகிறது.

விமலாவிடம் நான் இப்போது கேட்டது மிகப் பெரிய விஷயமே. முதலில் அது நியாயம் அல்ல என்று எனக்குத் தோன்றியது. இத்தகைய போராட்டம் புருஷனுக்கு வழக்கமே அல்லவா? மிகவும் சிரமமான காரியத்தை அளித்துவிட்டோமே என்று தோன்றிய தால் அவளை மறுபடி கூப்பிட்டு இம்மாதிரியான சங்க டங்களில் அவளை ஆழ்த்தி அவள் வாழ்க்கையைத் துன் புறுத்த இஷ்டமில்லை என்று சொல்வோமென்று நினைத் தேன். புருஷன் முரட்டுத்தனமாகத்தான் இருக்க வேண்டும். பெண்ணின் அசைவற்ற நிலையைத் தூண்டி அவளுடைய வாழ்க்கையைப் பயனுறச் செய்வதும், அளவு கடந்த துன்பத்தை உண்டாக்கி அதனால் உலகத்தையே பாக்கியமுள்ளதாக்குவதுமே அவன் வேலை என்பதை நான் ஒரு நிமிஷம் மறந்துவிட் டேன். அதனால் அல்லவா புருஷனின் கைகள் அவ்வ ளவு பலமாகவும் அவன் பிடிப்பு அவ்வளவு உறுதியாகவும் இருக்கின்றன?

ஏதாவது பெரிய தியாகம் செய்யும்படி நான் கேட்க வேண்டுமென்று விமலா மனப்பூர்வமாக விரும்பினாள். வேறு எவ்விதம் அவளுக்குத் திருப்தி உண்டாகும்? இவ் வளவு வருஷங்களாகத் தன் உள்ளத்தை விட்டுப் புலம்ப வேண்டும் என்று அல்லவா அவள் காத்துக்கொண் டிருக் கிறாள்? ஒரு குறைவும் இல்லாத ஒரு நிலையான சந்தோ ஷத்தை அடைந்து அவள் எவ்வளவு சலித்துப் போய் விட்டாள்! ஆகவே என்னைக் கண்டதுமே இனி வரப்

போகும் துன்பமாகிய இருண்ட மேகங்கள் அவள் உள்ளத்தின் அடிவானத்தில் தோன்றிவிட்டன. அத் துன்பம் அவளை அணுகவொட்டாமல் நான் செய்வ தென்றால் பிறகு நான் புருஷனுகப் பிறந்ததன் அர்த்தம் என்ன?

போயும் போயும் பணம் கேட்க வேண்டியிருக்கிறதே என்பதுதான் என் வருத்தம். அது பிக்காரித்தன மாகத் தோன்றுகிறது. பணம் புருஷனுக்குச் சொந்தமே யன்றி ஸ்திரீக்கு அல்ல. அதனால்தான் பெரிய தொகை யாகக் கூறும்படி ஆயிற்று. ஆயிரம், இரண்டாயிரம் எல்லாம் அற்பத் திருட்டு ஆகும். ஐம்பதினுயிரம் என்றால் பெரிய கொள்ளையாகத் தோன்றும். அல்லவா?

ஆகா! எனக்குப் பணம் இல்லாமல் போய் விட்டதே! அது இல்லாததனால்தானே ஆசைகள் அநேகம் நிறைவேறாமல் போயின! அது என் விஷயத்தில் சரியா? ஏதோ எனக்கு அதிருஷ்டம் இல்லை என்றாலும் பாதகம் இல்லை. ஆயினும் அற்ப விஷயங்களுக்கெல்லாம் கவலைப் படுவதென்றால்தான் மிகவும் அருவருப்பாக இருக்கிறது. என்னைப் போன்றவன் வீட்டு வாடகையைக் குறித்த காலத்தில் கொடுக்க வழியில்லாமல் திகைக்கவும், ரெயிலில் இண்டர்மீடியட் வகுப்பு டிக்கட்டுக்குச் சில்லறை நாணயங்களை ஒவ்வொன்றாக எண்ணிக் கொடுக்கவும் நேரிட்டால் - இதை விடக் கேவலம் உண்டா?

நிகிலுக்கு இவ்வளவு சொத்துத் தேவையே இல்லை என்று தெரிகிறது. அவன் தரித்திரப்படுவதுதான் நியாயமாகும். அவன் தன் ஏழைமையுடனும் கிடைக் கத்தகாத தன் குருதேவருடனும் எவ்வளவோ ஆனந்த மாக இருப்பான்.

ஒரு தடவையாவது தேசத்துக்காக ஐம்பதினுயிரம் ரூபாய்களை வீசி எறிந்து என் மனத்தைத் திருப்திசெய்து கொள்ளவேண்டும் என்று எனக்கு ஆசையாக இருக் கிறது. ஒரு நாளைக்காவது இந்தப் பிச்சைக்கார வேஷத்தைக் களைந்து என் உண்மை இயல்பைக் காண வேண்டும் என்பதே என் பேராவல்.

விமலா அந்த ஐம்பதினுயிரத்தைப் பெற முடியுமா என்பதில் எனக்குச் சந்தேகந்தான். கடைசியில் கைக்குக் கிட்டுவது ஏதாவது ஆயிரம் அல்லது இரண்டாயிர மாகத்தான் இருக்கும். போனுல் போகிறது; கிடைத்தது லாபம் என்று புத்தியுள்ளவன் நினைப்பான். ஆனுலும் என் சொந்த விஷயங்களைப்பற்றி நான் இப்போது நினைத்துக்கொண் டிருக்க முடியாது. என்னை உடனே வரும்படி தகவல் வந்திருக்கிறது. எங்கள் கட்டளைப்படி மீர்ஜானுடைய படகை மூழ்கடித்தது யார் என்பதைப் பற்றிப் போலீசுக்கு உளவு கிடைத்துவிட்டது. அவன் ஒரு பழைய பேர்வழி. அவனை அவர்கள் கண்டுபிடித்து விட்டாலும் அவன் எல்லாவற்றையும் உளறிக் கொட்டி விடமாட்டான் என்று நினைக்கிறேன். ஆனுலும் யார் கண்டது? நிகில் விழித்துக்கொண்டு விட்டான். அவ னுடைய மானேஜருக்கும் தன் இஷ்டம்போல் நடக்க முடியாமல் போய்விடலாம்.

"எனக்கு ஏதாவது தொந்தரவு ஏற்பட்டால் நான் உங்களையும் இழுத்துவிடும்படி ஆகிவிடும்" என்று அவன் என்னைப் பார்த்தபோது சொன்னுன்.

"என்னை எப்படி இதில் மாட்டிவிடுவாய்?" என்று கேட்டேன்.

"நீங்கள் எழுதிய கடிதமும் அமூல்ய பாபு எழுதிய மூன்று கடிதங்களும் என்னிடம் இருக்கின்றன" என்ருன்.

இதற்காகத்தான் 'அவசரம்' என்று எழுதி என்னிட மிருந்து பதில் கடிதம் வாங்கியிருக்கிருன் என்பது எனக்கு அப்போதுதான் தெளிவாயிற்று.

எவ்வளவோ விஷயங்கள் எனக்கு இப்போதுதான் தெரிகின்றன. போலீஸ்காரர்களுக்கு லஞ்சம் கொடுத்து மீர்ஜானுடைய படகுக்கு ஈடாகப் பணத்தையும் அவனுக் குக் கொடுக்க வேண்டும். நிகிலின் மானேஜரின் பையும் கொஞ்சம் நிறைய வேண்டும் என்று தெரிகிறது. ஆனுல் அதைப்பற்றி நான் இப்போது கவனிக்கப் போவ தில்லை. அவனும் 'வந்தே மாதரம்' என்று என்னைப்போல் உரக்கக் கத்துபவன்தானே?

இம்மாதிரி வேலைகளை ஓட்டைப் படகைக்கொண்டு நடத்த வேண்டும். அப்போதுதான் மேன்மேலும் கொள்ளுவதற்கு இடம் காலியாகும். நியாயம் என்பது எல்லாரிடமும் இருக்கிறது அல்லவா? அந்த மானேஜர் மேல் மூண்ட கோபத்தால் நம் தேசத்து மனிதர்களையே நம்ப முடியாமல் இருப்பதைப்பற்றி ஒரு பாட்டம் வைது தீர்ப்பதென்று நினைத்தேன். ஆனால் இந்தக் கடவுள் - அப்படி ஒருவர் இருப்பது நிஜமானால் - எனக்குக் கலக்கம் இல்லாத தெளிந்த புத்தியைக் கொடுத்ததைப்பற்றி நான் அவருக்கு நன்றி பாராட்ட வேண்டும். பிறர் மதியை நான் கலக்குவேனே அன்றி நான் ஒருபோதும் கலங்க மாட்டேன். ஆகவே நீண்ட நேரம் கோபம் கொள்ள என்னால் முடியவில்லை.

உண்மை என்பது நன்மையாகவும் இருக்க முடியாது, தீமையாகவும் இருக்க முடியாது. அது கேவலம் உண்மையே ஒழிய வேறு அல்ல. பூமியில் வற்றிப் போகாமல் மிஞ்சிய நீரைத்தான் ஏரி என்று சொல்லுகிறோம். எல்லா உலக விவகாரங்களையும்போல் தேசீய இயக்கத்தின் அடியிலும் சகதியுள்ள பாகம் உண்டு. அது கொஞ்சம் உறிஞ்சாமல் இருக்குமா? தனக்குத் தேவையானதை மானேஜர் எடுத்துக்கொள்வார். எனக்கும் தேவை என்பது இருக்கிறது. இந்தச் சிறிய தேவைகள் சேர்ந்ததுதான் பெரிய இயக்கத்தின் தேவைகள் ஆகின்றன. வேகமாகப் போகவேண்டும் என்றால் குதிரைக்கு நல்ல தீனி போடவேண்டும்; வண்டிச் சக்கரங்களுக்கு எண்ணெய் இட்டு நன்றாக உருளும்படி செய்ய வேண்டும்.

அதிகம் வளர்த்துவானேன்? சீக்கிரம் கையில் பணம் கிடைக்கவேண்டும். எது முதலில் சுலபமாகக் கிடைக்கிறதோ அதை எடுத்துக்கொள்ள வேண்டியதுதான்; இனிக் காத்துக்கொண்டிருக்க முடியாது. 'கடையில் இருக்கும் பலாப்பழத்தைவிடக் கையில் இருக்கும் களாக்கனி போதும்' என்று இருப்பதில் நமக்குத்தான் நஷ்டம் என்பது தெரியும். இன்று கிடைக்கும் 5000 ரூ. நாளை வரும் 50,000-த்தை இழக்கும்படி செய்துவிடும். ஆனால் அந்த அபராதத்தை ஏற்றுக்கொள்ளாமல் இருக்க வழி

இல்லை. மனத்தை நிக்கிரகம் செய்பவர்கள் தியாகம் செய்யவும் முடியாது என்று நான் நிலை எவ்வளவு தரம் குத்திக்காட்டியிருக்கிறேன்! பேராசை கொண்ட நாங்களே அடிக்கடி எங்கள் இச்சையைத் தியாகம் செய்யவேண்டியிருக்கிறது.

மனிதனுக்கு இயற்கையான பாவச் செயல்களுள் ஒன்றாகிய இச்சை வீர புருஷர்களுக்கே உரியது. கோழைகளுக்கே உரிய மதி மயக்கமோ அவர்களைச் சுவாதீனமில்லாதவர்கள் ஆக்குகிறது. மதிமயக்கந்தான் இறந்த காலத்தையும் எதிர்காலத்தையும்பற்றிய நினைவில் அவர்களை ஆழ்த்தி நிகழ்காலத்திலும் அவர்கள் காலடிகளைச் சுற்றிக்கொண்டு விடுகிறது. அந்த க்ஷணத்தில் இருப்பதை விட்டு வேறு ஏதோ ஒன்றை நினைத்துக்கொண்டிருப்பவர்கள், தன்னை விட்டுச் சென்ற காதலன் நினைவில் முழுகிய சகுந்தலையைப் போன்றவர்களே ஆவார்கள்; வந்த அதிதியைக் கவனிக்கவில்லை. எனவே ஆசைக்கு உரியதை எல்லாம் இழக்கும்படியான சாபம் தொடருகிறது.

அன்று நான் விமலாவின் கையைப் பற்றினேன். அந்த ஸ்பரிசம் அவள் உள்ளத்தைப் பின்னும் உணர்ச்சிக்கு வசமாக்கிவிட்டது. மேன்மேலும் ஸ்பரிசத்தினால் அவ்வுணர்ச்சியை மந்தமாக்கலாகாது. ஏனெனில் இப்போது இசைபோன்ற இது, பிறகு வெறும் பேச்சாகிவிடும். இப்போது, "ஏன்" என்ற கேள்விக்கு அவள் உள்ளத்தில் இடம் இல்லை. ஆகவே கனவு லோகத்தில் சஞ்சரிக்கும் இயல்புடைய விமலாவை அந்தக் கனவு லோகத்திலேயே விட்டுவைக்க வேண்டியதுதான்.

நானும் வேறு எவ்வளவோ வேலைகளில் முனைந்திருப்பதால் இப்போது காமமாகிய மதுவின் நுரையுடன் திருப்தியடைய வேண்டியதுதான். 'இச்சையுடைய மனிதனே, உன் ஆவலை அடக்கிக்கொண்டு மனப்பிரமையாகிய வீணையில் இனிய நாதத்தை எழுப்ப நீ கற்றுக்கொள்ள வேண்டும். கிண்ணத்தில் உள்ள மதுவைச் சொட்டும் விடாமல் உறிஞ்சுவதற்கு இது காலம் அல்ல.'

எங்கள் வேலை தீவிரமாக நடந்துகொண்டிருக்கிறது. 'முகம்மதியர்களும் எங்கள் சகோதரர்களே' என்று எவ்வ

ளவு தொண்டை கிழியக் கத்திய போதிலும் அவர்களை முற்றும் நம் பக்கத்துக்குக் கொண்டுவர முடியாதென்று தெரிந்துவிட்டது. ஆகவே அவர்களை நன்றாக அடக்கி நாமே யஜமானர்கள் என்பதைக் காட்டவேண்டும். இப் போது அவர்களுக்கு அது பிடிக்கவில்லை. ஆனாலும் ஒரு நாள் எங்கள் இஷ்டப்படி அவர்கள் கீழ்ப்படிந்துதான் ஆகவேண்டும்.

"ஐக்கிய இந்தியர் என்பது உண்மையானால், அதில் முகம்மதியர்களும் இருக்கத்தான் வேண்டும்" என்று நிகில் ஆக்ஷேபிப்பான்.

"வாஸ்தவந்தான். ஆனால் அவர்களை அவர்களுடைய இடத்தில் வைக்கவேண்டும். இல்லாவிட்டால் எப்போதும் தொந்தரவு கொடுத்துக்கொண்டே இருப்பார்கள்."

"அப்படியானால் ஒரு தொந்தரவை நீக்க மற்றொரு தொந்தரவை உண்டாக்கவேண்டும் என்கிறாயா?"

"நீ என்ன செய்யலாம் என்று சொல்கிறாய்?"

"சண்டைகளைத் தவிர்க்க ஒரே ஒரு சிறந்த வழிதான் இருக்கிறது" என்றான் நிகில்.

நல்ல மனிதர்கள் எழுதும் கதைகளைப்போல் நிகிலின் பிரசங்கமும் ஒரு நீதியுடன் முடியும் என்பது எனக்குத் தெரியும். இவ்வளவு தூரம் நீதிகளைப் படித்துத் தெரிந்து கொண்ட பிறகும் அவன் அவைகளில் நம்பிக்கை வைத் திருப்பதுதான் விநோதம். அவன் என்றும் ஒரு பள்ளிக் கூட மாணுக்கன்தான். உள்ளும் புறமும் ஒன்றாக அவன் யதார்த்தமாக இருப்பதுதான் அவனிடமுள்ள குணம். இப்படிப்பட்ட மனிதர்களிடம் உள்ள தொல்லை என்ன வென்றால் சாவைக்கூட அவர்கள் வாழ்க்கையின் முடி வாகக் கருதாமல் அதற்கப்பாலும் தங்கள் திருஷ்டியைச் செலுத்திய வண்ணம் இருப்பார்கள்.

நான் வெகு நாளாக ஒரு திட்டத்தை யோசனை செய்துகொண் டிருக்கிறேன். அதைச் செய்தால் தேசம் முழுவதும் ஒரே அடியாகக் கிளம்பிவிடும். நாட்டை மனித உருவத்தில் கற்பனை செய்துகொள்ளாத வரையில் உண்மையான தேசபக்தி கிளம்ப முடியாது. நாட்டைத்

தேவதையாகச் செய்யவேண்டும். என்னுடன் வேலை செய்பவர்களுக்கும் அந்த விஷயம் மனத்தில் பட்டது. "ஒரு தகுந்த உருவத்தைத் தயாரித்துவிடுவோம்" என்று அவர்கள் சொல்ல, "நாமாக ஒன்றும் தயாரிக்கக் கூடாது. நாட்டில் ஏற்கனவே வழக்கத்தில் இருக்கும் உருவங்களைத் தான் எடுத்துக்கொள்ளவேண்டும். எப்போதும்போல் அவர்கள் பக்தி செய்யவேண்டும்" என்றேன்.

இதைப்பற்றியும் நிகில் தன் ஆக்ஷேபங்களைக் கிளப்பினான். "உண்மையான ஓர் இயக்கத்துக்கு நாம் பொய்யாக ஒன்றும் கற்பிக்கக் கூடாது" என்றான். "சாதாரண அறிவுக்கு அம்மாதிரிப் பொய்கள் அவசியம். உலகில் பெரும்பாலும் குறைந்த அறிவுள்ள ஜனங்கள்தாம் அதிகம். ஆகையினால்தான் ஒவ்வொரு தேசத்திலும், 'சாமி' என்றும் 'பூதம்' என்றும் ஜனங்களின் பொருட்டு ஏற்படுத்தியிருக்கிறார்கள். மனோதைரியத்துக்காக அவை வேண்டியிருக்கின்றன என்று மனிதர்கள் நன்றாகத் தெரிந்துகொண்டிருக்கிறார்கள்."

"அப்படி இல்லை" என்றான் நிகில். "பொய்த் தோற்றங்களையெல்லாம் ஒழிப்பதற்காகத்தான் கடவுள் இருக்கிறார். அவைகளைக் காப்பாற்றும் தெய்வங்கள் பொய்த் தெய்வங்களே."

"அப்படியேதான் இருக்கட்டுமே! காரியம் கெட்டுப் போவதைக் காட்டிலும் அவசியமானால் பொய்த் தெய்வங்களைக் கூடத்தான் உபாசிக்க வேண்டும். நமக்கு இம்மாதிரி நம்பிக்கைகள் இருந்தாலும் அவைகளைக் கொண்டு நம் காரியத்தைச் சாதித்துக்கொள்ளத் தெரியவில்லை. பிராம்மணர்களைப் பார். அவர்கள் காலில் விழுந்து அவர்களைத் தேவதைகளாகக் கொண்டாடி வந்தாலும் அவர்களால் ஒரு பிரயோஜனமும் இல்லை. பிறருடைய கால் தூசியைத் தங்கள் தலையிலோ முதுகிலோ தாங்கினால் ஒழிய ஒன்றும் செய்ய இயலாதவர்களாகத் தாழ்ந்த நிலைக்கே சென்றுகொண்டிருக்கும் ஜனங்களுடைய ஒரு பெரிய வகுப்பு எப்போதும் இருந்துகொண்டுதான் இருக்கும். இந்தப் பிராம்மணர்களை இவ்வளவு காலமாக நம் ரக்ஷணத்துக்காகவே காப்பாற்றி வந்திருக்கும்

போது நமக்குத் தேவையான சமயத்தில் அவர்களால் ஒன்றும் பிரயோஜனம் இல்லாமல் ஆகிவிட்டதே!"

ஆனால் இவ்விஷயங்களையெல்லாம் நிகிலின் மூளையில் ஏற்றுவது முடியாத காரியம். ஏதோ நேரே கண்ணால் கண்டுவிட்டதுபோல் அவன், 'உண்மை, உண்மை' என்று மன்றாடுகிறான். 'சந்தேகமற்ற பொய்தான் உண்மை' என்று நான் அவனுக்கு எவ்வளவோ தரம் எடுத்துக் கூறியிருக்கிறேன். முன் காலத்தில் நம் நாட்டு அறிவாளிகள் இதை நன்றாக அறிந்திருந்தார்கள். ஆகையினால் தான் சாதாரண அறிவுள்ள மக்களுக்கு அசத்தியந்தான் சத்தியம் என்று உபதேசிக்க அவர்களுக்குத் தைரியம் இருந்தது. தங்கள் தேசத்தையே தேவதையாகப் பாவிப்பவர்களுக்கு அவ்வுருவமே உண்மைக்குச் சமானமாகும். நம் நாட்டை உள்ளபடி அறிந்துகொள்ள நம் சுபாவமும் சம்பிரதாயங்களும் இடம் கொடுப்பதில்லை. ஆனாலும் நாட்டைத் தேவ ரூபமாகப் போற்றுவதில் நமக்குச் சுலபமாக நம்பிக்கை உண்டாகிவிடும். உண்மையான தொண்டு புரியவேண்டும் என்பவர்கள் இவ்விஷயத்தை மறந்துவிடலாகாது.

இவற்றையெல்லாம் கேட்ட நிகிலுக்கு மிகுந்த படபடப்பு உண்டாகிவிட்டது. "உண்மையான மார்க்கத்தில் செல்லமுடியாமல் அதிருஷ்டம் மட்டும் எப்படியாவது ஆகாயத்திலிருந்து வந்து குதிக்கும் என்று நீங்கள் எதிர்பார்க்கிறீர்கள். ஆகையால்தான் எவ்வளவோ நூற்றுக் கணக்கான வருஷங்களாகத் தேசத்துக்குச் செய்யாத சேவைக்குப் பதிலாக நீங்கள் அதை ஒரு தேவதா ரூபமாக்கிப் பயன்பெற எண்ணுகிறீர்கள்" என்றான்.

"அசாத்தியமானதைச் செய்ய விரும்புகிறோம். அதற்காகத் தேசத்தைத் தெய்வமாக்க வேண்டியிருக்கிறது" என்றேன்.

"ஆனால் சாத்தியமான காரியங்களை நீங்கள் விரும்பவில்லையா? செய்ய வேண்டியதைச் செய்யாமல் விட்டு

விட்டுப் புது முறைகளால் அமானுஷமான பலன் கிட்ட வேண்டுமோ?''

"இதோ பார் நிகில்'' என்றேன். எனக்கு அடக்க முடியாத கோபம் வந்துவிட்டது. நீ சொல்லுவதெல்லாம் நீதிகளாக வழங்குவதற்கு ஏற்றவையே! மனிதன் சிசுவாக இருக்கும் நிலையில் இவ்வெண்ணங்கள் பால்போல் அவர்களை ஊட்டி வளர்த்தன. ஆனால் இப்போது அந்தச் சிசுவுக்குப் பல் முளைத்துவிட்டதே! இனிமேல் பால் உதவுமா? நாம் கனவிலுங்கூட நினைக்காத விஷயங்கள் நான்கு பக்கத்திலும் முளைத்தெழுந்திருப்பதை நம் கண் முன்னே நாம் பார்க்கவில்லையா? எந்தச் சக்தியினால் அவைகள் ஏற்பட்டன? நம் தேசமாகிய தெய்வத்தின் சக்தி வெளிப்பட்டு வீசுவதால் அல்லவா? அத்தெய்வத்தை மூர்த்தியாகப் பண்ணுவது நாட்டு மேதாவிகளைச் சேர்ந்தது. மேதை என்பது வாதாடுவதில் இல்லை; அது சிருஷ்டிக்கும் சக்தியை உடையது. என்னைப் போன்றவர்கள் நாட்டு மக்களின் கற்பனைக்கு உருவம் அளிப்பவர்களே ஆவோம். எனக்கு அந்தத் தேவதை சொப்பனத்தில் தோன்றியதாக எங்கும் சொல்லிவிடுவேன். பிராம்மணர்களிடம், அவர்களே அத்தேவதையின் அர்ச்சகர்களாக நியமிக்கப்பட்டவர்கள் என்றும், பூஜை சரிவர நடந்துவருகிறதா என்று பார்க்கத் தவறியதால்தான் அவர்கள் நிலை தாழ்ந்துவிட்டதென்றும் சொல்லுவேன். 'இதெல்லாம் பொய்' என்று சொல்லுகிறாயா? இல்லை, இதுதான் உண்மை. அது மட்டும் அல்ல; இந்த உண்மையை என் வாயினின்றும் கேட்டுத் தெரிந்துகொள்ளத்தான் இவ்வளவு காலமாக ஜனங்கள் காத்துக்கொண்டிருக்கிறார்கள். அதை அவர்களுக்கு எடுத்துக் கூறச் சமயம் மட்டும் வாய்த்தால் அப்புறம் அதன் ஆச்சரியமான விளைவை நீயே பார்ப்பாய்.''

"என் ஆயுட்காலமோ அற்பமானது. நீ கூறும் விளைவும் முடிவானதுஎன்று சொல்ல முடியாது. இதற்குத்தான் நான் அஞ்சுகிறேன். இதன் பின்விளைவுகள் உடனே தெரியாமல் இருக்கலாம்.''

"இன்று உண்டாகும் பலனைத்தான் நான் வேண்டுகிறேன்'' என்றேன்.

"நான் வேண்டுவதோ முக்காலத்துக்கும் ஏற்றது" என்றான் நிகில்.

வங்காளியாகப் பிறந்தது வீண் போகாமல் நிகிலுக்கு நல்ல கற்பனை சக்தி இருக்கலாம். ஆனால் ஏதோ நினைவினால் அவன் அதைக் குட்டிச்சுவர் ஆக்கிக்கொண்டுவிட்டான். இப்போது இந்த நாட்டில் நடக்கும் துர்க்கா தேவியின் உபாசனையை எடுத்துக்கொள்வோம். அதை மிகப் பெரிய சாதனை என்றுதான் சொல்ல வேண்டும். முகம்மதியர்களின் ஆதிக்கத்தினின்றும் விடுதலைக்காக நாடு கஷ்டப்பட்ட நாளில் தேசிய உணர்ச்சியையே, சக்தி சொரூபத்தில் தோன்றும் துர்க்காதேவியாகப் பாவித்திருப்பார்கள் என்று நினைக்கிறேன். இந்தியாவிலுள்ள வேறு எந்த மாகாணம் இந்த மாதிரி தன் லக்ஷ்யத்துக்கு ஏற்ற அற்புதமான உருவத்தைச் சிருஷ்டித்திருக்கிறது?

நிகில் கூறிய பதிலிலிருந்தே அவன் கற்பனை சக்தி எவ்வளவு குறைந்து போயிற்று என்று தெரிகிறது. "முகம்மதியர்களின் ஆதிக்கத்தில் மராட்டியர்களும் சீக்கியர்களும் தங்கள் கைகளில் ஆயுதங்களைத் தரித்துப் பலனை வேண்டினார்கள். ஆனால் வங்காளத்திலோ ஜனங்கள் தங்கள் தெய்வத்தின் கைகளில் ஆயுதங்களை அளித்து அதை உபாசிப்பதோடு திருப்தியடைந்துவிட்டனர். ஆகவே தெய்வத்தின் முன் பலியிடப்பெற்ற ஆடுகள் எருமைகள் இவைகளின் வெட்டுண்ட தலைகள்தாம் பலனாகக் கிடைத்தன. நேர்மையான மார்க்கத்தில் தேசத்தின் நன்மையை என்று நாடுகிறோமோ அன்றுதான் யாவற்றுக்கும் மேற்பட்ட கடவுள் நமக்கு உண்மையான பலனை அளிப்பார்."

நிகில் கூறுவனவற்றை எல்லாம் எழுதிப் படித்தால் வெகு நன்றாக இருக்கும். என் வார்த்தைகளோ அப்படி அல்ல. ஜனங்களுடைய உள்ளத்தில் அழியாமல் பதியக் கூடியவை. படித்தவன் விவசாயத்தைப்பற்றிப் பெரிய புஸ்தகம் எழுதிவிடுகிறான். ஆனால் விவசாயியோ கலப்பையைக் கொண்டு பூமியில் தன் உழைப்பைக் காட்டுகிறான்.

நான் மறுபடியும் விமலாவைப் பார்த்தபோது பேசாமல் உயர்ந்த ஸ்தாயியில் கிளம்பிவிட்டேன்.

"எவ்வளவோ யுகங்களாகப் பல கோடி ஜன்மங்கள் எடுத்து நம்முன் பிரசன்னமாகும் வரைக்கும் நாம் விடாது உபாசிக்கும் கடவுளிடம் நமக்கு மனப்பூர்வமான நம்பிக்கை உண்டா? 'உங்களைப் பாராமல் போனால் நம் நாடு முழுவதையும் ஒன்றாகப் பார்க்கும் சக்தி எனக்கு ஏற்பட்டே இராது' என்று உங்களிடம் எவ்வளவோ தரம் கூறியிருக்கிறேன். நீங்கள் என்னைச் சரியாகப் புரிந்து கொண்டீர்களோ என்னவோ! சொர்க்கத்தில்தான் கடவுள் கண்ணில் தென்படுவதில்லை. பூலோகத்தில் அவர்கள் மனிதர்கள் முன் பிரசன்னமாவது உண்டு" என்றேன்.

விமலா என்னை ஏதோ ஒரு விதமாக நோக்கினாள். பிறகு நிதானமாக, "ஸந்தீப், நீங்கள் கூறுவதெல்லாம் எனக்கு விளங்குகிறது" என்றாள். அவள் என் பெயரைச் சொல்லி அழைத்தது இதுதான் முதல் தடவை.

"தன் ரதத்தின் சாரதியாக எண்ணிய கிருஷ்ணனின் விசுவரூபத்தைக் கண்டதுந்தான் அர்ஜுனனுக்கு உண்மை புலப்பட்டது. அப்படியே உங்கள் விசுவரூபத்தை நான் என் தேசத்தில் காண்கிறேன். கங்கை, பிரம்மபுத்திரா என்னும் இரு நதிகளும் உங்கள் கழுத்தில் இடப்பட்ட பொன்மாலைகளே. நதிக்கரைக்கு அப்பால் தூரத்தில் தெரியும் மரங்கள் அடர்ந்த காடு உங்கள் மையிட்ட கண்களாக எனக்குத் தோன்றுகிறது. உங்கள் புடைவையின் பளபளப்பைக் காற்றில் அசையும் புற்களையுடைய பசுமையான வயல்களில் காண்கிறேன். ஆகாயம் முழுவதையும் நெருப்புத் தகடுபோல் ஜொலிக்கவைக்கும் சூரிய தாபம் உங்கள் மேனியின் சூரியப் பிரகாசம் போலவே எனக்குத் தோன்றுகிறது. தேவியானவள் இப்படிப்பட்ட அபூர்வ உருவத்தில் தன் பக்தனுக்குத் தரிசனம் கொடுத்திருக்கும்போது அந்தத் தேவியின் உபாசனை நாடெங்கும் பரவும்படி செய்யவேண்டியது என் கடமை அப்போதுதான் தேசத்துக்கு மீண்டும் உயிர் உண்டாகும். 'இந்த மூர்த்தியையே ஒவ்வொரு கோவிலிலும் காண்போம்' என்ற நிலை ஜனங்களுக்கு இன்னும் ஏற்படவில்லை. ஆகவே உங்கள் பெயரைச் சொல்லி அவர்கள் உபாசனைக்கென்று நான் அளிக்கும் மூர்த்தி

யிடம் அவர்களுக்கு நம்பிக்கை ஒரு நாளும் குன்றாது. என்க்கு இந்த வரத்தை-இந்தச் சக்தியை மட்டும் அளித்து விடுங்கள்.''

விமலாவின் கண்கள் தாமாகவே மூடிக்கொண்டன. அவள் ஒரு கற்சிலைபோல் அசைவற்று உட்கார்ந்து விட்டாள். நான் இன்னும் மேலே பேசியிருந்தால் அவள் சமாதியிலேயே ஆழ்ந்திருப்பாள். நான் பேச்சை நிறுத்தியதும் அவள் தன் கண்களை அகல விழித்து, கண் இமைக்காமல் பின்வருமாறு முணுமுணுக்கலானாள்:

''சங்காரத்தையே கொள்கையாகக் கொண்டவர் நீர். உங்கள் போக்கைத் தடுப்பவர் யார்? உங்கள் இச்சைகளையும் யார்தாம் குலைப்பர்! ராஜாதிராஜாக்கள் தங்கள் மணிமுடிகளை உங்கள் காலடியில் வைத்துச் செல் வார்கள். சீமான்கள் தங்கள் செல்வத்தை யெல்லாம் உங்கள் பொருட்டு அளிக்க முன்வருவார்கள். ஒன்றும் இல்லாதவர்கள் தங்கள் உயிர்களையே சமர்ப்பிக்க வேண்டு வார்கள். நீங்கள் தாம் என் அரசர்; என் தெய்வம். என்னிடம் நீங்கள் கண்டது என்னவோ எனக்குத் தெரி யாது. ஆனால் என் உள்ளத்தில் தங்கள் பிரதாபம் முழு வதையும் நான் கண்டறிந்துவிட்டேன். அதன்முன் நான் எம்மாத்திரம்! உலகத்தையே அழிக்கும் சக்தியின் பெருமைதான் என்னே! அது என்னை முற்றும் அழிக் கும் வரையிலும் நான் உயிர் தரித்திருக்க முடியாது! என் இருதயம் பிளந்துவிடும்போல் இருக்கிறது. என்னால் இனிமேல் பொறுக்கவே முடியாது.''

விமலா நாற்காலியினின்றும் நழுவி என் காலின் கீழ் விழுந்தாள். பிறகு அவள் என் காலைப் பிடித்துக் கொண்டு விம்மி விம்மி அழலானாள்.

''இதுதான் மந்திர சக்தி என்பது; உலகத்தையே வெல்லக்கூடியது. ஆயுதங்களின் துணை இன்றி வெறும் சங்கங்களே காரியத்தைச் சாதித்துவிடும். 'உண்மை தான் வெற்றி அடையும்' என்று கூறுவது யார்? மாயை தான் கடைசியில் வெல்லுகிறது. இதை அறிந்துதான் வங்கநாட்டில் பதினாறு கைகளுடன் சிம்ம வாகினியான

அம்பிகையின் உபாசனை ஏற்பட்டது. உலகையே மயக்கி வெல்லும் பொருட்டு அது மறுபடியும் புதிதாகச் சிருஷ்டி யாகவேண்டும். 'வந்தே மாதரம்''.

நான் மெதுவாக விமலாவை எழுப்பி நாற்காலியில் இருத்தினேன். அவள் மனம் எங்கே மாறிவிடுமோ என்ற அச்சத்துடன் நான் வேகமாக, ''ராணி! தன் உபாசனையை நாட்டில் நிலைநிறுத்தும் கடமையை அன்னை எனக்கு இட்டிருக்கிறாள். ஆனால் எனக்குப் பணம் இல்லையே!'' என்றேன்.

விமலாவின் மனப்பிரமை இன்னும் முற்றும் தெளிய வில்லை. தழுதழுத்த குரலில், ''உங்களுக்கா பணம் இல்லை? எல்லாருடையதும் உங்களுடையதல்லவா? எனக்கு எதற்கு நகைகள்? உங்கள் உபாசனையின் பொருட்டு அவற்றையெல்லாம் எடுத்துக்கொள்ளுங்கள். எனக்கு அவை இனிமேல் தேவையில்லை'' என்றாள்.

முன்பே விமலா தன் நகைகளை என்னிடம் அளித்து விடத் தயாராக இருந்தாள். நான் சாதாரணமாக ஒன்றை யும் கவனிப்பவன் அல்ல. ஆனாலும் இதற்கு நான் சம்ம திக்க முடியவில்லை. ஸ்திரீகளுக்கு ஆபரணங்களை அளிப்பவன் புருஷன்; அவைகளை எடுத்துக்கொள்வது அவன் ஆண்மையையே புண்படுத்தியதாகும்.

ஆயினும் நான் என்னை மறந்துவிடவேண்டும். அவை களை எடுத்துக்கொள்பவன் யார்? நானா? அன்னையின் காலடியில் சமர்ப்பிப்பதற்கு அல்லவா அவை? நாட்டில் இதுவரைக்கும் கண்டிராத சிறந்த பூஜையாக அது அமையவேண்டும். நம் சரித்திரத்திலேயே அது பிரதான மாக விளங்கவேண்டும். தேசத்துக்கு நான் அளித்த பெருஞ் செல்வமாக அது இருக்கட்டும். அறிவில் லாதவர்கள் தெய்வங்களை உபாசிப்பார்கள். ஸந்தீபோ தெய்வங்களையே சிருஷ்டி செய்பவன் ஆகட்டும்!

ஆனால் இவையெல்லாம் வெறும் கனவுகள். இப் போது உடனே தேவையானதைப்பற்றி அல்லவா யோசிக்க வேண்டும்? குறைந்தது மூவாயிரமாவது வேண்டும். ஐயாயிரம் கிடைத்தால் சௌகரியமாக

இருக்கும். ஆனால் வாணியளாவிப் பேசிய பிறகு பணத்தைப்பற்றி எப்படிக் கூறுவது? காலதாமதமாக்குவதிலும் பயன் இல்லை.

"ராணி, டையில் பணம் இருந்தால் அல்லவா காரியம் நடக்கும்?'' என்றேன்.

* * *

விமலாவின் முகம் சுண்டிற்று. அவள் அந்த அசாத்தியமான தொகையாகிய ஐம்பதினாயிரத்தையே நினைத்துக் கொண்டிருந்தாள் என்று தெரிந்தது. அவளை இராப் பகலாகத் தூக்கமில்லாமல் அது அடித்திருக்கவேண்டும். அவள் வேறு எவ்விதமாகத் தன் பூஜையைச் செலுத்துவாள்? தன் உள்ளத்தையே என் காலடியில் வைப்பதும் சாத்தியம் அல்ல. அதற்குப் பதிலாகக் கிடைத்தற்கரிய இந்தப் பெரும் தொகையைக்கொண்டு தன்னுள் அடைந்து கிடக்கும் உணர்ச்சிகளை அவள் வெளியிட விரும்புகிறாள். அவள் படும் சிரமத்தையெல்லாம் நினைக்கும்போது எனக்கு வருத்தமாகத்தான் இருக்கிறது. அவள் இப்போது முற்றும் என் வசம் ஆகிவிட்டாள். செடியை வேரோடு பெயர்த்தெடுக்கும் கஷ்டம் நீங்கிவிட்டது. அதை இனிமேல் ஜாக்கிரதையாகப் பாதுகாக்க வேண்டியதுதான் பாக்கி.

"ராணி, அந்த ஐம்பதினாயிரம் இப்போது தேவை இல்லை. தற்சமயம் ஐயாயிரமோ மூவாயிரமோ கிடைத்தாலும் போதுமானது'' என்றேன்.

அவள் உள்ளம் கவலை நீங்கித் துள்ளிக் குதித்தது. "ஐயாயிரம் ரூபாய் ஒரு நொடியில் கொண்டு வருவேன்'' என்றாள் உற்சாகம் ததும்பும் குரலில். காதலர்களுடைய பாட்டுக்களில் ராதை பாடும் பாட்டு ஒன்று உண்டு.

"காதலன் இன்புறக் கோள்வனேன் கூந்தலில்
போதோன்று மூவுல கத்திலும் இல்லது.''

விமலாவின், 'ஐயாயிரம் கொண்டு வருவேன்' என்ற வாக்கியமும் அந்தப் பாட்டைப் போலவே ஒலித்தது.

சிறு மூங்கிற் குழாயினின்றும் இன்னிசை கிளம்பு கிறது. என் பேராசை அந்த மூங்கிற் குழாயை நசுக்கிவிடாமல் பார்த்துக்கொள்ள வேண்டும். இல்லா விட்டால் இன்னிசை நின்று, "ஏன், எதற்கு, இவ்வளவு எனக்கு எப்படிக் கிடைக்கும்?" என்ற கேள்விகள் எல் லாம் எழுந்து ராதையின் பாட்டுக்கு மாருக ஒலிக்கும். நான் கூறியதுபோல் மாயைதான் நிஜம், அதுதான் குழல். உண்மை அதற்குள் இருக்கும் சூன்ய வெளிதான். நிகிலுக்குக் கொஞ்ச காலமாக அந்தச் சூனிய வெளியின் அநுபவம் கிட்டியிருக்கிறது. அது அவன் முகத்தில் நன் ருகத் தெரிகிறது. அதைக் காண எனக்கு வருத்தம் உண்டாகிறது. தான் உண்மையையே தேடுவதாக நிகில் பெருமை அடித்துக்கொண்டான். நானே, 'மாயையை விடாமல் பற்றிக்கொள்வேன்' என்று சொன்னேன். அவரவர்களுக்கு ஏற்ற பலன் கிடைத்தது. இதில் தாபம் ஏன்?

விமலாவின் உள்ளத்தையும் லக்ஷ்ய உலகிலேயே விட்டுவைப்பதன் பொருட்டு நான் அந்த ஐயாயிரத்தைப் பற்றி மேலே ஒன்றும் வளர்த்தாமல் விட்டுவிட்டேன். காளி மாதாவின் பூஜையைப்பற்றி மட்டும் கூறினேன். அதை எங்கே எப்போது செய்வது? நிகிலின் ஜமீனில் வருஷந்தோறும் ருயிமாரி என்ற இடத்தில் ஒரு விழா நடக்கும். அதற்கு ஆயிரக் கணக்கான ஜனங்கள் வந்து கூடுவார்கள். காளி மாதாவின் பூஜையை நடத்துவ தற்கு அதுதான் சிறந்த இடம்.

விமலாவுக்கு உத்ஸாகம் அதிகரித்தது. விதேசித் துணிகளை எரிப்பதோ ஜனங்களுடைய தானியக் களஞ்சி யங்களில் தீ வைப்பதோ போன்ற காரியங்கள் அல்ல ஆதலால் நிகிலுக்கும் இதில் ஒன்றும் ஆக்ஷேபம் இராது என்று அவள் கருதலானுள். நான் உள்ளுக்குள் புன்னகை புரிந்துகொண்டேன். ஒன்பது வருஷங்கள் இரவு பகல் இடைவிடாமல் ஒன்ருகப் பழகியிருந்தும் இவ்விருவரும் ஒருவரை ஒருவர் அறியவில்லையே! வீட்டுச் சமாசாரம் என்ருல் ஏதோ கொஞ்சம் தெரிந்திருக்கலாம். ஆனுல் வெளி விவகாரங்களைப்பற்றி அவர்கள் அடியோடு

ஒன்றும் அறியாமல் கண்ணைக் கட்டிக் காட்டில் விட்டவர்கள்போல் இருந்தனர். 'வீடு போலத்தான் வெளியுலகும்' என்று அவர்கள் நம்பியிருந்தார்கள். 'இவ்வளவு நாள் அதை அடியோடு கவனிக்காமல் இருந்துவிட்டோமே!' என்று அவர்கள் இப்போதுதான் அறிந்துகொண் டிருக்கிறார்கள்.

ஆயினும் அதனால் என்ன? தவறு செய்தவர்கள் அடிபட்ட பிறகுதான் தெரிந்துகொள்வர். அதைப்பற்றி நான் ஏன் துக்கப்பட வேண்டும்? விமலாவை வானத்தில் மிக உயரமான இடத்தில் பறக்கும்படி செய்துகொண் டிருப்பதுதான் எனக்குத் தற்சமயம் சிரமமாக இருக்கிறது. இனி ஆகவேண்டிய காரியத்தைப் பார்க்க வேண்டும்.

விமலா போவதற்கு எழுந்து கதவண்டை சென்றதும் நான் வெகு சாதாரணமாக, "அப்புறம் பணம்..." என்று ஆரம்பித்தேன்.

விமலா திரும்பிப் பார்த்தாள். "மாதம் முடிந்து என் கையில் பணம் செலவுக்குக் கிடைத்ததும்..."

"அப்படியானால் வெகு நாள் ஆகுமே!" என்றேன்.

"ஆனால் உங்களுக்கு எப்போது வேண்டும்?"

"நாளைக்கே வேண்டும்."

"சரி, நாளைக்கே கொடுக்கிறேன்" என்றாள் விமலா.

# நிகிலேசன்

உள்ளூர்த் தினசரிகளில் என்னைப்பற்றிக் கட்டுரைகளும் படங்களும் வெளியாகத் தொடங்கின. இனி ஹாஸ்யச் சித்திரங்களும் வெளியாகப்போகின்றன என்று சொல்லுகிறார்கள். கண்ட பொய்களையெல்லாம் கற்பித்து ஊர் முழுவதும் விதைத்துவிட்டனர். சேற்றை வாரி இறைப்பதில் அவர்களுக்கே தனி உரிமை இருக்கிறது. குற்றமற்றவர் எதிர்ப்பட்டால் அந்தச் சேற்றைப் பூசிக்கொள்ளாமல் செல்ல முடியுமா?

என் குடிகள் அனைவரும், தோட்டியிலிருந்து தொண்டைமான் வரையில் சுதேசி இயக்கத்தை ஆதரிக்கிறார்கள் என்றும், என்னிடமுள்ள பயத்தினால்தான் அவர்கள் அதை வெளியிட்டுக்கொள்ளவில்லை என்றும் எழுதினார்கள். எனக்கு அஞ்சாமல் கிளம்பியவர்கள் என் தண்டனைக்கு உள்ளானார்கள் என்றும், நான் போலீசுக்கு ரகசியமாகச் செய்திகள் அறிவித்துக்கொண் டிருப்பதாகவும் இம்மாதிரியெல்லாம் சர்க்காருக்கு உதவி செய்வதனால் புதிய பட்டம் பெறப்போவதாகவும் வேறு வெளியாகி இருந்தது.

ஹரீசகுண்டர், சக்கரவர்த்தி இவ்விரு ஜமீன்தார்களையும் தேசபக்தி பூண்ட உத்தம புத்திரர்கள் என்று ஒரே அடியாக அந்தப் பத்திரிகைகள் புகழ்ந்தன. இவர்களைப்போல் உண்மையான தேச பக்தர்கள் இன்னும் சிலர் நாட்டில் இருந்தால் மான்செஸ்டர் துணியில்களையெல்லாம் மூடவேண்டிய நிலைமை ஏற்பட்டுவிடும் என்றும் எழுதினார்கள்.

அதன் பிறகு ஒரு கடிதம், ரத்தம்போன்ற சிவப்பு மையில் எழுதியது எனக்குக் கிடைத்தது. இந்தப் புனிதமான இயக்கத்தை ஆதரிக்காததனால் இன்ன இன்ன ஜமீன்தார்களின் கஜானாக்கள் கொளுத்தப்பட்டன என்று அதில் குறித்திருந்தது. நாட்டைப் பரிசுத்தமாக்குவதற்கென்றே

அக்கினி பகவான் கிளம்பியிருப்பதாகவும் நாட்டின் உண்மை மக்கள் அல்லாதவர்களின் தொந்தரவை நீக்கும் பொருட்டுத் தெய்வங்களே முனைந்திருப்பதாகவும் கூறிக் கையெழுத்தில்லாமல் அந்தக் கடிதம் அனுப்பப்பட்டிருந் தது. இது ஊர் இளைஞர்களுடைய காரியம் என்று நன்கு தெரிந்தது. அவர்களுள் சிலரைக் கூப்பிட்டு அந்தக் கடிதத் தைக் காட்டினேன். எதற்கும் துணிந்தவர்களான தேச பக்தர் கூட்டம் ஒன்று சேர்ந்திருக்கிறது; அவர்கள் இவ் வியக்கத்துக்குத் தடையாக இருப்பது எதுவானாலும் அதை ஒழித்துவிடுவதென்று கங்கணம் கட்டிக்கொண் டிருக் கிறார்கள் என்று தான் கேள்விப்பட்டதாக அந்த பி. ஏ. வகுப்பு மாணவன் கூறினான்.

"இந்தத் துஷ்டர்கள் கையில் யாராவது ஒருவர் அகப்பட்டுக்கொண்டால்கூட நாட்டுக்குத் தோல்வி தான்" என்றேன்.

"நீங்கள் என்ன சொல்லுகிறீர்கள் என்பது புரிய வில்லையே?" என்றான் சரித்திர வகுப்பு மாணவன்.

"தெய்வ பயத்திலிருந்து போலீஸ் பயம் வரையிலும் ஜனங்களைப் பற்றிக்கொண் டிருக்கிறது. தேசத்தை ஒழிப்பதற்கு இந்தப் பீதி ஒன்றே போதும். அப்படியிருக்க இப்போது சுதந்தரத்துக்காக என்று நீங்கள் இன்னும் வேறு ஏதாவது பீதியை உண்டாக்கி ஜனங்களைச் சிரமப் படுத்தி அவர்களுடைய கோழைத்தனத்தின்மேல் நீங்கள் உங்கள் ஜயக்கொடியை நாட்டுவதாக இருந்தால் உண்மை யான தேசபக்தன் எவனும் அதற்கு உட்படமாட் டான்" என்றேன்.

"பயத்தினால் அன்றி வேறுவிதமாக ராஜாங்கத்துக்கு உட்படும் தேசம் எங்கேயாவது உண்டா?" என்றான் சரித்திர வகுப்பு மாணவன்.

"இந்தப் பயத்தின் அரசாட்சியைக் கொண்டே எந்த நாட்டின் சுதந்தரத்தையும் நாம் நிர்ணயித்து விடலாம். திருட்டு, கொலை இவைகளைப்பற்றி மட்டும் கடுமையாக இருக்கும் அரசாங்கத்தில்தான் மனிதனுக்கு மனிதன் துன்பம் இல்லாமல் சுதந்தரம் உள்ளவனாக இருப்

பான். ஆனால் மனிதன் இந்த ஆடைதான் அணிய வேண்டும், இன்ன வியாபாரந்தான் செய்யவேண்டும், இதைத்தான் சாப்பிடவேண்டும்' என்றெல்லாம் பய முறுத்திக் கட்டாயப்படுத்துவதாக இருந்தால் மனித னின் சுதந்தரம் பயனில்லாமல் போவதோடு அவன் ஆண் மையும் அடியோடு அழிந்துபோகும்.''

''மற்றத் தேசங்களில் எல்லாம் மக்களைக் கட்டாயப் படுத்துவது இல்லையா?''

''இருக்கலாம். அதை ஒருவரும் மறுக்கவில்லை. ஆனால் அத்தகைய ஒவ்வொரு தேசத்திலும் ஆண்மை குறைந்து அடிமைத்தனந்தானே விருத்தியாகி இருக்கி றது?''

''இதிலிருந்து பிறரை அடிமையாக்குவது மனிதன் இயல்பு என்று தெரிகிறதல்லவா?'' என்ருன் ஒரு பி.ஏ. வகுப்பு மாணவன்.

''ஸந்தீப் பாபுதாம் யாவற்றையும் நன்ருக எடுத்துச் சொல்லியிருக்கிருரே! பக்கத்து ஜமீன்தார் ஹரீசகுண் டரைத்தான் அவர் உதாரணமாக எடுத்துக்கொண் டார். அவருடைய ஜமீனில் ஒரு பிடி விதேசி உப்புக் கூடக் கிடைக்காது. ஏன்? அவர் அவ்வளவு கண்டிப்பாக இருப்பதனுல்தான். இயற்கையில் அடிமைகளாக இருப் பவர்கள் விஷயத்தில் எஜமானனும் கண்டிப்பு இல்லாதவ ஞக இருந்தால் ஏற்படும் விபரீதத்தைக் கேட்கவே வேண் டாம்.''

''அந்தச் சக்கரவர்த்தி என்னும் ஜமீன்தார் இருக்கி ருரே, அவர் குடிகளில் ஒருவன் கொஞ்சம் கூச்சலிட் டான். அவனை இருந்த இடம் தெரியாமல் போகும்படி எவ்வளவு பாடு படுத்திவிட்டார்கள் என்பது உங்களுக் குத் தெரிந்திருக்குமே! சாப்பாட்டுக்கு ஒன்றும் இல்லாமற் போகவே அவன் தன் மனைவியின் வெள்ளி நகைகளை விற்க ஆரம்பித்தான். ஆனால் ஒருவரும் அவைகளை வாங்கத் துணியவில்லை. பிறகு சக்கரவர்த்தியின் மானேஜர் ஐந்து ரூபாய் கொடுத்து வாங்கிக் கொள்வதாகச் சொல்லவே அவை முப்பது ரூபாய்கள் பெறுமாயினும் வேறு வழி

இல்லாமல் ஒப்புக்கொண்டான். நகைகளை வாங்கிக் கொண்ட பிறகு மானேஜர் அந்த ஐந்து ரூபாய்களை அவன் கொடுக்க வேண்டிய வாடகைக்காக எடுத்துக் கொண்டதாக மிகச் சாவதானமாகச் சொல்லிவிட்டார். அவ்வாறு செய்த பிறகு எங்களுக்கு அந்த ஜமீன்தாரிடமும் அவர் மானேஜரிடமும் வெகு கோபம் பிறந்தது. ஆனால், 'இப்படி ஆண்மையுள்ள மனிதர்களை நாம் தள்ளிவிட்டால் பிறகு சுடுகாட்டில் இருக்கும் இறந்த மனிதர்களைக் கொண்டுதான் காரியம் நடத்தும்படி ஆகும்' என்று ஸந்தீப் பாபு சொன்னார். 'இவர்கள்தாம் தாங்கள் விரும்பியதை எப்படி அடைவது என்று அறிந்திருக்கிறார்கள்; இவர்கள்தாம் ஆளப் பிறந்தவர்கள்' என்று ஸந்தீப் பாபு கூறுகிறார். சொந்தமாக இச்சை ஒன்றும் இல்லாதவர்கள் மேற்கூறிய மனிதர்களின் இச்சைப்படியே தாம் இருப்பதோ இறப்பதோ என்னும்படி ஆய்விடுமாம். ஹரீசகுண்டரையும் சக்கரவர்த்தியையும் உங்களுடன் ஒப்பிட்டு, எவ்வளவுதான் நல்ல எண்ணங்கள் இருந்த போதிலும் உங்களால் சுதேசி இயக்கத்தை நாட்டில் நிலை நாட்ட முடியாது என்று ஸந்தீப் பாபு சொல்லுகிறார்."

"சுதேசி இயக்கத்தைக் காட்டிலும் உயர்வான ஒன்றை நாட்டில் நிலைநிறுத்தவேண்டும் என்பதுதான் என் விருப்பம். நான் நாடுவது உலர்ந்த கட்டை அல்ல; நல்ல பச்சை மரங்கள். அவை வளருவதற்கு நாள் பிடிக்கும்" என்றேன்.

"அப்படியானால் உங்களுக்குக் கட்டையும் கிடைக்காது; பச்சை மரமும் கிடைக்காது" என்றான் சரித்திர வகுப்பு மாணவன், ஏளனமான குரலில். 'நமக்கு வேண்டுமானால், பிடுங்கிக்கொண்டால்தான் கிடைக்கும்' என்று ஸந்தீப் பாபு சரியாகச் சொல்லுகிறார். இது நாம் படித்ததற்கெல்லாம் விரோதமாக இருப்பதால் இவ்வுண்மையை அறிந்துகொள்ள நமக்குக் கொஞ்சம் நாள் பிடிக்கும். ஹரீசகுண்டரின் குடிகளில் ஒருவன் வாடகை கொடுப்பதற்கு அடியோடு முடியாமற் போனவுடன் தன் இள மனைவியை விற்றுவது கொடுக்கும்படி ஆயிற்று. அதை நான் என் கண்களாலேயே

பார்த்தேன். வாங்கிக்கொள்வதற்கு மனிதர்கள் இருந்தார்கள்; ஜமீன்தார் கணக்கும் தீர்ந்தது. அந்த மனிதன் பட்ட துன்பத்தைக் கண்டபோது எனக்கு அநேக நாள் தூக்கம் இல்லாமல் போய்விட்டது. ஆனால். என் மனம் எவ்வளவு கஷ்டப்பட்டாலும் கடன் வாங்கியவனுடைய மனைவியை விற்றுவது தனக்குச் சேரவேண்டிய பணத்தைப் பெற்றுக்கொள்பவனே என்னைவிட மேலானவன் என்பதை உணர்ந்தேன். அவ்வாறு என்னால் ஒருபோதும் செய்ய முடியாது. நான் ஒப்புக்கொள்கிறேன். எனக்கு அவ்வளவு மனோபலம் இல்லை. என் கண்களில் நீர் ததும்பி விடுகிறது. நம் தேசத்தை யாராவது காப்பாற்ற முடியும் என்றால் அவர்கள் இந்த ஹரிசகுண்டர், சக்கரவர்த்தி இவர்களைப் போன்றவர்கள் தாம்.''

அவன் கூறியதைக் கேட்டு நான் திகைத்துவிட்டேன். ''நீ கூறுவதெல்லாம் உண்மையாக இருந்தால், எப்பாடு பட்டாவது இந்தச் சக்கரவர்த்தி, ஹரிசகுண்டர் இவர்களிடமிருந்து தேசத்தைக் காப்பாற்ற வேண்டியது என் முதல் கடமை என்று தெரிகிறது. நம்மிடம் நன்றாகப் பற்றிக்கொண்டிருக்கும் அடிமை உணர்ச்சியானது இச்சமயம் பெரும் கொடுங்கோன்மையாகக் கிளம்பியிருக்கிறது. பிறர் அதிகாரத்துக்குப் பயந்து கீழ்ப்படிவதே வழக்கமாக உள்ள நீங்கள் அப்படியே மற்றவர்களையும் உங்களுக்குக் கீழ்ப்படியும்படி செய்வதை ஒரு மதமாகக் கொண்டுவிட்டீர்கள். இந்த அநியாயத்தை எப்படியாவது ஒழித்துவிட்டுத்தான் நான் மறுவேலை பார்க்க வேண்டும்.''

சாதாரண ஜனங்களுக்கு வெகு சுலபமாக விளங்கும் இவ்விஷயங்கள் பி.ஏ., எம்.ஏ. பாஸ் செய்தவர்களின் மூளையில் வெகு கோணலாக மாறிவிடுகின்றனவே! அவர்கள் படித்ததெல்லாம் உண்மையைச் சின்னபின்னமாக்குவதாக அல்லவா முடிகின்றன!

பஞ்சுவின் போலி மாமியை என்ன செய்கிறது என்று தெரியவில்லை. அவள் கூறுவது பொய் என்று ஸ்தாபிப்பது கஷ்டம். வாஸ்தவமாக நடந்த விஷயத்தை நிரூபிப்பதற்கு மனிதர்கள் இல்லாமல் போனாலும், நடக்

காத விஷயத்தை நடந்ததாகச் சாதிப்பதற்கு வேண்டிய பேர் இருப்பார்கள். பஞ்சுவை என் குடிகளில் ஒருவ னுக்கக் கூடாது என்பதற்காகத்தான் அவள் வந்து சேர்ந் திருக்கிருள் என்பது நிச்சயம். வேறு வழி ஒன்றும் புலப் படாமையால் என்னுடைய நிலத்தில் கொஞ்சம் இடம் அளித்து அதில் ஒரு சிறு வீடும் கட்டிக்கொடுத்துவிட லாம் என்று நினைத்தேன். ஆனல் என் குருதேவர் அதற்கு இசையவில்லை. "இம்மாதிரி அக்கிரமங்களுக்கெல்லாம் நாம் மசிந்து போய்விடக்கூடாது" என்று கூறித் தாமே அவ் விஷயத்தைக் கவனிப்பதாகச் சொன்னர்.

"நீங்களா?" என்றேன் மிகுந்த ஆச்சரியத்துடன்.

"ஆம். நான்தான்" என்ருர்.

சட்ட சம்பந்தமான அக்கிரம விவகாரங்களில் அவ ரால் என்ன செய்ய முடியும் என்பது எனக்கு அடியோடு விளங்கவில்லை. அன்று சாயந்தரம் வழக்கமாக என்னிடம் வரும் வேளையில் அவரைக் காணவில்லை. விசாரித்ததில் அவர் பெட்டி படுக்கையுடன் எங்கேயோ போய் வருவ தாகச் சொல்லிச் சென்றிருக்கிருர் என்று தெரிந்தது. பஞ் சுவின் மாமா இருந்த கிராமத்தில் சாட்சி விசாரிக்க ஒரு வேளை சென்றிருப்பாரோ என்று நினைத்தேன். அவர் அந் தக் காரியமாகப் போயிருந்தால் அது வீண்தான் என்பது எனக்குத் தெரியும்.

பகல் முழுவதும் வேலையில் முழுகி இருந்துவிட்டேன். ஆவணி மாதத்தில் மாலை நேரத்தில் ஆகாயம் நிர்மலமாக இருப்பதில்லை. அதுபோலத்தான் என் உள்ளமும் ஆகி விடுகிறது. சிலர் மனம் என்றும் சிறைக்குள்ளேயே இருக் கிறது. அவர்களுக்கு வெளி உலகைப்பற்றிய கவலையே இல்லை. ஆனல் என் மனமோ திறந்த வெளியில் சோலை யின் நடுவில் வாசம் செய்வதுபோல் இருக்கிறது. வீசும் இளங் காற்றை உண்டு ஒளியிலும் நிழலிலும் உள்ள இன் னிசையை எல்லாம் மனப்பூர்வமாக உணர்ந்து அநுபவிப்ப தாக இருக்கிறது.

பிரகாசமான பகல் வேளையில் எவ்வளவோ அலுவல் கள் இருக்கும்போது, 'இனி வாழ்க்கைக்கு ஒன்றும்

தேவையில்லை' என்றே எனக்குத் தோன்றும். ஆனால் ஆகாயம் மங்கி இருள் மூடியதும், 'பரம்பொருளோடு ஒன்றாகக் கலக்கும் நேரம் வந்துவிட்டது என்பதைத் தெரிவிப்பதற்காகவே அந்தி மயங்கி உலகெங்கும் இருள் மூடுகிறது' என்று எண்ணிக்கொள்வேன். இந்த முடிவைத் தான் ஆகாயம், பூமி, கடல் எல்லாம் நாடுகின்றன. அது தெளிவாகத் தெரியும்போது நான் அதை எப்படி உணராமல் இருக்கமுடியும்? காதலியின் கருவிழிகளின் பிரகாசம்போல் உலகின்மீது இருள் பரவும்போது வேலை மட்டுமே வாழ்க்கையின் தத்துவம் ஆகிவிடாது. வேலைதான் மனிதனைக் கரையேற்றக் கூடியது என்பதல்ல. மனிதன் தயாபரனான ஈசுவரனுக்கே அன்றி மற்ற எவருக்கும் அடிமை அல்ல என்றெல்லாம் என் உள்ளத்தில் தோன்றும்.

ஆகா! நிகில்! பகற் காரியங்கள் முடிந்த பிறகு இருள் சூழ்ந்த இரவுடன் ஒன்றாகக் கலப்பதன்பொருட்டு மேற்கொள்ளும் தன்மை ஒன்று உனக்கு உண்டே! அது உன்னை விட்டு அடியோடு பிரிந்து போய்விட்டதா? கணக்கில்லாத ஜீவராசிகளின் மத்தியில் தனக்கு வேண்டியவர் ஒருவரும் இல்லாமல் தவிப்பவனின் தனிமை தான் எவ்வளவு பயங்கரமானது! அன்று ஒரு நாள்; சந்தியா காலம். எனக்கு ஒன்றும் வேலை இல்லை. வேலை ஏதேனும் செய்யவும் அப்போது எனக்கு மனதில்லை. என் குருதேவரும் எங்கோ போயிருந்தார். சூனியமாக இருந்த என் உள்ளத்துக்கு ஏதாயினும் விநோதம் உண்டாக்கக் கருதி தோட்டப் பக்கம் சென்றேன். எனக்குச் செவ்வந்திப் புஷ்பம் என்றால் மிகவும் பிடிக்கும். அதில் எவ்வளவு விதமான வர்ணங்கள் உண்டோ அவ்வளவு செடிகளையும் தொட்டிகளில் வைத்துப் பயிராக்கி வரிசையாக வைத்திருந்தேன். அவை புஷ்பிக்கும்போது பார்த்தால் அந்த வர்ணங்கள் கண்ணைப் பறித்துக் கொண்டு போகும். நான் தோட்டத்தில் செவ்வந்திச் செடிகள் இருந்த இடத்துக்குப் போய்க் கொஞ்சம் நாளாகிவிட்டது. மறுபடியும் அவைகளைப் பார்ப்பதில் எனக்கு உத்சாகம் உண்டாயிற்று.

நான் தோட்டத்தில் இறங்கியபோது தோட்ட மதிலுக்கு மேல் ஆகாயத்தில் சந்திரன் தெரிந்தது. இருட்டாக இருந்த இடத்தில் சந்திர கிரணங்கள் இரண்டொன்று விழுந்தன. அதைப் பார்த்தபோது அவை சத்தம் செய்யாமல் புன்சிரிப்போடு பின்புறமாக வந்து இருளின் கண்களை மூடுவதுபோல் தோன்றின. செவ்வந்திச் செடிகள் இருந்த இடத்தை அணுகியதும் என் எதிரில் புற்றரையில் ஓர் உருவம் படுத்திருப்பதைக் கண்டேன். என் உள்ளம் திடுக்கிட்டது. என் காலடிச் சத்தம் கேட்டவுடன் அவ்வுருவம் திடுக்கிட்டு எழுந்து உட்கார்ந்தது.

இப்போது என்ன செய்வது? பேசாமல் திரும்பிப் போய்விடலாமா என்று எண்ணினேன். விமலாவும் அங்கிருந்து எப்படிப் போவது என்றுதான் யோசித்துக் கொண்டிருப்பாள். அங்கே நிற்பதற்குச் சங்கோசம் என்றால் அவ்விடத்தை விட்டுச் செல்வதற்கும் சங்கோசந் தானே! என்ன செய்வது என்று நான் தீர்மானிப்பதற்குள் விமலா எழுந்து புடைவைத் தலைப்பால் தலையை மூடிக் கொண்டு வீட்டின் பக்கம் செல்லத் தொடங்கினாள். விமலா எவ்வளவு துன்பம் அநுபவித்துக்கொண் டிருந் தாள் என்று நான் இதிலிருந்து தெரிந்துகொண்டேன். என் மனவருத்தம் எல்லாம் ஒரே நொடியில் மறைந்து விட்டது. ''விமலா'' என்று கூப்பிட்டேன்.

அவள் திடுக்கிட்டுப் போகாமல் நின்றாள். ஆனால் திரும்பி வரவில்லை. நான் மெதுவாக அவள் எதிரில் போய் நின்றேன். அவள் முகம் இருட்டில் நன்றாகத் தெரியவில்லை. நான் நின்ற இடத்திலோ நல்ல நிலவொளி வீசிற்று. விமலாவின் கண்கள் என்னை நோக்கின.

''விமலா! இந்தக் கூட்டில் நான் ஏன் உன்னை அடைத்து வைக்க நினைக்கவேண்டும்? அதில் அகப்பட்டு நீ படும் கஷ்டம் எனக்குத் தெரியும்'' என்றேன்.

அவள் நிமிர்ந்து பாராமலும் ஒரு வார்த்தையும் பேசாமலும் மௌனமாக நின்றாள்.

"உன்னை இவ்வாறு கட்டிப் போடுவதாக இருந்தால் என் வாழ்க்கையும் கேவலம் ஓர் 'இருப்புச் சங்கிலிபோல் ஆய்விடும் என்று அறிவேன். அதில் எனக்கு என்ன ஆனந்தம்?"

விமலா இப்போதும் ஒன்றும் பேசவில்லை.

"விமலா! நான் உண்மையைச் சொல்லுகிறேன். நீ சுதந்தரம் உள்ளவள். என்னைப்பற்றி உனக்கு எப்படித் தோன்றினாலும் உன் காலுக்குத் தளையாக மட்டும் நான் இருக்கமாட்டேன்" என்று கூறிவிட்டு வீட்டின் முன்தாழ்வாரத்தை நோக்கி நடந்தேன்.

நான் அவ்வாறு கூறியதற்குக் காரணம் திடீரென்று தோன்றிய பெருந்தன்மையான உணர்ச்சி என்று சொல்ல முடியாது; அசட்டை என்றும் சொல்வதற்கு இல்லை. பிறரைச் சுதந்தரமாக்கினால் அன்றி நான் சுதந்தரன் ஆக முடியாது என்ற உண்மையை நான் அறிந்துகொண்டேன்; அவ்வளவுதான். விமலாவை என் கழுத்தில் அணிந்த ஒரு மலர் மாலையாகவே எண்ணினாலும் அது மிகவும் பளுவாகத்தான் தோன்றும்போல் இருந்தது. 'எனக்குச் சந்தோஷம் இல்லாமற் போனால் போகட்டும்; துக்கமே எனக்கு ஏற்பட்டாலும் ஏற்படட்டும். ஆனால் எனக்குப் பந்தம் மட்டும் வேண்டாம்' என்று நான் எப்போதும் தெய்வத்தைப் பிரார்த்திக்கவில்லையா? அசத்தியத்தைச் சத்தியமாக நினைத்துப் பற்றிக்கொள்வது தன் கழுத்தையே திருகிக்கொள்வதுபோல் ஆகும். அத்தகைய கஷ்டம் எனக்கு நேராமல் இருக்கவேண்டும்.

நான் என் அறைக்குள் சென்றபோது குருதேவர் எனக்காகக் காத்துக்கொண்டிருப்பதைக் கண்டேன். என் உள்ளத்தில் இன்னும் உணர்ச்சிகள் குமுறிக்கொண்டிருந்தன. நான் வேகமாக அவரிடம் சென்று, "மனிதனுக்குச் சுதந்தரம் அல்லவா யாவற்றையும் விடப் பெரிது? அதற்கு வேறு எதையாவது சமமாக்க முடியுமா? சொல்லுங்கள்" என்று ஆரம்பித்தேன்.

என்னுடைய படபடப்பைப் பார்த்து ஆச்சரியமுற்று அவர் மௌனமாக என்னை நோக்கினார். நான்,

"புஸ்தகங்களிலிருந்து ஒன்றும் தெரியவில்லை. நம்முடைய ஆசைகள் நம்மையும் பிறரையும் கட்டுப்படுத்தும் பந்தங்கள் என்று சாஸ்திரங்களில் படிக்கிறோம். ஆனால் அந்த வெறும் வார்த்தைகளில் என்ன இருக்கிறது? கூட்டில் இருக்கும் பறவையை வெளியே விடுக்கும் நிலைமைக்கு வரும்போதுதான், அந்தப் பறவை நம்மை எவ்வளவு சுதந்தரமாக்கியதென்று அறிகிறோம். எதை நாம் கூட்டில் அடைத்தாலும் அதுவே ஆசாபாசமாகி இருப்புச் சங்கிலியைக் காட்டிலும் கடினமான பந்தமாகிவிடுகிறது. இந்த விஷயத்தைத்தான் உலகம் இன்னும் அறிந்துகொள்ளவில்லை. எல்லோரும் தம்மை விட்டு வேறு எதையோ சீர்திருத்த முயலுகிறார்கள். ஆனால் எவற்றைச் சீர்திருத்த வேண்டும்? தம்முடைய ஆசைகளை அல்லவா?" என்றேன்.

"நாம் விரும்பியது கிடைக்கும்போது நமக்கு நாமே யஜமானர்கள் என்று நினைத்துக்கொள்கிறோம். ஆனால் நம் உள்ளத்தினின்று ஆசைகளை அகற்றும்போதுதான் நாம் உண்மையாக நம் யஜமானர்கள் ஆவோம்" என்றார் குருதேவர்.

"இவைகளையெல்லாம் வார்த்தைகளாகச் சொல்லும்போது ஒன்றும் அர்த்தமில்லாதனவாகத் தோன்றுகின்றன. ஆனால் அவற்றைக் கொஞ்சமாவது நாம் உணர்ந்தவுடன்தான் அவை தேவர்கள் உண்ணும் அமுதம்போல் ஆகின்றன! சௌந்தரியத்தைப் பற்றிக்கொள்ளாமல் விடும்போது அல்லவா அது நம் கண்களில் படும்? உலகத்தை வென்றவர் யார்? புத்தர் பிரானேயன்றி அலெக்ஸாண்டர் அல்லவே? அதைச் சாதாரண வசன நடையில் கூறினால் அதன் உண்மை வெளியாகாது. ஆகா! அதை என்று பாட்டாகப் பாடப் போகிறோம்? இந்த உலகத் தத்துவங்கள் என்றுதான் அச்சடித்த புத்தகங்களை மீறிக் கங்கோத்திரியிலிருந்து பெருகும் புனிதமான கங்கா நதியைப்போல் உலகில் பெருகப் போகின்றனவோ!"

இவ்வாறு கூறிக்கொண்டிருந்தபோதே சில தினங்களாகக் குருதேவர் எங்கேயோ போயிருந்தது என் ஞாப

கத்துக்கு வந்தது. சற்று வெட்கத்துடன், "எங்கே, உங்களை சில தினங்களாகக் காணோம்?" என்று வினவினேன்.

"பஞ்சுவுடன் இருந்தேன்" என்றார் குருதேவர்.

"பஞ்சுவுடனா? இவ்வளவு நாள் அங்கேயா இருந்தீர்கள்?"

குருதேவர் கூறலானார்: "மாமி என்று சொல்லிக் கொள்பவளைக் கொஞ்சம் விசாரித்துப் பார்க்கவேண்டும் என்று நினைத்தேன். 'இப்படிப்பட்ட ஒருவருடைய விருந்தாளியாக வந்து இருக்கவேண்டும்' என்று நான் கூறியதை அவளால் முதலில் நம்ப முடியவில்லை. நான் உண்மையாகவே அவ்வாறு விரும்புகிறேன் என்று தெரிந்ததும் அவள் தன்னைப்பற்றியே கொஞ்சம் வெட்கம் அடைந்தாள். 'அம்மா! நீங்கள் வைதால்கூட நான் உங்களை விட்டுப் போகமாட்டேன். நான் இருக்கும் வரையிலும் பஞ்சுவும் கூட இருப்பான். அவனுடைய தாயில்லாக் குழந்தைகள் திக்கற்றுத் தெருவில் நிற்பதைக் காண நான் சகிக்க மாட்டேன் என்று தெரிந்துகொண் டிருப்பீர்களே!' என்றேன். நான் இப்படிப் பேசுவதை இரண்டு நாட்கள்வரைக்கும் ஒன்றும் சொல்லாமல் அவள் கேட்டுக்கொண் டிருந்தாள். இன்று காலை அவள் மூட்டை கட்டிக்கொண் டிருப்பதைப் பார்த்தேன். 'நான் திரும்பிப் பிருந்தாவனத்துக்குப் போய்விடுகிறேன். வழிச் செலவுக்குக் கொடுத்து விடுங்கள்' என்றாள். அவள் பிருந்தாவனத்துக்கு ஒன்றும் போகப் போவதில்லை என்பது எனக்குத் தெரியும். அத்துடன் அவள் பிரயாணத்தின் செலவும் சொற்பமாக இராது என்பதையும் நான் அறிவேன். அதற்காகத்தான் நான் இப்போது உன்னிடம் வந்தேன்."

"கொடுத்துவிட்டால் போகிறது."

"அந்த அம்மாள் அவ்வளவு கெட்ட மனுஷி அல்ல. அவள் என்ன ஜாதி என்பதிலேயே பஞ்சுவுக்குச் சந்தேகம். தன்னுடைய தீர்த்த பாத்திரம் முதலியவைகளை அவள் தொடலாகாது என்று சொல்லிவிட்டான். ஆகவே அவர்களுக்குள் எப்போதும் சண்டையாகவே இருந்தது. அவள் தொடுவதைப்பற்றி எனக்கு ஒன்றும் ஆக்ஷேபம்

இல்லை என்று கண்டதும் அவள் என்னிடம் மிக்க சிரத்தை கொண்டுவிட்டாள். அவள் சமையல் நன்றாக இருக்கும். ஆனால் பஞ்சுவுக்கு என்னிடம் இருந்த கொஞ்ச நஞ்ச மரியாதையும் போய்விட்டது. நான் ஏதோ ஆடம்பரம் இல்லாத மனிதன் என்று எண்ணிக்கொண்டிருந்தான். என் காரியத்துக்காகத் துளிகூடப் பச்சாத்தாபப்படாமல் நான் ஜானியைக் கைவிட்டேன் அல்லவா? அந்தக் கிழவிக்கு விரோதமாக நான் ஒரு பொய்ச் சாட்சி தயார் செய்தால் கூட வேறு விதமாக இருந்திருக்கும். தந்திரத்தைத் தந்திரத்தினால்தான் வெல்ல வேண்டும் என்றாலும் ஆசாரத்தைத் தள்ளிவிட்டு ஓர் உபாயத்தைக் கைக்கொள்வது என்றால் அவனுக்குப் பொறுக்கவில்லை. அந்த அம்மாள் போன பிறகுகூடச் சில நாள் நான் பஞ்சுவோடு இருந்தாக வேண்டும். ஏனென்றால் ஹரிசகுண்டன் எதையும் செய்ய அஞ்சமாட்டான். தன்னைச் சுற்றிக்கொண்டிருக்கும் 'லோட்டா'க்களிடம் அவன், 'நான் பஞ்சுவுக்கு ஒரு மாமியைத் தேடிக்கொடுத்தது போதும் என்றிருந்தேன். ஆனால் இவர் அவனுக்கு ஓர் அப்பாவையே அளித்துவிட்டார்' என்று சொல்லிக்கொண்டிருக்கிறான். 'எவ்வளவு அப்பாக்கள் வந்தாலும் அவனைக் காப்பாற்ற முடியாது' என்றும் அவன் சொல்லிக்கொண்டிருக்கிறான்.''

''பஞ்சுவைக் காப்பாற்ற முடிந்தாலும் சரி, முடியாவிட்டாலும் சரி. ஆனால் மதம், சம்பிரதாயங்கள், சுயநலம் இவைகளைப் போன்ற ஆயிரக்கணக்கான மாயவலைகள் இருக்கின்றனவே; இவைகளினின்றும் தேசத்தைக் காப்பாற்றவேண்டும். அந்த முயற்சியில் உயிரை விடும்படியாக இருந்தாலும் அந்தச் சாவு சந்தோஷகரமானதாகவாவது இருக்கும்'' என்று நான் கூறினேன்.

# விமலா

இந்த ஒரே ஜன்மத்தில் இவ்வளவெல்லாம் நடக்கும் என்று யார் கண்டார்கள்? எத்தனையோ பிறவிகள் நான் எடுத்தாகிவிட்டது போலவே எனக்குத் தோன்றுகிறது. காலம் போவதே தெரியாமல் அவ்வளவு விரைவாகப் போய்க்கொண் டிருந்ததால், திடீரென்றுதான் எனக்கு அந்த அதிர்ச்சி ஏற்பட்டது.

கடையில் விதேசிப் பொருள்களை விற்கக்கூடா தென்று உத்தரவளிக்கும்படி என் கணவரிடம் கேட்பதாக நிச்சயித்தபோதே எங்களுக்குள் அதைப்பற்றிச் சச்சரவு ஏற்படும் என்பதை நான் அறிவேன். ஆனால் அதற்காக வாதிக்க வேண்டிய அவசியம் ஒன்றும் நேராது என்றே நான் நம்பிக்கொண் டிருந்தேன். ஏனென்றால் என்னிடம் மந்திரசக்தி இருந்தது அல்லவா? ஸந்தீபைப் போன்ற ஒரு தீர புருஷன் கரையில் மோதும் ஒரு பெரும் அலைபோல் என் காலடியில் சரணமாக விழுந்து கிடப்பது எதனால்? என்னிடம் இருக்கும் மந்திரசக்தியின் பிரபாவத்தினால் அல்லவா? அந்தச் சிறுவன் அமூல்யன்! அவன் முதலில் என்னிடம் வந்தபோது விடியற்காலை யில் தோன்றும் நதியின் பிரவாகம்போல் எவ்வாறு அவன் முகத்தில் ஜீவகளை ததும்பி ஓடிற்று! ஆனந்த பரிதனான தன் பக்தனுடைய முகத்தைக் காணும்போது ஒரு தேவதைக்கு என்ன உணர்ச்சி உண்டாகுமோ அப் படித்தான் எனக்கும் அப்போது இருந்தது. இப்படிக் கண்கூடாகக் கண்டதனால் என் சக்தியில் நம்பிக்கை மேலிட்டவளாக மின்னலோடு கூடிய மழை மேகம்போல் என் கணவருடன் பேசத் தயாரானேன். ஆனால் கடைசி யில் நடந்தது என்ன? அவர் முகத்தில் விளங்கிய அத் தகைய சூனியமான பார்வையை இந்த ஒன்பது வருஷங் களாக நான் கண்டதில்லை. பிரகாசம் இல்லாமல் ஈரமற்ற வறண்ட ஆகாயம்போல் அல்லவா அவர் பார்வை

விளங்குகிறது? அவர் கோபித்து என்மேல் எரிந்து விழுந்திருந்தால்கூட எனக்கு எவ்வளவோ நிம்மதியாக இருந்திருக்கும். தூண்டுவதற்கு அங்கே ஒன்றும் விஷயமே இல்லாமல் இருந்தது. எல்லாம் கனவுபோல் பொய்யாகத் தோன்றிற்று. அந்தக் கனவு முடிந்ததும் இருண்ட இரவைத் தவிர வேறு எதைக் காண முடியும்?

முன்பெல்லாம் என் ஓர்ப்படிகளின் அழகைக் கண்டு நான் பொருமைப்படுவது வழக்கம். தெய்வம் எனக்கும் இத்தகைய தனிச் சக்தி ஒன்றை அளிக்காமல், என் கணவரின் அளவற்ற அன்பையே பலமாகக் கொள்ளும்படி செய்துவிட்டதே என்று நான் வருந்துவது உண்டு. இப்போதோ சக்தி என்றால் என்ன என்பதை நான் பூர்ணமாக அறிந்துவிட்டேன். அதனால் ஏற்படும் மயக்கத்தை அநுபவியாமல் இனி என்னால் இருக்கமுடியாது. இந்த நிலையில் என் கையில் இருந்த அந்தச் சக்தி மதுக்கிண்ணம் திடீரென்று சுக்கு நூருக உடைந்து காலடியில் விழுந்து கிடந்தால் எப்படி இருக்கும்? அதற்கப்புறம் வாழ்க்கையில் என்ன இருக்கிறது?

எவ்வளவு ஆவலுடன் நான் அன்று என் கூந்தலைப் பின்னிக் கட்டிக்கொண்டேன்! ஐயோ! அதை நினைத்தாலும் மானம் போகிறது! என் ஓர்ப்படி என்னைப் பார்த்துவிட்டு, "என்ன சின்ன ராணி, கொண்டை, தலையை விட்டுத் துள்ளிக் குதித்துவிடும்போல் இருக்கிறதே! தலை பத்திரம்" என்று கூறிவிட்டுச் சென்ருள்.

அப்புறம் அன்று தோட்டத்தில் எனக்குச் சுதந்தரம் அளித்துவிட்டதாக எவ்வளவு லகுவாக என் கணவர் கூறிவிட்டார்! வெறும் அர்த்தமற்ற சுதந்தரம்! அவ்வளவு எளிதாகக் கொடுத்து வாங்கக்கூடியதா அது? ஒரு மீனை ஜலத்தை விட்டு வானத்தில் சுயேச்சையாக விடுவது போலத்தான் அதுவும். ஏனென்ருல் என்னை எப்போதும் தாங்கிக்கொண் டிருக்கும் இந்த அன்பையும் பராமரிப்பையும் விட்டு அவற்றுக்கு வெளியே நான் எப்படி உயிர் வாழ்வேன்?

இன்று என் படுக்கையறையில் நுழைந்தவுடன் அதில் இருக்கும் சாமான்களே என் கண்களில் பட்டன. சுற்றி

லும் புடைவை ஸ்டாண்டு, சுவரிலுள்ள கண்ணடி இவைகளை அன்றி அவற்றின்மீதும் வியாபித்துத் தோன்றும் உள்ளத்தைக் காணவில்லையே! அதற்குப் பதிலாகச் சுதந்தரம், வெறும் சுதந்தரந்தான் இருந்தது. பாறைகளும் கற்களும் மிஞ்சிய ஒரு வறண்ட நீர் ஊற்று அது. உணர்ச்சி இல்லை. வெறும் சாமான்கள் மட்டுமே காணப்பட்டன அங்கே.

என் வாழ்க்கையில் ஏதாவது உண்மை இருக்குமா என்று கலங்கித் தவித்துக்கொண்டிருந்தபோதுதான் நான் ஸந்தீபை மறுபடியும் சந்திக்க நேர்ந்தது. இரண்டு உயிர்கள் ஒன்றோடொன்று பட்டு உராய்ந்ததும் முன் போலவே அனற் பொறிகள் கிளம்பின. ஒன்றுக்கும் அடங்காத உண்மை அல்லவா இது? எல்லைக்கு உட்படாத அது கரைமீறிச் செல்லுகிறது. பெரிய ஓர்ப்படி ஜப மாலையை உருட்டுவது, சிறிய ஓர்ப்படி வேலைக்காரி தாகோவோடு பரிகாசம் செய்து சிரித்துப் பேசுவது இவற்றையெல்லாம் விட அதுவே ஆயிரம் மடங்கு உண்மையல்லவா?

''ஐம்பதினாயிரம் வேண்டும் என்று அல்லவா ஸந்தீப் கேட்டார்!''

'ஐம்பதினாயிரந்தானே! என்ன பிரமாதம்?' என்றது என் வெறிகொண்ட உள்ளம்.

அது எப்படி எங்கிருந்து கிடைக்கும் என்பவை எல்லாம் அற்ப விஷயங்களாகத் தோன்றின. ஒன்றும் இல்லாதிருந்த நான் ஒரு கணத்தில் இந்த உச்சியை அடைந்துவிடவில்லையா? அப்படியே நான் விரும்பியதும் எல்லாம் என்னைத் தேடிவரும் அல்லவா? அந்தத் தொகையை எப்படியேனும் அடைந்துவிடுவேன்; சந்தேகம் இல்லை. நான் அன்று ஸந்தீபை விட்டு வந்தபோது அப்படித்தான் நினைத்துக்கொண்டேன். அப்புறம் பார்த்தபோது அந்தக் கற்பக விருக்ஷம் எங்கே போயிற்று? ஆகா! இந்த வெளி உலகம் இவ்வாறு உள்ளத்தைப் புண்படுத்துவானேன்?

எப்படியாவது அந்தப் பணம் கிடைத்துத்தான் ஆக வேண்டும்; பாவம் என்றும் புண்ணியம் என்றும் பார்க்க முடியாது. மனோபலம் அற்றவர்களைத்தான் பாவம் தீண்

டும். என் சக்தியை அது ஒன்றும் செய்ய முடியாது. அற்ப மனிதனைத்தான் திருடன் என்று சொல்லுவார்கள். அரசனே தனக்கு வேண்டியதை வென்று எடுத்துக்கொள்வான்..... கஜானா இருக்கும் இடத்தை அறியவேண்டும். யார் பணத்தை வைக்கிறார்கள், யார் காவல் இருக்கிறார்கள் என்று பார்க்கவேண்டும்.

பாதி இரவு வரையிலும் ஜமீன் விவகாரங்களைக் கவனிக்கும் உத்தியோகஸ்தர்கள் வேலை செய்யும் அறைகளை நோக்கிக்கொண்டே வெளித் தாழ்வாரத்தில் நின்றேன். அந்த இரும்புக் கதவுகளைத் தாண்டிப் போய் அந்த ஐம்பதினாயிரத்தை எப்படிக் கொண்டுவருவது? ஏதாவது மந்திர சக்தியினால் அங்கும் இங்கும் உலவும் காவலாளர்களை நின்ற இடத்திலேயே விழுந்து இறக்கும்படி செய்ய முடியும் என்றால் அப்படியே செய்ய நான் சற்றும் தயங்கியிருக்க மாட்டேன். அவ்வளவு ஈவிரக்கம் இல்லாதிருந்தது என் நெஞ்சம்.

இப்படிப்பட்ட கொள்ளைக் கூட்டம் ஒன்று வீட்டு எஜமானியின் மூளையில் புகுந்து வேலை செய்துகொண்டிருந்தபோது வீடு முழுவதும் நிம்மதியான நித்திரையில் ஆழ்ந்து கிடந்தது.

நிசிவேளை ஆயிற்று என்பதை அடித்த காவல் மணி தெரிவித்தது. எங்கும் நிச்சப்தம் நிலவியிருந்தது.

கடைசியாக வரும்படி அமூல்யனுக்குச் சொல்லி அனுப்பினேன்.

"நம் இயக்கத்துக்குப் பணம் தேவையாக இருக்கிறது. கஜானாவிலிருந்து உன்னால் கொண்டுவர முடியுமா?" என்று அவனைக் கேட்டேன்.

"அப்படியே! இதென்ன பிரமாதம்?" என்று அவன் தைரியமாகப் பதில் அளித்தான்.

இப்படித்தானே நானும் ஸந்தீபிடம் சொன்னேன்! அந்தச் சிறுவனின் தைரியம் எனக்கு நம்பிக்கையை உண்டாக்கவில்லை.

"எப்படிக் கொண்டுவருவாய்?"

உடனே அவன் தன் சாகசமான யோசனைகளையெல்லாம் கூறத் தொடங்கினான். அவற்றை இங்கே கூறுவதில் பிரயோசனம் இல்லை.

"அமூல்யா, கண்டபடி பிதற்றாதே" என்று கொஞ்சம் கடுமையாக மொழிந்தேன்.

"சரி; ஆனால் அந்தக் காவலாளர்களுக்கு லஞ்சம் கொடுத்துக் காரியத்தை நிறைவேற்றிக்கொண்டால் போகிறது" என்றான்.

"அதற்குப் பணம் எங்கே?"

"கடைகளைக் கொள்ளையடித்துக்கொண்டு வருகிறேன்" என்றான் அவன், சற்றும் தயங்காமல்.

"அந்த யோசனைகளையெல்லாம் விட்டுவிடு. என் நகைகள் இருக்கின்றன. அவைகளை உபயோகப்படுத்திக் கொள்ளலாம்."

"ஆனால் அந்தக் காஷியர் லஞ்சத்துக்கு உட்படமாட்டார் என்று தோன்றுகிறது. இதைக்காட்டிலும் வேறு சுலபமான வழி ஒன்று இருக்கிறது" என்றான் அமூல்யன்.

"என்ன அது?"

"அது உங்களுக்குத் தெரிய வேண்டுமா? வெகு சுலபமான வழி."

"அதைத்தான் என்னவென்று சொல்லேன். கேட்போம்."

அமூல்யன் தன் சட்டைப்பைக்குள் கையை விட்டுச் சிறிய பகவத்கீதைப் புத்தகம் ஒன்றை எடுத்து மேஜை மேல் வைத்தான். பிறகு சிறு கைத்துப்பாக்கி ஒன்றை எடுத்து என்னிடம் காட்டினான். அவ்வளவுதான். அவன் மேலே ஒன்றும் சொல்லவில்லை.

ஆகா! என்ன விபரீதம்! அந்தக் காஷியரைக் கொன்றுவிடுவதென்று நிச்சயிக்க அவனுக்கு ஒரு கணங்கூட அவசியமாக இல்லை. கபடற்ற அவன் முகத்தைப் பார்த்தபோது ஒரு கொசுவுக்குக்கூட அவன் ஒரு தீங்

கும் செய்யமாட்டான் என்றே தோன்றும். ஆனால் அவன் வாயிலிருந்து கிளம்பிய சொற்கள் எவ்வளவு விபரீதமாக இருந்தன! 'அந்தக் காஷியர் இருந்தால் என்ன, போனால் என்ன?' என்று அவன் நினைத்தான் என்பது தெளிவாகத் தெரிந்தது. அங்கே உண்மையில் என்ன இருந்தது? வெறும் தோற்றம் அல்லவா? ''உடலைக் கொல்வது கொன்றதாகாது'' என்பது கீதையின் வாக்கியம்.

''அமூல்யா, நீ சொல்வது எனக்கு விளங்கவில்லை. பாவம்! அந்தக் கிழவருக்குப் பெண்டாட்டி, பிள்ளைகள் இருக்கிறார்களே! உனக்குத் தெரியாதா?'' என்றேன்.

''பெண்டாட்டி, பிள்ளைகள் இல்லாத மனிதர்கள் உலகில் உண்டா?'' என்று அமூல்யன் என்னைத் தடுத்துக் கூறினான்; ''மகாராணி, இதோ பாருங்கள்! இரக்கம் என்று சொல்லுகிறோமே, அது பார்க்கப்போனால் கடைசியில் நம்மைப்பற்றித்தான் உண்டாகிறது. நம் இளகிய நெஞ்சத்துக்குக் கஷ்டமாக இருப்பதனால் நாம் அவ்வாறு செய்யக் கூசுகிறோம். இரக்கமா அது? கோழைத்தனத்தின் சிகரம் அல்லவா?''

ஸந்தீபின் மொழிகளை இச்சிறுவனின் வாயால் கேட்டபோது எனக்குத் தூக்கி வாரிப் போட்டது. ஒன்றும் அறியாத இளஞ் சிறுவன். நல்லதை நல்லதென்றே நினைக்கும் வயசு! வளர்ச்சியும் வாழ்க்கையும் உச்ச நிலையில் இருக்கும் பருவம். என் உள்ளத்தில் உறங்கிய தாய் உணர்ச்சி கண்விழித்து எழுந்தது.

இனி எனக்கு நன்மை என்றும் தீமை என்றும் இல்லை. மனத்தை மயக்கி இழுக்கும் சாவு ஒன்றுதான் பாக்கி. ஆனால் இந்தச் சின்னஞ்சிறு பையன், ஒரு பாவமும் அறியாத கிழவன் ஒருவனைக் கொலை செய்வது முற்றும் நியாயம்போல் அமைதியாகக் கூறுவதைக் கேட்ட என் உடல் நடுங்கிற்று. அவன் உள்ளத்தில் பாவ சிந்தனை இல்லை என்று தெளிவாகத் தெரிந்ததனாலேயே அவன் சொற்கள் இன்னும் பயங்கரமாகத் தோன்றின. பெற்றோர் செய்த பாவம் நிரபராதியான குழந்தையின் தலையில் விழுந்துவிட்டதுபோலும் என்று நினைத்தேன்.

அவன் அகன்ற கண்கள் நம்பிக்கையுடனும் பெரும் உத்சாகத்துடனும் பிரகாசிப்பதைக் கண்டபோது என்னால் சும்மா இருக்க முடியவில்லை. தன்னுடைய மதி மோகத்தால் அவன் நேரே அந்தப் பெரும் மலைப்பாம்பின் வாயில் விழுந்துகொண்டிருந்தான். அங்கே சென்றவர் மீண்டும் திரும்பி வருவது உண்டோ? அவனை எப்படிக் காப்பாற்றுவேன்? இந்த நாடு நிஜமான ஒரு தாயாகவே மாறி, அவனைக் கட்டி அணைத்து, 'ஐயோ குழந்தாய். உன்னை என்னால் காப்பாற்ற முடியாதென்றால், நீ மட்டும் என்னைக் காப்பாற்றி என்ன பிரயோஜனம்?' என்று ஏன் கதறலாகாது?

உலகில் எந்தச் சக்தியும் துர்த்தேவதையின் சம்பந்தத்தினால் இன்னும் பலமுள்ளதாகிறது என்பதை நான் அறிவேன். ஆனால் அதைத் தடுத்து ரக்ஷிப்பதற்கு ஒரு தாயினால்தான் முடியும். எவ்வளவு பெரிதாயினும் வெற்றியை அவள் ஒரு பொருட்டாகக் கருதமாட்டாள். அவள் உயிரையே அளிப்பாள்; உயிரைக் காப்பாற்றுவாள். என் ஆவி முழுவதும் இன்று இந்தச் சிறுவனை ரக்ஷிக்க வேண்டும் என்றே துடிக்கிறது.

சற்று முன்புதான் அவனிடம் திருடுவதைப்பற்றிக் கூறினேன். அதற்கு விரோதமாக நான் இப்போது என்ன சொன்னாலும் அது என் பெண்மையின் பலவீனமென்றே மதிக்கப்படும். உலகத்தையே தன் சுழலில் அகப்படச் செய்யும்போதுதான் புருஷர்கள் எங்களுடைய இந்த அபலைத்தனத்தைப் பெரிதும் நேசிக்கிறார்கள்.

"நீ ஒன்றும் செய்யவேண்டாம், அமூல்யா! பண விஷயத்தை நான் பார்த்துக்கொள்கிறேன்" என்று அவனிடம் முடிவாகக் கூறினேன்.

அவன் போவதற்காகக் கதவண்டை சென்றதும் நான் அவனை மீண்டும் கூப்பிட்டு, "அமூல்யா, நான் உன் தமக்கை. இன்று 'பிராத்ரு த்விதீயை' அல்லவா? அதனால் என்ன? வருஷத்தில் எல்லா நாட்களும் 'பிராத்ரு த்விதீயை' கள்தாம். என் ஆசிர்வாதத்தை இன்று அளிக்கிறேன். கடவுள் உன்னை எப்போதும் ரக்ஷிப்பாராக!" என்றேன்.

திடீரென்று இம்மாதிரி வார்த்தைகளை என் வாயி னின்றும் கேட்ட அமூல்யன் ஆச்சரியம் அடைந்தான். ஒரு நிமிஷம் ஒன்றும் தோன்றாமல் மௌனமாக நின்றான். பிறகு சுய நினைவு பெற்று என் காலில் விழுந்து நமஸ்கரித் தான். அவன் எழுந்திருந்தபோது கண்களில் நீர் நிறைந்திருந்தது.

'ஐயோ தம்பி! நான் அதி சீக்கிரத்தில் மரணம் அடையப் போகிறேன். உன் பாவம் எல்லாம் என்னைச் சேரட்டும். என் பாவம் உன் பரிசுத்தத் தன்மையைக் களங்கப்படுத்தாமல் இருக்கட்டும்' என்று என் மனம் தொழுதது.

"உன் பக்திக்கு அறிகுறியாக அந்தக் கைத்துப்பாக் கியை அளித்துவிடு" என்றேன்.

"அக்கா, உங்களுக்கு எதற்கு இது?"

"இறப்பதற்குப் பழகிக்கொள்ள விரும்புகிறேன்."

"நியாயந்தான்!" என்றான் அமூல்யன். "நம் ஸ்திரீ களும் சாவு என்றால் என்ன, எப்படிச் சாகவேண்டும் என் றெல்லாம் தெரிந்துகொள்ள வேண்டியதுதான்." இப் படிக் கூறிவிட்டுத் துப்பாக்கியை அவன் என்னிடம் கொடுத்தான்.

இளமை மாறாத அவன் முகத்தில் விளங்கிய பிரகாசம் என் வாழ்க்கைக்குப் புத்துயிர் அளித்ததுபோல் இருந்தது. அவன் கொடுத்த துப்பாக்கியை என் புடைவைக்கு இடை யில் மறைத்தேன். ஒரு வழியும் காணாத கஷ்ட சமயத்தில் அது எனக்கு உபயோகப்படட்டும்.

என் பெண்மை உள்ளத்தில் தாய்மை குடிகொண் டிருக்கும் அறையின் கதவு திறந்தவுடன் இனி அது எப் போதும் திறந்தேதான் இருக்கும் என்று எண்ணினேன். தாயின் ஸ்தானத்தில் எஜமானி வந்து அதை மறுபடியும் பூட்டியவுடன் வழி அடைத்துப்போயிற்று. மறுநாளே நான் ஸந்தீபைப் பார்த்தேன். மறுபடியும் தலைகால் தெரி யாத ஏதோ ஒரு பித்து என்னைப் பிடித்துக்கொண்டு ஆட் டத் தொடங்கிற்று.

அது என்ன? அதுதான் என்னுடைய நிஜமான தன்மையோ? சீ! அப்படி ஒரு நாளும் இருக்காது. இதற்கு முன் இவ்வளவு ஈவிரக்கமற்ற ஒரு வெட்கங்கெட்ட தன்மையை என்னிடம் நான் கண்டதே இல்லை. பாம்பாட்டி என் வஸ்திரத்தினின்றும் பாம்பை வெளிப்படுத்துவதாகப் பாவனைதான். ஆனால் பாம்பு என் வஸ்திரத்துக்குள் இல்லை. அவனிடந்தான் இருந்தது. என்னை ஏதோ ஒரு பிசாசு பிடித்துக்கொண்டிருக்கிறது. நான் இன்று செய்வதெல்லாம் அதனுடைய வேலையே ஒழிய வேறல்ல. எனக்கும் அவைகளுக்கும் ஒன்றும் சம்பந்தமே இல்லை.

இந்தப் பிசாசு ஒரு நல்ல தேவதை போலக் கையில் தீபத்துடன் என்னிடம் வந்து, "நான்தான் உங்கள் தேசம். நான்தான் உங்கள் ஸந்தீப். யாவற்றுக்கும் மேல் நான்தான் வேண்டியவன். வந்தே மாதரம்!" என்று கூறிற்று. கைகளைக் கூப்பிக்கொண்டு நானும், "நீதான் என் தெய்வம். நீதான் என் சொர்க்கம். உன் மேலுள்ள என் அன்புதான் எனக்கு மற்ற எல்லாவற்றையும் விடப் பெரிது. வந்தே மாதரம்" என்று பதிலுக்குக் கூறினேன்.

ஐயாயிரந்தானே? இருக்கட்டும். நாளைக்கே வேண்டுமா? அப்படியே நாளைக்குக் கிடைக்கும். அந்த ஐயாயிரமானது மதுவின்மேல் பொங்கி எழும் நுரைபோல் இருக்கட்டும். பிறகு களிவெறி நடக்கட்டும். ஸ்திரமான இவ்வுலகம் நிலையற்றதாகட்டும். எங்கள் கண்களிலிருந்து நெருப்புப் பொறிகள் பறக்க, எங்கள் காதுகளில் ஒரு புயல் வீசட்டும். எதிரில் இருப்பதும் இல்லாததும் எல்லாம் ஒரே அடியாக இருண்டு போகட்டும். அப்புறம் கால்கள் தள்ளாட நாங்கள் மரணத்தை நோக்கிச் செல்வோம். ஒரே நொடியில் நெருப்பு முழுவதும் அணைந்து எங்கும் சாம்பல் மூடிவிட்டால் அப்புறம் ஒன்றும் மிஞ்சி இருக்காது.

சில காலம் வரைக்கும் எவ்விதத்தில் அந்த ஐயாயிரம் ரூபாயைக் கொண்டு வருவது என்று தோன்றாமலே இருந்தேன். பிறகு திடீரென்று ஒரு நாள் அது என் மனத்தில் பளிச்சென்று தெளிவாக விளங்கிவிட்டது. ஒவ்

வொரு வருஷமும் துர்க்கா பூஜையின்போது என் கண வர் என் ஓர்ப்படிகளுக்கு ஆருயிரம் ரூபாய் விசேஷக் காணிக்கையாக அளிப்பது வழக்கம். அதைத் தவருமல் கல்கத்தா பாங்கியில் அவர்கள் கணக்கில் கட்டிவிடுவார் கள். இவ்வருஷமும் வழக்கம்போல் அந்தப் பணம் அவர்க ளுக்கு அளிக்கப்பட்டது. ஆனால் அதை உடனே பாங்கிக்கு அனுப்பாமல் எங்கள் படுக்கை உள்ளுக்குப் பக்கத்தில் உள்ள சிறு அறையின் மூலையில் இருந்த ஓர் இரும்புப் பெட்டியில் வைத்திருந்தார்கள்.

ஒவ்வொரு வருஷமும் என் கணவரே பணத்தைப் பாங்கிக்கு எடுத்துப் போவது வழக்கம். இந்த வருஷம் அவ ருக்கு இன்னும் புறப்பட்டுப் போவதற்குச் சௌகரியப் படவில்லை. தெய்வமே இப்போது என் பங்கில் இருப் பது என் கண்ணில் படாமல் போகுமா? தேசத்துக்காக அல்லவா அந்தப் பணம் இன்னும் பாங்கிக்குப் போகாமல் தங்கியிருக்கிறது! அப்படி இருக்க அதை அன்னையின் உபயோகத்துக்கன்றி வேறு விதமாக விநியோகம் செய்ய யாருக்கேனும் சக்தி உண்டா? அதை எனக்கு வேண்டாம் என்றுதான் நானும் எப்படிச் சொல்ல முடியும்? சர்வ நாசினியான தேவி தன் ரத்தக் கிண்ணத்தைக் காட்டி, 'எனக்குத் தாகமாக இருக்கிறது. பணம் கொடுங்கள்' என்று கேட்கிருள். இந்த ஐயாயிரம் ரூபாய்களுடன் என் இருதய ரத்தத்தையே வடித்து நான் அவளுக்குக் கொடுப் பேன். அன்னையே, அந்தப் பணத்தை இழந்தவருக்கு அது ஒரு பெரிதல்ல. ஆனால் நீ என்னை அடியோடு தொலைத்து விடுவாயே!

முன்பெல்லாம் எவ்வளவோ தடவை என் ஓர்ப்படி களைத் திருடிகள் என்று என் மனத்துக்குள் நான் திட்டுவது உண்டு. ஏனென்ருல் என் கணவரிடமிருந்து தந்திரமாக அவர்கள் பணம் பறித்துக்கொண்டிருந்தார்கள் அல்லவா? அவர்கள் கணவன்மார் இறந்தபின் அவர்கள் எவ்வளவோ தடவை ஜமீனுக்குச் சொந்தமான சாமான்களைத் தம் உப யோகத்துக்காக எடுத்துக்கொண்டுவிடுவது வழக்கம். இந்த விஷயத்தை நான் என் கணவரிடம் கூறினல் அவர் பேசாமல் இருந்துவிடுவார். அதைக் காண எனக்குக்

கோபம் வரும். 'அவ்வளவு உதார புத்தி என்றால் நீங்களே உங்கள் கைகளினால் கொடுங்களேன்? இப்படித் திருடி எடுத்துக்கொள்ளும்படி ஏன் செய்யவேண்டும்?' என்று கேட்பேன். தெய்வம் அப்போது என்னைப் பார்த்துச் சிரித்திருக்கும். ஏனென்றால் இன்றிரவு என் ஓர்ப்படிகளின் பணத்தை என் கணவரின் இரும்புப் பெட்டியிலிருந்து நான் திருடுவதாக இருக்கிறேன்!

என் கணவர் இரவு படுத்துக்கொள்ளும்போது பையில் சாவிகளுடன் சட்டையை அவிழ்த்து வைப்பது வழக்கம். நான் இரும்புப் பெட்டிச் சாவியைப் பொறுக்கி எடுத்துப் பெட்டியைத் திறந்தேன். அப்போது உண்டான சிறு சப்தம் உலகம் முழுவதையுமே எழுப்பிவிடும் போல் இருந்தது! என் கால்களும் கைகளும் ஜில்லிட்டுப் போயின; வெடவெட என்று நடுங்கினேன்.

இரும்புப் பெட்டியில் இழுத்து மூடும் அறை ஒன்று இருந்தது. அதைத் திறந்து பார்த்தபோது அதில் பணம் இருந்தது. அவை நோட்டுக்களாக இல்லை; சவரன்களாகக் காகிதத்தில் சுற்றப்பட்டிருந்தன. எனக்கு வேண்டியதை எண்ணிப் பார்த்து எடுத்துக்கொள்ளக்கூட எனக்குச் சாவகாசம் இல்லை. மொத்தம் இருபது பொட்டலங்கள் இருந்தன. அவற்றை அப்படியே எடுத்து என் புடைவைத் தலைப்பின் ஒரு மூலையில் வைத்து முடிந்து கொண்டேன்.

அது எவ்வளவு கனமாகத் தோன்றியது! அந்தத் திருட்டு ஒரே அடியாக என் உள்ளத்தை நொறுக்கி விட்டது. அவை நோட்டுக்களாக இருந்தாலும் ஒருவேளை அவ்வளவு பெரிய திருட்டாகத் தோன்றாமல் இருக்கலாம். ஆனால் அவை முழுவதும் சவரன்களாக இருந்தன.

திருடியைப்போல் மெதுவாக நான் என் அறைக்குள் நுழைந்தேன். அது என் அறையாகவே தோன்றவில்லை. என் திருட்டைக் கண்டதும் அதிலுள்ள என் உரிமைகள் எல்லாம் பறந்து ஓடிவிட்டன போலத் தோன்றிற்று. ஏதோ மந்திரத்தை ஜபிப்பது போல, 'வந்தே மாதரம், வந்தே மாதரம்' என்று முணுமுணுத்தேன். என் திரு

நாடே! உனக்காகவேதான் இந்தச் சவரன்களேயன்றி வேறென்றுக்கும் அல்ல!

இரவில் மனத்துக்குப் பலம் குன்றிவிடுகிறது. நான் திரும்பி என் படுக்கை அறைக்கு வந்ததும் தூங்கிக் கொண்டிருக்கும் என் கணவரைப் பாராமல் கண்களை மூடியபடியே வெளித் தாழ்வாரத்துக்குச் சென்றேன். அங்கே பவுன் முடிப்பை மார்பின்மீது வைத்து அணைத்த படியே கீழே படுத்துக்கொண்டேன். ஒவ்வொரு பொட்டலமும் எனக்கு ஒரு வேதனை அதிர்ச்சியை அளித்தது.

இரவு மௌனமாகக் காவல் புரிவதுபோல் விளங்கிற்று. தேசமும் என் வீடும் வெவ்வேறு என்று என்னால் நினைக்க முடியவில்லை. என் வீட்டில் திருடினால் என்ன? தேசத்தையே கொள்ளையிட்டால் என்ன? இந்தப் பாவத்தால் இனிமேல் இதை, 'என் வீடு' என்று சொல்ல முடியாது. என் தேசமும் அப்படியே என்னை விட்டு விலகிவிட்டது என்றுதான் சொல்லவேண்டும். தேசத்துக்காகப் பிச்சையெடுத்துப் பயனில்லாமல் இறந்துபோனாலும் அது தெய்வசம்மதமான தேச பூசையாக இருக்கும். ஆனால் திருட்டு எப்படிப் பூசை ஆகும்? நான் எப்படி இந்தச் சவரன்களைத் தெய்வத்துக்கு அர்ப்பணம் செய்ய முடியும்? ஐயோ! நான்தான் சாகவேண்டும் என்றால் என் தேசத்தையும் என் அசுத்தமான ஸ்பரிசத்தினால் நான் கெடுக்கவேண்டுமா?

பணத்தை மீண்டும் இருந்த இடத்திலேயே வைத்து விடுவது என்பதோ முடியாது. மறுபடியும் அந்த அறைக்குப் போய்ச் சாவியை எடுத்து இரும்புப் பெட்டியைத் திறப்பதற்கு எனக்குத் தைரியம் இல்லை. வாசற்படியிலேயே மூர்ச்சித்து விழுந்துவிடுவேன் என்று தோன்றியது. இனிமேல் சென்ற வழியையே தொடர்ந்து மேன்மேலும் செல்ல வேண்டும். உட்கார்ந்து அமைதியாகச் சவரன்களை எண்ணிப் பார்க்கவும் என்னால் முடியவில்லை. அவை அப்படியே இருக்கட்டும்.

மார்கழி மாதமானாலும் ஆகாயத்தில் பனிமூட்டம் ஒன்றும் இல்லை. நக்ஷத்திரங்கள் பளீரென்று பிரகாசித்துக்

கொண்டிருந்தன. அங்கே படுத்தபடியே நான் இப்படி எண்ணலானேன். வெகு ஜாக்கிரதையுடன் இருட்டில் சேகரித்து வைத்திருக்கும் அந்த நக்ஷத்திரங்களைத் தேசத்துக்காகச் சவரன்களைப்போல் ஒவ்வொன்றாக நான் திருடினால் ஆகாயம் இருண்டு, இரவும் களை அழிந்து விடும். நான் உலகத்தின் சொத்தையே அபகரித்தவள் ஆவேன். ஆனால் உலகத்தின் பணத்தை மட்டும் அல்ல, அதன் நீதி, நம்பிக்கை இவைகளையும் நான் அபகரித்தவள் ஆவேன்.

இரவு முழுவதும் வெளித் தாழ்வாரத்திலேயே படுத்திருந்தேன். பொழுது கடைசியாகப் புலர்ந்தது. என் கணவர் படுக்கையை விட்டு எழுந்து சென்றார் என்று தெரிந்த பிறகுதான் சால்வையினால் தலையைப் போர்த்துக் கொண்டு மீண்டும் அறைக்குள் செல்ல என்னால் முடிந்தது. என் சிறிய ஓர்ப்படி பித்தளைக் குடத்தை வைத்துக்கொண்டு துளசிச் செடிகளுக்கு ஜலம் விட்டுக் கொண்டிருந்தாள். என்னைத் தூரத்திலிருந்து பார்த்து விட்டு அவள், ''சின்ன ராணி, சமாசாரம் தெரியுமா?'' என்று கேட்டாள்.

நான் உடனே நடுநடுங்கிப் போய் நின்றேன். என்னிடம் இருந்த சவரன் பொட்டலங்கள் சால்வைக்குள்ளிருந்து வெளியே நன்றாகத் தெரிவதுபோலத் தோன்றிற்று. அவை அப்படியே வெடித்துக் கீழே உதிர்ந்து, 'தன் பணத்தையே கொள்ளையிட்டவள்!' என்று என்னை வீட்டு வேலைக்காரர்கள் யாவரும் அறியும்படி செய்து விடுமோ என்று பயந்தேன்.

''உன் கொள்ளைக் கூட்டத்தார் இருக்கிறார்களே, அவர்கள் கஜானாவில் புகுந்து கொள்ளையடிக்கப் போவதாகச் செய்தி அனுப்பியிருக்கிறார்கள்'' என்றாள்.

நான் திருடியைப்போல் மௌனமாக இருந்தேன்.

''உன்னிடம் சரண்புக வேண்டும் என்று நிகிலுக்குச் சொன்னேன்'' என்றாள், என் ஓர்ப்படி கேலியாக. ''அம்மா, திருடர்கள் ராணியே! உன் ஆட்களைத் திருட வேண்டாம் என்று சொல்லு. எங்களை மட்டும் நீ காப்பாற்

றிஞல் உன் 'வந்தே மாதர'த்துக்கு வேண்டியதைச் சமர்ப்பித்துவிடுகிறோம். என்ன அநியாயங்கள் எல்லாம் இக்காலத்தில் நடக்கின்றன! உனக்குப் புண்ணியம் உண்டு. வீட்டில் கொள்ளை மட்டும் நடக்க வேண்டாம்'' என்ருள்.

நான் பதில் சொல்லாமல் என் அறைக்குச் சென்றேன். மிகவும் ஆபத்தான இடத்தில் காலை வைத்துவிட்டேன். இனிமேல் காலை எடுக்கவும் முடியாது. எடுத்துக்கொள்ள முயன்ருல் இன்னும் ஆழமாக மணலுக்கு அடியில் இழுத்துச் சென்றுவிடும்.

ஸந்தீபிடம் பணத்தைக் கொடுத்துவிட்டால் நல்லது! அந்த நேரம் எப்போது வருமோ! அந்தச் சவரன்களின் கனம் என்ஞல் தாங்க முடியவில்லை.

விடிந்து நேரம் ஆகவில்லை. ஸந்தீப் என்னைப் பார்ப்பதற்குக் காத்துக்கொண்டிருக்கிருர் என்று சமாசாரம் வந்தது. இன்று அலங்காரத்தைப் பற்றி எனக்கு எண்ணமில்லை. உடம்பைச் சால்வையினுல் போர்த்துக் கொண்டு அந்தப்புரத்தை விட்டு வெளியே வந்தேன்.

டிராயிங் ரூமில் ஸந்தீபும் அமூல்யனும் இருந்தனர். என் பெருமை, என் கௌரவம் யாவும் தலையிலிருந்து கால் வழியாக இறங்கிப் பூமிக்குள் மறைந்துவிட்டன போல் எனக்குத் தோன்றிற்று. இந்தச் சிறுவனின் கண் முன் ஒரு ஸ்திரீக்கு நேர்ந்த மானக்கேட்டை வெளியிட வேண்டுமே! அவர்கள் நான் செய்த காரியத்தைப் பற்றித்தான் பேசிக்கொண்டிருந்தார்களோ? எனக்கு இனி மானம் என்று ஏதேனும் உண்டா?

ஸ்திரீகளாகிய நமக்குப் புருஷர்களைப்பற்றி என்ன தெரியும்? ஏதேனும் ஒரு காரியத்தைச் சாதிக்கவேண்டும் என்று அவர்கள் முனைந்துவிட்டால், உலகின் உள்ளத்தையே துண்டுதுண்டாக ஒடித்துத் தங்கள் ரதம் செல்லும் மார்க்கத்தைச் செப்பனிட்டுக்கொள்வதைப் பற்றி ஒன்றும் கவலைகொள்ள மாட்டார்கள். சிருஷ்டிக்கும் வெறி மூண்டுவிட்டால், கடவுளின் சிருஷ்டியையே நாசம் செய்வதில் அவர்கள் ஆனந்தம் அடைகிருர்கள். என் நெஞ்சத்தைப் பிளக்கும் இந்த மானக்கேடு அவர்கள்

கண்களில் ஒரு பொருட்டாகவே தோன்றுது. வாழ்க்கையைப்பற்றி அவர்கள் மனத்தில் ஒன்றும் உணர்ச்சி இல்லை. அதன் லக்ஷ்யந்தான் அவர்களுக்குக் கவலை. நான் அவர்களுக்கு வெள்ளம் பெருகிச் செல்லும் வழியில் வயலில் பூத்திருக்கும் சிறு மலரைப் போன்றவளேயன்றி வேறு என்ன?

என்னுடைய அழிவினுல் ஸந்தீபுக்கு என்ன பயன்? ஐயாயிரம் ரூபாய்தானே! ஐயாயிரத்தைக் காட்டிலும் நான் கொஞ்சம் மேம்பட்டவள் அல்லவா? வாஸ்தவமாக அதை ஸந்தீபே என்னிடம் கூறவில்லையா? அந்த எண்ணத்திஞல் நான் மற்ற எல்லாவற்றையும் திரஸ்கரிக்கும் சக்தியுடையவள் ஆகவில்லையா? நான்தான் ஒளி, உயிர், சக்தி, அமரத்துவம் யாவற்றையும் அளிப்பவள் அல்லவா? அந்த நம்பிக்கையின் ஆனந்தத்தில் நான் என் எல்லைகள் யாவற்றையும் தாண்டி வெளியே வந்து விட்டேன். அந்த ஆனந்தத்தை யாராவது எனக்குப் பரிபூர்ணம் ஆக்கிவிட்டால் நான் இறந்தும் உயிர் வாழ்பவள் ஆவேன். என்னிடம் உள்ள சர்வத்தையும் இழந்தாலும் ஒன்றையும் இழக்காதவள் போலவே ஆவேன்.

இதெல்லாம் பொய் என்று இப்போது அவர்கள் என்னிடம் கூற நினைக்கிருர்களோ? என்னை அவ்வளவு பக்தியுடன் அவர்கள் தோத்திரம் செய்தது சொர்க்கத்தினின்றும் என்னைக் கீழிறக்கி, பூவுலகைச் சொர்க்கமாக்குவதற்குப் பதில் சொர்க்கத்தையே இம்மண்ணுலகுக்குச் சரியாகச் செய்துவிட்டதோ?

"ராணி! பணம் எங்கே?" என்று ஸந்தீப் என்னைக் கூர்மையாக நோக்கிய வண்ணம் கேட்டார்.

அமூல்யனும் என்னை நோக்கினுன். என் தாயின் வயிற்றில் பிறக்காவிட்டாலும் அந்தச் சிறுவனைக் காணும்போது என் கூடப் பிறந்த சகோதரன் போலவே தோன்றிற்று. தாய் என்ருல் உலகம் முழுவதும் ஒரே விதமாகத்தான் இருப்பாள் அல்லவா? கபடமற்ற முகமும் சாத்துவிகமும் பொருந்திய கண்களும் உடைய அந்த இளஞ் சிறுவன் என்னை நோக்கினுன். நான் அவன்

தாயைப் போன்றவள். அவன் கேட்பதற்காக விஷத்தை அவனுக்கு அளிப்பதா?.

"ராணி, பணம் எங்கே?" என்ற ஸந்தீபின் அலக்ஷ்ய மான வார்த்தைகள் என் காதில் ஒலித்தன. கோபமும் வெட்கமும் தாங்காமல் அந்தச் சவரன்களை ஸந்தீபின் தலை யில் வீசி எறிந்துவிட்டுப் போகவேண்டும்போல் எனக்கு இருந்தது. கைகள் நடுங்கியதால் என் சேலைத் தலைப்பின் முடிப்பை என்னால் அவிழ்க்க முடியவில்லை. கடைசியாக முடிப்பு அவிழ்ந்தது. காகிதப் பொட்டலங்கள் மேஜைமீது விழுந்தன.

ஸந்தீபின் முகம் கறுத்தது. அவை வெள்ளி நாணயங் கள் என்று அவர் நினைத்திருக்க வேண்டும். அவர் முகத் தில் இருந்த இகழ்ச்சிப்பார்வையை என்னவென்று சொல்லு வேன்! கையால் ஆகாததைக் கண்டு அவ்வளவு வெறுப்பு! என்னை அடித்து விடுவார் போலவே இருந்தது. அவர் கேட்ட ஐயாயிரத்துக்குப் பதில் ஏதோ சில நூறு ரூபாய் களைக் கொடுப்பதாகச் சொல்லுவதற்கு வந்திருக்கிறேன் என்று அவர் சந்தேகித்தார் போலும். 'நான் எனக்குச் செலுத்த வேண்டிய கப்பத்தைக் கேட்கும் ஓர் அரசனே யன்றிக் கேவலம் ஒரு பிச்சைக்காரன் அல்ல' என்று கூறி அந்தப் பொட்டலங்களை அப்படியே எடுத்து ஜன்னலுக்கு வெளியே வீசி எறிந்துவிடுவாரோ என்றுகூட ஒரு நிமி ஷம் தோன்றிற்று.

"இவ்வளவுதானா?" என்று அமூல்யன் மிகவும் அநு தாபம் தொனிக்கும் குரலில் கேட்டான். அதைக் கேட்ட எனக்கு விம்மி விம்மி அழவேண்டும்போல் இருந்தது. மார்பை அழுத்திப் பிடித்துக்கொண்டு, 'ஆம்' என்று தலையை ஆட்டினேன்.

ஸந்தீப் ஒன்றும் பேசவில்லை. அவர் பணத்தையும் கையால் தொடவில்லை.

நான் பட்ட அவமானத்தைக் கண்டு அமூல்யனின் மனம் இளகிவிட்டது. மிக்க உத்சாகம் கொண்டவன் போல் பாவனை செய்துகொண்டு, "இது யதேஷ்டம்; இந்தப் பணம் போதும். எங்களைக் காப்பாற்றினீர்கள்"

என்றான். இப்படிச் சொல்லிவிட்டு அவன் ஒரு பொட்டலத்தைப் பிரித்தான். உள்ளே இருந்த சவரன்கள் பளீரென்று பிரகாசித்தன. அடுத்த நிமிஷம் ஸந்தீபின் முகத்தை மூடியிருந்த இருண்ட திரையும் விலகிற்று. முகம் ஆனந்தத்தால் மலர்ந்தது. திடீரென்று மாறிய உணர்ச்சியின் வேகத்தை அடக்கமுடியாதவராக எழுந்து என் முன் பாய்ந்தார். அவர் என்ன செய்ய நினைத்தாரோ அறியேன். மின்னல் போன்ற பார்வையுடன் நான் அமூல்யனை நோக்கினேன். பிரம்பால் அடிபட்டவன்போல் அந்தச் சிறுவனின் முகம் வெளுத்துப் போயிற்று. என் பலத்தையெல்லாம் சேர்த்துக் கைகளால் ஸந்தீபைப் பிடித்து அப்பால் தள்ளினேன். அவர் தள்ளாடிக்கொண்டு திரும்பியதும் அவர் தலை அங்கிருந்த பளிங்கு மேஜையின் மேல் மோதியது. ஸந்தீப் கீழே விழுந்தார். சிறிது நேரம் பேசாமல் அப்படியே கிடந்தார். மிகவும் களைத்துப்போய் நான் நாற்காலியில் சாய்ந்தேன்.

அமூல்யனின் முகம் ஆனந்தம் குடிகொண்டு விளங்கிற்று. அவன் ஸந்தீபின் பக்கமே திரும்பாமல் என்னிடம் வந்து என் காலைத் தொட்டுக் கண்களில் ஒற்றிக்கொண்டான். பிறகு பேசாமல் என் எதிரில் தரையில் உட்கார்ந்துகொண்டான். 'குழந்தாய்! தம்பி! என் சூனியமான உலகில் உன்னுடைய இந்த மரியாதைதான் கடைசியாக மிஞ்சி நிற்கும் என் புண்ணிய பலன் என்று சொல்ல வேண்டும்.'' என் கண்களினின்றும் கண்ணீர் பெருகி ஓடிற்று. சேலைத் தலைப்பால் என் முகத்தை மூடிக்கொண்டு விம்மி விம்மி அழுதேன். என்னைத் தேற்றும் பொருட்டு அவன் பரிவுடன் என் காலைத் தொடும் ஒவ்வொரு சமயமும் என் கண்ணீர் பின்னும் அதிகமாகப் பெருகிற்று.

சற்றுப் பொறுத்துக் கொஞ்சம் சமாதானம் அடைந்தவளாக முகத்தினின்றும் கைகளை எடுத்தவுடன், மேஜையின் அருகே ஒன்றும் நடக்காததுபோல், ஸந்தீப், சவரன்களைச் சேர்த்து எடுத்துக்கொண்டிருக்கக் கண்டேன். நீர் நிறைந்த கண்களுடன் அமூல்யன் எழுந்து நாற்காலியில் உட்கார்ந்துகொண்டான்.

ஸந்தீப் வெகு சாதாரணமாக என்னைப் பார்த்துக் கொண்டே, "ஆறுயிரம் ரூபாய்கள் இருக்கின்றன" என்றார்.

"நமக்கு எதற்கு அவ்வளவு பணம், ஸந்தீப் பாபு? மூவாயிரத்து ஐந்நூறு ரூபாய் இருந்தால் நமக்குப் போதுமே!" என்றான் அமூல்யன்.

"இங்கே மட்டுந்தான் நமக்குப் பணம் தேவையா? எவ்வளவு கிடைத்தாலும் சரியாகத்தான் இருக்கும்" என்றார் ஸந்தீப்.

"சரிதான்; ஆனால் இனிமேல் உங்களுக்கு வேண்டியதைக் கொண்டுவருவது என் பொறுப்பு. நம் தேவைக்கு மேல் அதிகமாக இருக்கும் இரண்டாயிரத்து ஐந்நூறையும் அக்காவிடம் திருப்பிக் கொடுத்துவிடுங்கள்" என்றான் அமூல்யன்.

ஸந்தீப் என்னை நோக்கினார்.

"வேண்டாம்; வேண்டாம். இனிமேல் அந்தப் பணத்தை நான் தொடமாட்டேன். உங்களுக்கு வேண்டியதைச் செய்துகொள்ளுங்கள்" என்றேன்.

"ஸ்திரீயைப் போல் புருஷனால் எங்கேயாவது கொடுக்க முடியுமா?" என்று ஸந்தீப் அமூல்யனை நோக்கிக் கூறினார்.

"அவர்களைத் தேவதைகள் என்றுதான் சொல்ல வேண்டும்" என்றான் அமூல்யன் உத்சாகத்துடன்.

"புருஷர்கள் தங்கள் சக்தியை வேண்டுமானால் கொடுப்பார்கள். ஆனால் ஸ்திரீகளோ தம்மையே அளித்து விடுகிறார்கள். தங்கள் உயிருக்குள்ளிருந்து அவர்கள் ஒரு ஜீவனையே சிருஷ்டிக்கிறார்கள். அதைத் தம் உயிரினால் போஷிக்கிறார்கள். அவைதாம் உண்மையான தானங்கள்" என்றார் ஸந்தீப். பிறகு என்னை நோக்கி, "ராணி, நீங்கள் கொடுத்தது கேவலம் பணமாக இருந்தால் நான் அதைத் தொட்டிருக்கவே மாட்டேன். ஆனால் உங்கள் உயிரைக் காட்டிலும் அருமையான ஒன்றை நீங்கள் அளித்திருக்கிறீர்கள்" என்றார்.

மனிதனுக்குள் எப்போதும் இரு மனிதர்கள் குடி கொண்டிருக்க வேண்டும். என்னுள் இருந்த ஒருத்திக்கு ஸந்தீப் என்னை ஏமாற்றிக்கொண்டிருக்கிறார் என்பதைச் சுலபமாக அறிய முடிந்தது. மற்றொருத்திக்கோ ஸந்தீப் அப்படி ஏமாற்றுவதே திருப்தியாக இருந்தது. ஸந்தீபுக்குச் சக்தி இருந்தது. ஆனால் நேர்மை இல்லை. உயிரை அளிக்கக்கூடிய அவர் சக்தி அதையே மீண்டும் கொன்று விடுவதாக இருந்தது. எடுக்க எடுக்கக் குறையாத அம்புகளையுடைய தெய்விக அம்பறுத்தூணியை அவர் பெற்றிருந்தார். ஆனால் அதில் இருந்த அம்புகள் அசுரர்களுடையனவாக இருந்தன.

சவரன்களை யெல்லாம் சேர்த்து முடிந்துகொள்ள ஸந்தீபின் கைச்சவுக்கம் எட்டவில்லை. "ராணி, வேறு சவுக்கம் ஒன்று தருகிறீர்களா?" என்று கேட்டார்.

நான் என்னுடையதைக் கொடுத்ததும் அவர் அதை வெகு மரியாதையுடன் வாங்கிக் கண்களில் ஒற்றிக் கொண்டார். பிறகு திடீரென்று என் காலடியில் விழுந்து பணிந்தார். "ராணி, உங்களை நமஸ்கரிப்பதன் பொருட்டு அருகில் நெருங்கினேன். ஆனால் நீங்கள் என்னை வெறுத்துத் தள்ளிவிட்டீர்கள்; உங்கள் வெறுப்பையும் பிரசாதமாகவே நான் ஏற்றுக்கொள்ளுகிறேன். அதையும் தலையால் தாங்கிப் போற்றுகிறேன்" என்று கூறித் தம் தலையில் அடிபட்ட இடத்தைக் காட்டினார்.

அவரை நான் தவறாக நினைத்துவிட்டேனோ? என் கால்களை நோக்கித்தான் அவர் தம் கைகளை நீட்டிக் கொண்டு வந்தாரா? அவர் கண்களிலும் முகத்திலும் விளங்கிய காம வேட்கையை அமூல்யனும் பார்த்தானே! ஆனால் தம் ஸ்துதியை எந்தச் சுருதியில் இசைக்கவேண்டும் என்பதில் ஸந்தீப் மகா நிபுணர். அவருடன் என்னால் வாதாட முடியாது. நான் உண்மையை அறியும் சக்தியை இழந்துவிடுகிறேன். பங்கி அடித்தவர் கண்கள்போல் என் கண்களும் பார்வை மங்கியனவாக ஆகிவிடுகின்றன. கடைசியில் நான் கொடுத்த ஓர் அடிக்கு இரட்டிப்பாகச் சேர்த்து அவர் எனக்குத் திருப்பி அளித்துவிட்டார். அவர் தலையில் பட்ட காயம் என் உள்ளத்தில் காயத்தை உண்

டாக்கிவிட்டது. ஸந்தீப் நமஸ்கரித்தவுடன் என் திருட்டு எனக்கு உயர்வாகத் தோன்றிற்று. மேஜைமேல் இருந்த சவரன்கள் என் மனத்தில் இருந்த பயத்தையும் அவமானத்தையும் அலக்ஷ்யம் செய்து பரிகசிப்பவைபோல் தோன்றின.

என்னைப்போல் அமூல்யனின் மனமும் மாறிவிட்டது. ஸந்தீபினிடம் ஒரு நிமிஷம் குறைந்திருந்த அவன் பக்தி மீண்டும் பெருகிற்று. என்னையும் ஸந்தீபையும் அவன் பழையபடி பூஜிக்கத் தொடங்கினான். விடியற்காலையில் பிரகாசிக்கும் சுக்கிரன்போல் கபடமற்ற நம்பிக்கை அவன் கண்களில் ஒளிவிட்டுப் பிரகாசித்தது.

நானும் பூஜைசெய்து பதில் பூஜையையும் ஏற்றுக் கொண்டவுடன் நான் செய்த பாவம் மிகவும் உயர்வாகத் தோன்றிற்று. என் முகத்தை நோக்கியவுடன் அமூல்யன் கைகளைக் கூப்பிக்கொண்டு, 'வந்தே மாதரம்' என்று கூவினான். இத்தகைய ஒரு பிரேமை என்னைச் சுற்றி எப்போதும் சூழ்ந்திருப்பதை நான் எதிர்பார்க்க முடியுமா? ஆயினும் என் சுய மரியாதையைக் காப்பாற்றிக் கொள்ளும் வழி இது ஒன்றுதான் என்ற நிலைமைக்கு வந்துவிட்டேன்.

இனிமேல் நான் என் படுக்கை அறையில் எப்படி நுழைவேன்? என் கட்டிலே, 'கிட்ட நெருங்கவேண்டாம்' என்று தடுப்பதுபோல் இருக்கிறது. இரும்புப் பெட்டி என்னைக் கண்டு முகத்தைச் சுளிப்பதுபோல் தோன்றுகிறது. இவற்றையெல்லாம் பார்க்க முடியாமல் எங்கேயாவது போய்விடுதல் நலம் என்று நினைக்கிறேன். ஸந்தீப் புகழுவதைக் கேட்பதற்காக அவரிடம் செல்ல வேண்டும் என்ற விருப்பம் உண்டாகிறது. என்னைச் சுற்றிலும் சூழ்ந்திருக்கும் அவமானத்தில் சற்று நான் தலைதூக்கி நிற்கும் இடம் அது ஒன்றுதான். ஆகவே இரவும் பகலும் அதை விடாமல் பற்றிக்கொள்ள விரும்புகிறது என் மனம். அதை விட்டு எந்தப் பக்கம் திரும்பினாலும் ஒரே சூனியமாகத்தான் இருக்கிறது.

புகழ்ச்சி! ஓயாத புகழ்ச்சி! இதையே என் மனம் வேண்டுகிறது. ஒரு நிமிஷமாவது அந்த மதுக்கிண்ணம் வெறும் கிண்ணமாக இருந்தால் என் உயிர் நில்லாது.

ஆகவே என் உயிருக்கு விலையாக ஸந்தீபைத்தான் நான் இன்று விரும்புகிறேன்.

இப்போதெல்லாம் என் கணவர் சாப்பிடும் போது நான் அருகில் உட்காருவதில்லை. அப்படி உட்காராமல் இருப்பதும் எனக்கு மிக்க அவமானமாகத் தோன்றவே என்னால் ஒரு விதமும் செய்ய முடியாமல் போயிற்று. ஆகவே ஒருவர் முகத்தை ஒருவர் பார்க்க முடியாதபடி உட்கார்ந்துகொள்வேன். அன்று நான் உட்கார்ந்திருந்தபோதுதான் 'என் சிறிய ஓர்ப்படி அங்கே வந்து சேர்ந்தாள்.

அவள் என் கணவரைப் பார்த்து, "இந்தக் கடுதாசி களை எல்லாம் பற்றி உனக்குப் பரிகாசமாகத்தான் இருக் கும். ஆனால் எனக்கு என்னவோ வெகு பயமாக இருக் கிறது. எங்களுக்குக் கொடுத்த அந்தப் பணத்தைக் கல்கத்தா பாங்கிக்கு அனுப்பிவிட்டாயா?" என்று கேட்டாள்.

"இல்லை; அதற்கு இன்னும் ஒழியவில்லை" என்றார் என் கணவர்.

"அப்பா, நீ ஒன்றும் கவலையில்லாமல் இருக்கிறாய். கொஞ்சம் ஜாக்கிரதையாக இருந்தால்தான் நல்லது."

"அதுதான் என் பீரோ இருக்கும் அறையில் இரும் புப் பெட்டியில் பத்திரமாக இருக்கிறதே!" என்று என் கணவர் பயத்தை அகற்றும் ஒரு புன்னகையுடன் கூறினார்.

"அவர்கள் அங்கே புகுந்து திருடமாட்டார்கள் என்று சொல்ல முடியுமா? என்னவோ, யார் கண்டார்கள்?"

"அவர்கள் அவ்வளவு தூரத்துக்குப் போவதென்றால் பிறகு உங்களைக்கூடத் தூக்கிச் சென்றுவிடலாமே!"

"அப்பா, உனக்கு அந்தப் பயம் வேண்டாம். என்னை யார் தூக்கிக்கொண்டு போவார்கள்? உன் அறையில்தான் அவர்களுக்குக் கண். அது போகட்டும். பணத்தை வீட்டில் வைப்பது சரியல்ல."

"சர்க்கார் வரிப் பணத்தைக் கல்கத்தாவுக்குச் சில தினங்களில் கொண்டு போவார்கள். அந்தக் காவலில் இந்தப் பணத்தையும் அனுப்பிவிடுகிறேன்."

"அப்படியானால் சரி. உனக்குத்தான் மறதி அதிகமாயிற்றே. அதை அனுப்ப மறந்துவிடாதே" என்றாள் என் ஓர்ப்படி.

"என் அறையில் இருக்கும்போது பணம் கெட்டுப் போனால் உங்களுக்கு அதனால் நஷ்டம் ஒன்றுமில்லை" என்றார் என் கணவர்.

"அப்பா, நீ இப்படிப் பேசினால் எனக்குக் கோபம் வரும். உன்னுடையது வேறு, என்னுடையது வேறு என்று நான் எப்போதாவது நினைத்தது உண்டா? உன் பணம் கெட்டுப் போனால் அதில் எனக்கு வருத்தம் இல்லையா? என்னிடம் இருக்கும் யாவும் போனாலும் பக்தியிலும் அன்பிலும் மற்றொரு லக்ஷ்மணனைப்போல் விளங்கும் ஒரு சகோதரனின் அருமையை நான் அறியாமல் போய்விடுவேனா? பெரியவனைப்போல், தெய்வங்களை வைத்துக்கொண்டு பொழுது போக்க எனக்குத் தெரியாது. ஆனால் இறைவன் எனக்கு அளித்திருக்கும் தெய்வம் எல்லாத் தெய்வங்களிலும் மேலானது" என்றாள்.

பிறகு என்னை நோக்கி, "என்ன அம்மா, சின்ன ராணி, நீ என்ன பொம்மையா? ஒரு வார்த்தைகூடப் பேசவில்லையே!" என்று கூறிவிட்டு மறுபடியும் என் கணவரிடம், "உனக்குத் தெரியுமா? நான் ஏதோ உன்னை முகஸ்துதி செய்கிறேன் என்று சின்ன ராணி நினைத்துக் கொண்டிருக்கிறாள். முகஸ்துதி அவசியம் என்றால் நான் அதையும் செய்யத் தயங்கமாட்டேன். ஆனால் அது ஒன்றும் உனக்கு அவசியமில்லை என்பது எனக்குத் தெரியாதா?" என்றாள்.

இவ்வாறு என் ஓர்ப்படி பேசிக்கொண்டே இருந்தாள். அடிக்கடி இலையில் பரிமாறியிருப்பவற்றுள் பிரத்தியேகமாகத் தயாரித்திருக்கும் பண்டங்களைக் காட்டிச் சாப்பிடும்படி என் கணவரை உபசரித்துக்கொண்டும்

இருந்தாள். எனக்கு ஒரே கலவரமாக இருந்தது. நெருக்கடியான நிலைமை வேகமாக நெருங்கிக்கொண் டிருந்தது. அந்தப் பணத்துக்குப் பதில் பணம் எப்படியாவது கொண்டு வந்து வைக்க வேண்டும். அதற்கு என்ன செய்வது என்று நான் யோசித்துக்கொண் டிருந்தபோது ஓயாமல் சளசளவென்று பேசிக்கொண் டிருந்த என் ஓர்ப்படியின் பேச்சைக் கேட்க எனக்குச் சகிக்கவில்லை.

எல்லாவற்றுக்கும் மேலான கஷ்டம் என்னவென்றால் அவள் கூர்மையான கண்கள் ஒன்றையும் பார்க்கத் தவறுவதில்லை. இடையிடையே என்னையும் அவள் கடைக்கண்ணால் நோக்கிக்கொண் டிருந்தாள். என் முகத்திலிருந்து அவள் என்ன தெரிந்துகொண்டாளோ? ஆனால் அங்கே எல்லாம் வெட்ட வெளிச்சமாகத் தெரிவது போலவே எனக்குத் தோன்றிற்று.

திடீரென்று நான் ஒரு துணிச்சலான காரியம் செய்தேன். வேடிக்கையாகச் சிரிப்பதுபோல் சிரித்துக் கொண்டே, "மன்னி, உங்கள் சந்தேகம் எல்லாம் என் மேல்தான் இருக்கிறது. நீங்கள் திருடன் என்று பயப்படுவதெல்லாம் வேஷம்" என்றேன்.

என் ஓர்ப்படி விஷமமாகப் புன்னகை புரிந்தாள். "நீ கூறுவது சரிதான். எல்லாத் திருட்டிலும் பெண் பிள்ளையின் திருட்டுத்தான் மிகவும் கெட்டது. ஆனால் உன்னால் என்னை ஏமாற்ற முடியுமா? என்னை ஏமாற்றுவதற்கு நான் என்ன புருஷனா?" என்றாள்.

"என்னிடம் அவ்வளவு பயமாக இருந்தால் என்னிடமுள்ள யாவற்றையும் நான் உங்களிடம் ஒப்பித்துவிடுகிறேன். என்றால் உங்களுக்கு நஷ்டம் ஏற்பட்டால் அதற்குப் பதிலாக அவைகளை நீங்கள் எடுத்துக்கொள்ளலாம்" என்று நான் பதில் அளித்தேன்.

"பார், சின்ன ராணி கூறுவதை" என்றாள் அவள், என் கணவரை நோக்கிச் சிரித்துக்கொண்டே; "இந்த உலகத்தில் ஆகட்டும், மறு உலகத்தில் ஆகட்டும். ஈடு கட்ட முடியாத நஷ்டங்கள் இல்லையா? அது தெரியவில்லையே அவளுக்கு!"

என் கணவர் எங்கள் பேச்சில் கலந்துகொள்ளவில்லை. சாப்பிட்டு முடிந்ததும் அவர் எழுந்து போய் விட்டார். இப்போதெல்லாம் அவர் சாப்பிட்ட பிறகு சிறிது நேரம் அங்கேயே இருந்து சிரம பரிகாரம் செய்து கொள்வதில்லை.

என் நகைகள் பெரும்பாலும் கஜானுவில் காஷியர் பொறுப்பில் வைக்கப்பட்டிருந்தன. எனினும் என்னிடம் இருந்த நகைகளே முப்பதினுயிரம் நாற்பதினுயிரம் பெறும்படியானவையாக இருக்கும். என் நகைப்பெட்டியை எடுத்துக்கொண்டு போய் என் ஓர்ப்படியின் முன் திறந்து காட்டி, "மன்னி, இந்தப் பெட்டியை நீங்கள் வைத்துக் கொண்டிருங்கள். இனிமேல் கவலையில்லாமல் இருக்க லாம்" என்றேன்.

'இதென்னடா தொந்தரவு' என்பது போல் அவள் கேலியாக முகத்தைக் கடுத்துக்கொண்டாள். "சின்ன ராணி, என்ன வேடிக்கை! நீ எங்கே திருடிவிடுவாயோ என்ற பயத்தினுல் நான் இராத் தூக்கம் இல்லாமல் இருப்பதாக நினைத்துக்கொண்டாயா?" என்ருள்.

"அப்படி வாஸ்தவமாக என்னைப்பற்றிப் பயம் இருந்தால்தான் என்ன பிசகு? யார் யாரைக் கண்டார் கள், இவ்வுலகில்?" என்றேன்.

"என்னிடம் நம்பிக்கை வைத்து, எனக்கும் நம்பிக்கை கற்றுக்கொடுக்க வேண்டும் என்பது உன் விருப்பமா? என் நகைகளையே என்ன செய்வதென்று தெரியாமல் நான் கஷ் டப்படுகிறேன். இந்த அழகில் உன் நகைகளை வேறு வைத் துக் காப்பாற்றவேண்டுமா? சுற்றிலும் ஆட்கள் நின்று பார்த்துக்கொண் டிருக்கிருர்கள். எடுத்துக்கொண்டு போய் உள்ளே வை அம்மா!" என்ருள்.

நான் அங்கிருந்து கூடத்துக்குச் சென்று அமூல்ய னுக்குச் சொல்லியனுப்பினேன். அவனுடன் ஸந்தீபும் வந்தார். எனக்கு ஒரே அவசரம். அவரிடம், "அமூல்ய னிடம் ஒரு வார்த்தை பேசவேண்டும். நீங்கள் சற்று..." என்று கூறினேன்.

ஸந்தீப் வறண்ட புன்னகையுடன், 'அமூல்யனும் நானும் உங்கள் கண்களுக்கு வெவ்வேருகத் தோன்று

கிறேமா? அவனை என்னிடமிருந்து பிரித்துவிட வேண்டும் என்று நீங்கள் முயன்றாலும் முடியாது'' என்றார்.

நான் ஒன்றும் பதில் கூறாமல் அவர் போவதை எதிர் பார்த்து நின்றேன்.

''அப்படியே இருக்கட்டும். அமூல்யனிடம் நீங்கள் முக்கியமாகச் சொல்லவேண்டியதைச் சொல்லிக்கொள்ளுங்கள். ஆனால் நீங்கள் தனியாக என்னிடமும் அப்படிப் பேசவேண்டும். இல்லாவிட்டால் நான் தோற்றவன் ஆவேன். என் பங்கு எப்போதும் அதிகமாகத்தான் இருக்கவேண்டும். கடவுளிடம் எப்போதும் எனக்குள்ள சண்டையே இதுதான். நான் தோற்றுப் போவதற்கு முன் என் விதியையே வென்றுவிடுவேன்.''

இவ்வாறு கூறிவிட்டு அமூல்யனைச் சுட்டுவிடுபவர் போல் பார்த்துக்கொண்டே அவர் அறையை விட்டுச் சென்றார்.

''அமூல்யா, தம்பீ, நீ என் பொருட்டு ஒரு காரியம் செய்யவேண்டும்'' என்றேன்.

''அக்கா, நீங்கள் என்ன செய்யச் சொன்னாலும் அதற்காக என் உயிரையே கொடுக்கவும் சித்தமாக இருக்கிறேன்'' என்றான் அமூல்யன்.

என் சால்வைக்குள்ளிருந்து நகைப் பெட்டியை வெளியே எடுத்துவைத்தேன். ''இவைகளை விற்றோ அடகு வைத்தோ சீக்கிரம் ஆறாயிரம் ரூபாய் கொண்டுவர வேண்டும்'' என்றேன்.

''இல்லை, அது கூடாது. இந்த நகைகள் அப்படியே இருக்கட்டும். நான் அந்த ஆறாயிரம் ரூபாயையும் கொண்டு வருகிறேன்'' என்றான் அமூல்யன்.

''சரிதான், பிதற்றாதே'' என்றேன் பொறுமையற்றவளாக; ''பிதற்றலுக்கெல்லாம் இது சமயம் அல்ல. இந்தப் பெட்டியை எடுத்துக்கொண்டு இன்று இரவு ரெயிலில் கல்கத்தா புறப்பட்டுப் போ. பணத்தை வாங்கிக் கொண்டு நாளைக்கு மறுநாள் இங்கே வந்துவிடு.''

பெட்டியிலிருந்து அமூல்யன் ஒரு வைர மாலையை எடுத்து வெளிச்சத்தில் தூக்கிப் பார்த்துவிட்டு மறுபடியும் குன்றிய முகத்துடன் அதைப் பெட்டியில் வைத்தான்.

"இவைகளுக்குச் சரியான விலை கிடைக்காதென்று எனக்குத் தெரியும். அதனால்தான் முப்பதினாயிரம் ரூபாய் பெறுமான நகைகளைக் கொடுக்கிறேன். எல்லாம் போனாலும் போகட்டும். அந்த ஆறாயிரம் ரூபாய் மட்டும் எப்படியாவது கிடைத்தால் போதும்" என்றேன்.

"உங்களுக்குத் தெரியுமா? நீங்கள் கொடுத்த அந்தப் பண விஷயமாக எனக்கும் ஸந்தீப் பாபுவுக்கும் சச்சரவு நேர்ந்துவிட்டது. எனக்கு உண்டான அவமானம் இவ்வளவு அவ்வளவு என்று சொல்ல முடியாது. ஆனால், 'தேசத்துக்காக நம்முடைய மானத்தைக்கூட விடவேண்டும்' என்று ஸந்தீப் பாபு சொன்னார். இருக்கலாம். ஆனால் இது அப்படித் தோன்றவில்லை. தேசத்துக்காகச் சாவதில் எனக்குப் பயம் இல்லை. கொல்லுவதற்கும் பயம் இல்லை. அவ்வளவு தூரம் வரைக்கும் எனக்குச் சக்தி இருக்கிறது. ஆனால் உங்களிடமிருந்து பணத்தை வாங்கிக்கொள்ளும் அவமானத்தை எப்படிச் சகிப்பது? அதில் ஸந்தீப் பாபு எனக்குமேல் போய்விட்டார். அவருக்கு இதில் எல்லாம் வருத்தமோ கஷ்டமோ இல்லை. 'பணம் யார் பெட்டியில் இருக்கிறதோ அவர்களுக்குத்தான் சொந்தம் என்று நினைக்கும் மனோபாவத்தை அகற்ற வேண்டும். அப்படிச் செய்ய முடியவில்லை என்றால் பிறகு வந்தே மாதரத்தின் மாய சக்தி என்ன?' என்று கூறுகிறார்."

இவ்வாறு பேசிக்கொண்டே வந்தபோது அமூல்யனின் உத்சாகம் அதிகரித்தது. அவன் கூறுவதை நான் கேட்டுக்கொண்டிருந்தால் எப்போதும் இப்படித்தான் அவன் உத்சாகம் ஓங்கும். "ஆத்மாவை ஒருவரும் கொல்ல முடியாது என்று கீதையில் சொல்லியிருக்கிறது. கொல்வது என்பது வெறும் வார்த்தை. அப்படியேதான் பணத்தை எடுப்பதும். பணம் யாருடையது? அதை ஒருவரும் சிருஷ்டிக்கவில்லை. ஆத்மாவுக்கும் பணத்துக்கும் சம்பந்தம் இல்லை. இறக்கும்போது ஒருவரும் அதைக் கூடக் கொண்டுபோக முடியாது. அது இன்று என்னுடை

யது; நாளை என் பிள்ளையினுடையது, மறுநாள் கடன் கொடுத்தவனுடையது என்று மாறிக்கொண்டே இருக்கும். இப்படி அது ஒருவருக்கும் சொந்தமல்ல என்று இருப்பதனால் ஒன்றுக்கும் உதவாத ஒருவன் கையில் அந்தப் பணம் இருப்பதைவிடத் தம் சொந்த உபயோகத்துக்கு என்று நம் தேசபக்தர்கள் எடுத்துக்கொண்டால் என்ன தவறு?'' என்கிறான் அமூல்யன்.

ஸந்தீபின் வார்த்தைகளையே இந்தச் சிறுவனும் கூறுவதைக் கேட்கையில் என் உடம்பு நடுங்குகிறது. பாம்பாட்டிகளாக இருப்பவர்கள் பாம்புகளுடன் விளையாடட்டும். தீங்கு வருவதாக இருந்தாலும் அவர்கள் அதற்குத் தயாராகவே இருப்பார்கள். ஆனால் இந்தக் கள்ளங் கபடற்ற சிறுவர்கள்! உலகம் முழுவதும் இவர்களைக் காப்பாற்றச் சித்தமாக இருக்குமே! பாம்பின் இயல்பை அறியாமல் இந்தச் சிறுவர்கள் அதனுடன் விளையாடத் தொடங்குகிறார்கள் அவர்கள் சற்றும் சந்தேகம் இல்லாமல் சிரித்த முகத்துடன் அதன் விஷப் பற்களின் அருகே கைகளைக் கொண்டுபோகும்போதுதான் அந்தப் பாம்பு எவ்வளவு கொடியது என்பது நமக்கு விளங்குகிறது. ஸந்தீப் சந்தேகித்தது சரிதான். நான் அவர் கைகளால் இறக்கச் சம்மதித்தாலும் இச்சிறுவன் அவ்வாறு ஆக விடமாட்டேன். அவனை அவரிடமிருந்து காப்பாற்றுவேன்.

''ஆனால் தேசபக்தர்களின் உபயோகத்துக்காக இந்தப் பணம் வேண்டும் என்கிறாயா?'' என்று புன்னகையுடன் கேட்டேன்.

''ஆம், சந்தேகம் இல்லாமல்!'' என்றான் அமூல்யன் பெருமிதத்துடன்; ''அவர்கள் நம் அரசர்கள் அல்லவா? ஏழைமை அல்லவா அவர்களுடைய பெருமையைக் குறைக்கிறது! ஸந்தீப் பாபு முதல் வகுப்பு வண்டியில்தான் பிரயாணம் செய்ய வேண்டும் என்று நாங்கள் எப்போதும் வற்புறுத்துவது வழக்கமாயிற்றே! உங்களுக்குத் தெரியுமா? அவரும் இந்த ராஜமரியாதைகளை ஏற்றுக்கொள்ளத் தயங்கமாட்டார். ஆனால் அது நம்முடைய பெருமைக்காகவேயன்றி அவருக்காக அல்ல. உலகத்தை ஆள்பவர்களுடைய பெரிய ஆயுதம், அவர்கள் ஆடம்பரத்

தின் மகிமைதான் என்று ஸந்தீப்பாபு சொல்லியிருக்கிறார். ஏழைமை வாழ்க்கை நடத்துவதைப் பெரிய தபசு என்று சொல்ல முடியாது; தற்கொலை என்றே சொல்ல வேண்டும்.''

இந்தச் சமயத்தில் ஸந்தீப் சப்தம் செய்யாமல் உள்ளே வந்தார். நான் வேகமாக நகைப் பெட்டியைச் சால்வையினால் மறைத்தேன்.

"இன்னும் அந்த முக்கியமான பேச்சு முடிய வில்லையா?'' என்றார் ஸந்தீப் குத்தலாக.

"முடிந்துவிட்டதே! அவ்வளவு ஒன்றும் முக்கிய மல்ல'' என்றான் அமூல்யன் பணிவான குரலில்.

"இல்லை, அமூல்யா, நாம் இன்னும் பேசியாக வில்லையே!'' என்று நான் கூறினேன்.

"அப்படியானால் மறுபடியும் ஸந்தீப் போகவேண்டி டியதுதான் போலும்!'' என்றார் ஸந்தீப்.

"ஆம், தயவுசெய்து......''

"ஸந்தீப் திரும்பி வருவதைப்பற்றி......''

"இன்று முடியாது; எனக்கு அவகாசம் இல்லை...'' என்றேன்,

"அப்படியா?'' என்றார் ஸந்தீப். அவர் கண்கள் கோப உணர்ச்சியுடன் பிரகாசித்தன. "முக்கியமான பேச்சுக் களைத் தவிர வேறொன்றுக்கும் நேரம் இல்லை அல்லவா!''

பொறாமை! பலமுள்ள மனிதன் எப்போது துர்ப் பலத்தைக் காட்டுகிறானோ அப்போது அபலைகளான ஸ்திரீகள் வெற்றிமுழக்கம் செய்யாமல் இருக்க முடியுமா? ஆகவே, "எனக்கு நேரம் இல்லை'' என்று மறுபடியும் தீர்மானமாகக் கூறினேன்.

ஸந்தீப் வெகு கோபத்துடன் சென்றார். மிகவும் கவலையுடன் அமூல்யன், "அக்கா, ஸந்தீப் பாபு கோபித் துக்கொண்டிருக்கிறார்'' என்றான்.

"அவருக்குக் கோபித்துக்கொள்வதற்கு அதி காரமோ காரணமோ ஏது?'' என்று நான் கொஞ்சம்

கோபத்துடன் சொன்னேன்; "அமூல்யா, ஒரு விஷயம்: நான் கொஞ்சம் உனக்கு எச்சரிக்கை செய்யவேண்டும். என் நகைகளை விற்பதைப்பற்றி ஸந்தீப் பாபுவிடம் நீ சத்தியமாக ஒன்றும் சொல்லக்கூடாது" என்றேன்.

"இல்லை; ஒன்றும் சொல்லமாட்டேன்" என்றான் அமூல்யன்.

"அப்படியானால் இனிமேல் தாமதிக்காதே. இன்று இரவு ரெயிலிலேயே புறப்பட்டுப் போ."

அமூல்யனும் நானும் சேர்ந்து வெளியே வந்தோம். ஸந்தீப் வெளித் தாழ்வாரத்தில் நின்றுகொண் டிருந்தார். அமூல்யனை வழியில் மடக்கிக்கொள்ள அவர் காத்திருந் தார் என்று தெரிந்தது. அவ்வாறு நேரா வண்ணம் தடுப் பதற்காகவே நான் அவருடன் பேசும்படி ஆயிற்று.

"ஸந்தீப் பாபு, என்னிடம் என்ன சொல்ல வேண் டும் என்று விரும்பினீர்கள்?" என்று கேட்டேன்.

"ஒன்றும் முக்கியமான சமாசாரம் இல்லை. சாதார ணப் பேச்சுத்தான். உங்களுக்கு நேரம் இல்லை என்றால்..."

"இரண்டு வார்த்தை வேண்டுமானால் பேச முடியும்" என்றேன்.

இதற்குள் அமூல்யன் போய்விட்டான். நாங்கள் மறுபடியும் அறைக்குள் சென்றதும் ஸந்தீப், "அமூல்யன் எடுத்துப் போனானே அது என்ன பெட்டி?" என்று கேட் டார்.

அது அவர் கண்களில் படாமல் போகவில்லை!

"உங்களிடம் சொல்ல முடியும் என்றால் உங்கள் எதிரிலேயே அதை அவனிடம் கொடுத்திருப்பேனே?" என்றேன்.

"ஆனால் அமூல்யன் என்னிடம் சொல்லமாட்டான் என்று நினைக்கிறீர்களா?"

"ஆம்."

அவரால் இனியும் தம் கோபத்தை அடக்க முடிய வில்லை. "என்னையே அடக்கிவிடலாம் என்று நினைக்கி

றீர்களா? அது ஒரு நாளும் முடியாது. அமூல்யனை என் காலின்கீழ் வைத்துத் தேய்த்து நசுக்கவேண்டும் என்று நான் இச்சை கொண்டால் அவன் அப்படியே சந்தோஷமாக இறப்பான். நான் உயிருடன் இருக்கும் அளவும் நீங்கள் அவனை உங்கள் அடி பணியும்படி செய்ய நான் விடமாட்டேன்'' என்று கோபத்துடன் இரைந்தார்.

ஆகா! தூர்ப்பலமே! கடைசியில் என் எதிரில் தம் பலமின்மையை ஸந்தீப் உணர்ந்துகொண்டார். அதனால் தான் திடீரென்று அடக்கமுடியாமல் இவ்வளவு கோபம். என்னிடமுள்ள சக்தியை வெறும் பலத்தினால் தாக்க முடியாது என்பதை அவர் கண்டுகொண்டார். அவருடைய மிக உறுதியான கோட்டைகளை ஒரு பார்வையினால் நான் தகர்த்து எறிந்துவிட முடியும். ஆகவே அவருக்கு இந்த வாய் ஜம்பமெல்லாம் வேண்டியிருந்தது. நான் இகழ்ச்சியுடன் மௌனமாகப் புன்னகை புரிந்தேன் கடைசியாக நான் அவருக்கு மேல் போய்விட்டேன். அந்த நிலையை நான் விடக்கூடாது இனிமேல் ஒருபோதும் அதை விட்டுக் கீழே இறங்கிவிடலாகாது. எனக்கு நேர்ந்திருக்கும் அவமானங்களுக்கெல்லாம் ஈடாக இந்தப் பெருமையாவது எனக்கு மிஞ்சட்டும்.

''அது உங்கள் நகைப்பெட்டி என்று எனக்குத் தெரியும்'' என்றார் ஸந்தீப் சற்றுப் பொறுத்து.

''உங்கள் இஷ்டப்படி ஊகித்துக்கொள்ளுங்கள். என் வாயால் ஒன்றும் சொல்லமாட்டேன்.''

''ஆனால் என்னைக் காட்டிலும் அமூல்யனை நீங்கள் அதிகம் நம்புகிறீர்களா? அந்தச் சிறுவன் என் நிழலுக்கும் நிழல்; என் பேச்சின் எதிரொலிக்கும் எதிரொலி. நான் கூட இல்லாவிட்டால் அவன் ஒன்றுக்கும் பிரயோஜனப்படான் என்பது உங்களுக்குத் தெரியுமா?!''

''அவன் உங்களுடைய எதிரொலியாக இல்லாத சமயத்தில் உண்மையான அமூல்யனாக இருக்கிறான். அப்போதுதான் உங்கள் எதிரொலியைக் காட்டிலும் அவனை நான் அதிகம் நம்புகிறேன்.''

''அன்னையின் வழிபாட்டுக்காக உங்கள் நகைகள் யாவற்றையும் கொடுத்துவிடுவதாக வாக்களித்ததை நீங்

கள் மறந்துபோகக் கூடாது. உண்மையாக நீங்கள் ஏற்கனவே அவைகளைக் கொடுத்தாயிற்று.''

''என்னிடம் இருக்கும் நகைகளை அளிப்பதற்குத் தடை இல்லை. ஆனால் என்னிடமிருந்து திருட்டுப்போன நகைகளை நான் எப்படி அளிக்க முடியும்?''

''இதோ பாருங்கள்; இப்படி என்னை ஏமாற்றப் பார்ப்பதில் ஒன்றும் பயனில்லை. இது வேலை செய்ய வேண்டிய சமயம். அது முதலில் முடியட்டும். பிறகு உங்கள் திருப்தி கொண்டமட்டும் உங்கள் ஸ்திரீ ஜாலங்களைக் காட்டலாம். நானும் வேண்டுமானால் அதற்கு உதவி செய்கிறேன்.''

என் கணவருடைய பணத்தைத் திருடி ஸந்தீபிடம் கொடுத்த நிமிஷமே எங்கள் நட்பில் இருந்த கவர்ச்சி அடியோடு அற்றுப் போயிற்று. என்னை இழிவாக்கிக்கொண்டதில் என் மதிப்பையெல்லாம் நான் இழந்ததும் அன்றி ஸந்தீபும் தம் முழுச் சக்தியையும் காட்டுவதற்கு வசதியற்றவர் ஆனார். கைப்பிடிக்குள் அடங்கிவிட்ட வஸ்துவின் மேல் அம்பு எய்ய முடியாது. ஆதலால் ஸந்தீப் இப்போது என் கண்களுக்கு லக்ஷ்ய புருஷராகத் தோன்றவில்லை. அவர் பேச்சில் கோபமும் தாபமும் கலந்திருந்தன.

ஸந்தீப் தம் பிரகாசமான கண்களால் என் முகத்தை நோக்கினார். நடுப் பகலில் தகதகவென்று விளங்கும் அவர் கண்கள் ஆவல் குடிகொண்ட ஒளியுடன் விளங்கின. இரண்டொரு தடவை அவர் செய்கையை நோக்கியபோது உட்கார்ந்த இடத்தை விட்டு எழுந்து போவாரோ அல்லது நேரே என்னை அணுகிவிடுவாரோ என்று தோன்றிற்று. என் உடல் முழுவதும் எங்கேயோ மிதப்பதுபோல் தோன்றிற்று. என் நரம்புகள் துடித்தன. உஷ்ண ரத்தம் மண்டைக்கு ஏறுவதுபோல் இருந்தது. இங்கே இனிமேல் சிறிது நேரம் இருந்தால் பிறகு இவ்விடத்தை விட்டுப் போகவே முடியாமல் ஆகிவிடும் என்றும் தோன்றிற்று. மிக்க சிரமத்துடன் நாற்காலியினின்றும் எழுந்து கதவின் அருகே விரைந்து சென்றேன்.

''எங்கே ஓடிப்போகிறீர்கள் ராணி?'' என்று ஸந்தீப் ஒரே பரபரப்புடன் கேட்டார். அடுத்த நிமிஷம் என்னைப்

பிடிக்க ஒரே பாய்ச்சலில் நாற்காலியினின்றும் கிளம்பினர். ஆனால் வெளியே காலடிச் சப்தம் கேட்கவே வேகமாகத் திரும்பி மீண்டும் நாற்காலியில் உட்கார்ந்து கொண்டார். நான் ஒரு புஸ்தக அலமாரியின் அருகில் சென்று புஸ்தகங்களின் பெயர்களைப் பார்த்துக்கொண்டு நின்றேன். என் கணவர் உள்ளே நுழைந்தார்.

"நிகில், இந்தப் புஸ்தகங்களில் பிரௌனிங்கின் கவிதைகளை ஏன் காணவில்லை? நம் காலேஜ் கிளப்பைப்பற்றி இப்போதுதான் ராணியிடம் சொல்லிக்கொண்டிருந்தேன். பிரௌனிங்கில் இருந்த ஒரு கவியின் மொழிபெயர்ப்பைப்பற்றி நம் இருவருக்கும் சச்சரவு ஏற்பட்டதே, உனக்கு நினைவு இருக்கிறதா, இல்லையா?

"நமது பாஷையில் ஏதோ ஒரு விதமாக நான் அதை மொழிபெயர்த்தேன். ஆனால் நம் ஜனங்களுக்கு என்றும் இன்பமாக இருக்கும்படி அது அமையவில்லை. ஒரு காலத்தில் நானே ஒரு கவியாகிவிடுவேன் என்று உண்மையில் நினைத்தேன். தெய்வாதீனமாக, அந்த ஆபத்திலிருந்து தப்பினேன். தக்ஷிணசரணை உனக்கு ஞாபகம் இருக்கிறதா? அவன் ஸால்ட் இன்ஸ்பெக்டர் ஆகாமல் இருந்தால் ஒரு கவியாகி இருப்பான். அவன் அதை வெகு நன்ருக மொழிபெயர்த்திருந்தது இன்றும் எனக்கு ஞாபகம் இருக்கிறது.

"ராணி நீங்கள் அந்த அலமாரியில் தேடிப் பிரயோஜனம் இல்லை. கல்யாணம் ஆனதிலிருந்து நிகில் கவிதை வாசிப்பதையே விட்டுவிட்டான். அவனுக்கு இனிமேல் அது தேவை இல்லையோ என்னவோ! ஆனால், 'காவ்ய ஜ்வரோ மனுஷ்யாணாம்' என்று ஸம்ஸ்கிருதத்தில் சொல்லுவதுபோல் கவிதை நோய் என்னை மறுபடியும் பற்றிக்கொள்ளும்போல் தோன்றுகிறது."

"ஸந்தீப், நான் உன்னிடம் ஓர் எச்சரிக்கை செய்ய வேண்டும் என்று வந்தேன்" என்ருர் என் கணவர்.

"கவிதை நோயைப் பற்றியா?"

இந்த ஹாஸ்யம் ஒன்றையும் என் கணவர் கவனிக்கவில்லை.

"சில காலமாக டாக்காவைச் சேர்ந்த முகம்மதிய உபதேசகர்கள் இங்கிருக்கும் முகம்மதியர்களைக் கிளப்பி விட்டுக்கொண் டிருக்கிறார்கள். அவர்கள் உன்மேல் வெகு கோபமாக இருக்கிறார்கள். எந்த நிமிஷமும் உன்னைத் தாக்குவதாக இருக்கிறார்கள்."

"என்னை ஓடிப் போய்விடும்படி கூறுவதற்கு வந்திருக் கிறாயா?"

"உன்னிடம் சமாசாரத்தைக் கூற வந்தேனே ஒழிய என்ன செய்யவேண்டும் என்பதைப் போதிக்க வரவில்லை."

"இந்த ஜமீன் என்னுடையதாக இருந்தால் அந்த முகம்மதிய உபதேசகர்களுக்கு இந்த எச்சரிக்கை அவசிய மாக இருக்குமே ஒழிய எனக்கு இராது. என்னை இப் படிப் பயப்படுத்துவதற்குப் பதிலாக அவர்களைக் கொஞ் சம் நீ மிரட்டினால் அது உனக்கும் எனக்கும் இருவருக் குமே அழகாக இருக்கும். நீ கண்டிப்பில்லாமல் இருப் பதனால் பக்கத்து ஜமீன்தார்களுக்கும் பலம் குறைந்து போகிறதே, உனக்குத் தெரியுமா?"

"நான் உனக்கு உபதேசிக்க வரவில்லை ஸந்தீப்! நீயும் எனக்கு உபதேசம் செய்யாமல் இருந்தால் நல்லது. மேலும் அதனால் என்ன பயன்? உன்னிடம் வேறொரு விஷயமும் கூறவேண்டும். நீயும் உன்னைச் சேர்ந்தவர்களும் ரகசிய மாக என் குடிகளைத் தொந்தரவு செய்து சிரமப்படுத்திக் கொண்டிருக்கிறீர்கள் என்று தெரிகிறது. அதை நான் இனிமேல் பொறுத்துக்கொண் டிருக்க முடியாது. நீ இவ் விடத்தை விட்டுப் போகவேண்டும் என்று விரும்புகி றேன்."

"அந்த முகம்மதியர்களுக்குப் பயந்துகொண்டா, அல்லது இன்னும் வேறு ஏதாவது கூறி என்னை மிரட்டப் போகிறாயா?"

"சில விஷயங்களுக்குப் பயப்படாமல் இருப்பதே கோழைத்தனம் ஆகும். ஸந்தீப், அந்த விஷயங்களுக்காகத் தான் நீ இங்கிருந்து போக வேண்டும். இன்னும் ஐந்து தினங்களில் நான் கல்கத்தாவுக்குப் போகிறேன். நீயும் என்னுடன் வரவேண்டும். நீ கல்கத்தாவில் என்னுடன்

என் வீட்டில் இருக்கலாம். அதில் ஒன்றும் எனக்கு ஆக்ஷேபம் இல்லை.''

''சரி. அப்படியானால் இன்னும் ஐந்து நாட்கள் இருக்கின்றனவே! ராணி, அது வரையிலும் உங்கள் முகத்தை விட்டுப் பிரியும் பாட்டைப் பாடிக்கொண்டிருப்பேன். ஆகா, வங்காளத்து நவீன கவியே, கதவைத் திறந்துவை. உன் சொற்களை நான் கொஞ்சம் எடுத்துக்கொள்ளுகிறேன். அந்தத் திருட்டு உண்மையில் உன்னைச் சேர்ந்தது தான். ஏனெனில் என் பாட்டை உன்னுடையதாக்கிக் கொண்டாய் அது உன் பெயரிலேயே இருக்கட்டும். ஆனால் பாட்டு என்னவோ என்னுடையதுதான்.'' இப்படிச் சொல்லிவிட்டு ஸந்தீப் தம் ஆழ்ந்த கனமான சாரீரத்தில்-அது அபஸ்வரமாகப் போய் விடும் போல் இருந்தது-ஒரு பைரவி ராகப் பாட்டைப் பாடத் தொடங்கினார்.

அவர் தைரியத்துக்கு எல்லையே இல்லை; அது ஒளிவு மறைவு இல்லாமல் நெருப்பைப் போல் இயற்கையாக இருந்தது. அதை ஒருவரும் தடுக்க முடியாது. இடியை யாரேனும் எதிர்க்க முடியுமா? மின்னல் மின்னுகிறது; அவ்வளவுதான்.

நான் வெளியே சென்றேன். தாழ்வாரத்தைக் கடந்து உள்வீட்டுக்குச் சென்றபோது திடீரென்று அமூல்யன் வந்து என் எதிரே நின்றான்.

''அக்கா, நீங்கள் ஒன்றுக்கும் பயப்படவேண்டாம். நான் இன்றிரவே புறப்பட்டுப் போய்க் காரியத்தை முடித்துக்கொண்டு வந்துவிடுகிறேன்'' என்றான்.

நான் அவன் இளமை பொருந்திய முகத்தைச் சாவதானமாக நோக்கினேன். ''அமூல்யா! நான் எனக்காகப் பயப்படவில்லை. உன்னைப்பற்றித்தான் கவலைப்படுகிறேன்'' என்றேன்.

அமூல்யன் போவதற்குக் கிளம்பினான். அவன் அப்பால் போவதற்குள் நான் அவனை மீண்டும் கூப்பிட்டேன். ''அமூல்யா! உனக்கு அம்மா இருக்கிறாளா?'' என்று கேட்டேன்.

''இருக்கிறாள்'' என்றான் அமூல்யன்.

"சகோதரி?"

"இல்லை. என் அம்மாவுக்கு நான் ஒரே பிள்ளைதான். நான் குழந்தையாக இருந்தபோதே என் அப்பா போய் விட்டார்."

"அப்படியானால் நீ உன் அம்மாவிடம் திரும்பிப் போய்விடு."

"அக்கா! இப்போதுதான் எனக்கு அம்மா, அக்கா இருவரும் இருக்கிறார்களே!"

"அமூல்யா, நீ போவதற்கு முன்பு இன்றிரவு இங்கே வந்து சாப்பிடவேண்டும்."

"அதற்குச் சாவகாசம் இருக்காது. உங்கள் கையால் எனக்கு ஏதாவது உணவு தயார் செய்து கொடுங்கள். அது போதும்."

"உனக்கு மிகவும் பிடித்த பக்ஷணம் எது, அமூல்யா?"

"அம்மாவானால் நிறையப் பர்பி செய்து கொடுப்பாள். நீங்கள் உங்கள் கைகளினால் கொஞ்சம் பர்பி செய்து கொடுங்கள்" என்றான் அமூல்யன்.

# நிகிலேசன்

ஸந்தீப் ஹரீசகுண்டர் முதலியவர்களுடன் சேர்ந்து கொண்டதையும், அசுர மர்த்தனியான துர்க்காதேவியின் உத்ஸவம் பிரபலமாக நடக்கப் போகிறது என்பதையும் என் குருதேவரிடமிருந்துதான் அறிந்துகொண்டேன். ஹரீசகுண்டன் உத்ஸவச் செலவுக்ளுக்காகக் குடிகளிட மிருந்து பணத்தைப் பிடுங்கிக்கொண் டிருந்தான். பண்டி தர்கள் என்ன, வித்தியாவாகீசர்கள் என்ன, கவி ரத்தினங்கள் என்ன, இவர்கள் எல்லாம் இரு பொருள் படும்படியாகத் துதிகள் கட்டும்படி ஆக்ஞாபிக்கப்பட் டிருந்தார்கள்.

இந்த விஷயத்தைப்பற்றி ஸந்தீப்புடன் குருதேவருக்குப் பலத்த சண்டையே ஏற்பட்டது.

"தெய்வங்களிடையிலும் நாளடைவில் முற்போக்கான மாறுதல் உண்டு. பாட்டனூர் சிருஷ்டித்த தெய்வங்களைத் தனக்குப் பிடித்தபடி பேரன் மாற்றிக்கொள்ள வேண்டாமா? இல்லாவிட்டால் அவன் நாஸ்திகனுக இருக்க வேண்டியதுதான். புராதன தெய்வங்களை நவீனமாக்குவதென்று நான் தீர்மானித்திருக்கிறேன். புராதனக் கட்டுப்பாட்டினின்றும் அவைகளை விடுதலை செய்வதற்காகத்தான் நான் பிறந்திருக்கிறேன்" என்றான் ஸந்தீப்.

சிறுவயசு முதல் எண்ணங்களைக் கொண்டு எத்தகைய செப்பிடுவித்தை செய்பவன் ஸந்தீப் என்பதை நான் அறிவேன். அவனுக்கு உண்மையை அறிவதில் ஆவல் இல்லை. அதைக்கொண்டு வேடிக்கை செய்வதுதான் அவனுக்குப் பிரியம். ஆபிரிக்காக் கண்டத்துக் காடுகளில் அவன் பிறந்திருந்தால் நரமாம்ச பக்ஷணம் செய்வதுதான் மனிதர்களுக்குள் உண்மையான நட்பைப் பெருக்கும் வழி என்று எவ்வளவோ நூதனமான யுக்திகளைக் கற்பித்து ஸ்தாபித்திருப்பான். ஆனால் இப்படிப் பிறரை ஏமாற்றுவோர் கடைசியில் தாமே ஏமாந்துபோவார்கள்.

ஏதாவது ஒன்றைக் கிளப்பும்போது அது முன்பு கூறியதற்கு எவ்வளவு விரோதமாக இருந்தாலும் தான் பெரிய தத்துவம் ஒன்றைக் கண்டுபிடித்துவிட்டதாகத் தான் நினைத்துக்கொள்ளுகிறான்.

ஆயினும், இந்தக் குடிவெறியை ஊரில் ஸ்திரப்படுத்துவதற்கு நான் உதவியாக இருக்கமாட்டேன். நாட்டுக்காகத் தொண்டு செய்வதற்குச் சித்தமாக இருக்கும் இளைஞர்கள் இந்தக் கெட்ட பழக்கத்தில் இறங்கிவிடலாகாது. வெறியை உண்டாக்கி வேலை வாங்குவதில் பிரியமுள்ளவர்கள் அப்போது ஏற்படும் உத்ஸாகத்தையே பெரிதாக மதிக்கிறார்களே ஒழிய வெறிகொண்டு கிளம்பும் ஜனங்களின் மனத்தைப் பொருட்படுத்துவதில்லை.

விமலாவின் எதிரில் ஸந்தீபைப் போ என்று கூற நேர்ந்துவிட்டது. அதற்காக அவ்விருவரும் ஒருவேளை என்னைத் தவறாக நினைக்கலாம். ஆனால் இந்தத் தப்பு அபிப்பிராயங்களைப் பற்றிய பயத்தையும் நான் ஒழிக்க வேண்டும். விமலாவே என்னைத் தவறாக நினைக்கட்டுமே!

டாக்காவிலிருந்து முகம்மதிய உபதேசகர்கள் அநேகர் அனுப்பப்பட்டிருக்கின்றனர். என் ஜமீனில் இருக்கும் முகம்மதியர்களுக்கும் ஹிந்துக்களைப் போலவே பசுவைக் கொல்வதில் வெறுப்பு ஏற்பட்டிருந்தது. ஆனால் இப்போதோ ஒவ்வோரிடத்தில் கோஹத்தி நடக்கத் தொடங்குகிறது. இந்தச் சமாசாரத்தை முதல் முதல் என் முகம்மதியக் குடிகளில் சிலரே மிகவும் தவறாக நினைத்து என்னிடம் வந்து கூறினார்கள். நிலைமையைச் சமாளிப்பது மிகவும் கஷ்டம் என்பதை உணர்ந்தேன். தீவிரமான மதப்பற்றுத்தான் இவைகளுக்கெல்லாம் மூலகாரணம் என்று பாவனை செய்தார்கள். அந்தப் பாவனையும் தடுத்தால் நின்றுவிடும். இந்த இயக்கத்தின் ரந்திரம் அதில்தான் இருந்தது.

என் ஹிந்துக் குடிகளில் முக்கியமானவர்கள் சிலரை அழைத்து விஷயத்தைக் கூறினேன். "நம் கொள்கைகளை வேண்டுமானால் நாம் சரியாகக் கைப்பற்றலாம்; ஆனால் பிறருடைய கொள்கைகளை மறுக்க நமக்கு அதிகாரம்

ஏது? நம்மில் எவ்வளவோ பேர் வைஷ்ணவர்களாக இருந்தாலும், சாக்தர்களாக இருப்பவர்கள் ஆடு, கோழி முதலியவைகளைப் பலியிடத்தான் செய்கிறார்கள். அதை நாம் என்ன செய்ய முடியும்? அப்படியே முகம்மதியர்களும் அவர்களுக்குச் சரி என்று தோன்றியதைச் செய்யும்படி நாம் விடவேண்டியதுதான். நீங்கள் ஒன்றும் கலவரம் செய்யாமல் பேசாமல் இருங்கள்'' என்றேன்.

''சுவாமி, இம்மாதிரி அநியாயம் இதுவரைக்கும் நடந்ததில்லையே!'' என்று அவர்கள் கூறினார்கள்.

''இவ்வளவு காலமாக அவர்களே அதை ஒழித்திருந்தனர். மறுபடியும் அவர்களாகவே அந்த நிலைமைக்கு வரும்படி நாம் நடக்கவேண்டும். அதற்காகக் கலகம் ஏற்பட்டால் காரியம் விபரீதமாகிவிடும்'' என்றேன்.

''இல்லை சுவாமி, அந்தக் காலம் போய்விட்டது. நீங்கள் நன்ருக அடக்கினால் ஒழிய அது ஒருபோதும் நிற்காது.''

''அடக்கு முறையைக் கையாளுவதனால் கோஹத்தி நிற்காததுடன் நரஹத்தியும் ஏற்பட்டுவிடும்'' என்றேன்.

ஒருவனுக்கு ஆங்கிலம் தெரியும். அவன் அப்போது பழக்கத்தில் இருந்த சில வாக்கியங்களைப் பாடம் பண்ணியிருந்தான்.

''சாஸ்திரம் கிடக்கட்டும். இது பெரும்பாலும் விவசாய தேசம். அதனால் பசுக்கள்...'' என்று அவன் கூறலானான்.

''இந்த நாட்டில் எருமைகளும் பால் கொடுக்கின்றன; உழவுக்கும் உபயோகமாக இருக்கின்றன. ஆகவே அவைகளைக் கொன்று அந்த ரத்தம் தேங்கிக் கிடக்கும் கோவில் பிராகாரங்களில் நாம் வெறியுடன் கூத்தாடிக்கொண்டு மதம் மதம் என்று முகம்மதியர்களுடன் சண்டையிட்டால் மதமே நம்மைப் பார்த்துச் சிரிக்காமல் என்ன செய்யும்? கடைசியில் சண்டைதான் மிச்சமாகும். 'பசுவைக் கொல்வதுதான் பாவம்; எருமையைக் கொல்வது பாவம் அல்ல' என்றால் அது ஓர் உயர்ந்த மதமாகுமா?'' என்று நான் நடுவில் கூறினேன்.

"இவைகளுக்கெல்லாம் பின்னுல் இருக்கும் விஷயம் உங்களுக்குத் தெரியாதா சுவாமி?" என்ருன் அந்த ஆங்கிலம் படித்த மனிதன்; "சட்டத்தை மீறினுலும் முகம்மதியனுக்குத் தண்டனை இல்லை என்று இருப்பதனுல்தான் இப்படி யெல்லாம் ஆயிற்று. பாசூரில் அவர்கள் செய்த அட்டூழியங்களைப்பற்றி நீங்கள் கேள்விப்படவில்லையா?"

"முகம்மதியர்களை நமக்கு விரோதமாகப் பயன்படுத்திக்கொள்வது எப்படிச் சாத்தியமாயிற்று? நாம் அவர்களைச் சகிக்காததனுல் அல்லவா அவர்கள் இப்படி ஆனுர்கள்? ஆகையால்தான் தெய்வம் நம்மை இப்படித் தண்டித்துவிட்டது. நாம் செய்த பாவம் எல்லாம் சேர்ந்து நம் தலையில் விடிந்திருக்கிறது."

"அப்படியே நம் தலையில் விடியட்டும். நாமும் பதிலுக்குப் பழி தீர்த்துவிட்டால் போகிறது. அதிகாரவர்க்கத்துக்குச் சட்டத்தின் மீது இருந்த பக்தியைக் குறைத்துவிட்டோம். ஒரு காலத்தில் நல்ல நீதி செலுத்தும் உண்மையான அரசர்களாக இருந்தவர்களே இப்போது சட்டத்தை மீறுபவர்கள் ஆகிருர்கள். இப்போது சாதாரணத் திருடர்களுக்கும் அவர்களுக்கும் என்ன வித்தியாசம்? இந்த உண்மை சரித்திரத்தில் இல்லாவிட்டாலும் எங்கள் உள்ளங்களில் நாங்கள் இதை நன்ருகப் பதியவைத்துக்கொள்ளுவோம்."

பத்திரிகைகளில் என்னைப்பற்றி வெளியாகும் கெட்ட செய்திகளினுல் என் பெயர் மிகவும் பிரபலமாகிவிட்டது சக்கரவர்த்தியின் ஜமீனிலுள்ள சுடுகாட்டில் என்னைப்போன்ற பிரதிமையைக் கொண்டுபோய்த் தடபுடலுடன் எரியிட்டதாகச் செய்தி கிடைத்தது. இன்னும் எப்படியெல்லாமோ என்னை அவமானப்படுத்தும் உத்தேசமும் உண்டு என்று தெரிகிறது. அவர்கள் ஆரம்பிக்க விரும்பிய பருத்தி ஆலையில் பங்குகள் எடுத்துக்கொள்ளும்படி என்னைக் கேட்க வந்தார்கள். அதுதான் இவ்வளவுக்கும் காரணம். "என் பணம் போவது பெரிதல்ல. எவ்வளவோ எளிய பங்குதார்களுக்கு நஷ்டம்

ஏற்படுவதற்கு நான் உதவியாக இருக்கமாட்டேன்'' என்று கூறிவிட்டேன்.

''ஆனால் தேசம் செல்வம் நிறைந்து விளங்க வேண்டும் என்பதில் உங்களுக்கு ஆசை இல்லையா?'' என்று அவர்கள் கேட்டார்கள்.

''தொழிற்சாலைகள் தேசத்தின் வளமைக்குக் காரணமாகலாம். ஆனால் அதை விரும்புவதனால் மட்டும் தேசத்தில் செல்வம் மிகுந்துவிடாது. நாம் அமைதியாக இருந்த நாளிலேகூட நம் தொழில்கள் விருத்தியடையவில்லை. இப்போது ஒன்றும் புரியாமல் வெறிகொண்டிருக்கும் போது எங்கேயாவது அப்படி ஆகுமா?'' என்றேன்.

''பணத்தைத் தைரியமாக இதில் போடுவதற்குப் பயப்படுகிறீர்கள் என்பதை ஒப்புக்கொள்ளுங்கள்.''

''நீங்கள் உண்மையாகத் தொழிலுக்கென்று முயலும் போது நான் என் பணத்தை அதில் போடுவேன். அடுப்பு மூட்டிவிட்டால் சமையல் ஆகிவிடுமா?''

* * *

இது என்ன! சக்குவாவில் இருக்கும் சின்ன கஜானா கொள்ளை இடப்பட்டதா? அங்கிருந்து வரவேண்டிய தொகை ரூபாய் 7500. அங்கிருக்கும் காஷியர் கொண்டு வருவதற்கு வசதியாகப் பணத்தைச் சர்க்கார் கஜானாவில் நோட்டுக்களாக மாற்றி வைத்திருந்தான். நள்ளிரவில் ஆயுதங்களுடன் கொள்ளைக்காரர்கள் கஜானாவில் புகுந்து காவற்காரன் காஸிமைக் காயப்படுத்தினராம். ஒரு வேடிக்கை என்னவென்றால் அவர்கள் ஆறாயிரம் ரூபாயை மட்டும் எடுத்துக்கொண்டு பாக்கியை அங்கேயே போட்டுவிட்டுச் சென்றுவிட்டனராம். கொள்ளைக் கலகம் ஆகிவிட்டது. இனிமேல் போலீஸ் கலகம் தொடங்க வேண்டும். எப்படியோ நிம்மதி என்பது மட்டும் இல்லை.

நான் வீட்டுக்குள் சென்றேன். எனக்கு முன்னமே அவர்களுக்குச் சமாசாரம் தெரிந்திருந்தது. சின்ன மதனி என்னிடம் வந்து, ''என்ன அநியாயம் இது? இனிமேல் நாம் என்ன செய்வது?'' என்றாள்.

அவளுக்குத் தைரியம் உண்டாக்குவதற்காக நான் அதைப்பற்றி அலக்ஷ்யமாகப் பேசினேன். "எல்லாம் அடியோடு கொள்ளை போகவில்லையே! பார்த்துக்கொள்வோம்" என்றேன் புன்னகையுடன்.

"அப்படி வேடிக்கையாகப் பேசாதே, அப்பா! உன் மேல் ஏன் அவர்களுக்கு அவ்வளவு கோபம்? அவர்களைக் கொஞ்சம் சமாதானப்படுத்தக் கூடாதா?"

"தேசம் நாசமடைவதில் எல்லோருக்கும் திருப்தி இருந்தாலும் நான் அதை அநுமதிக்க மாட்டேன்."

"சுடுகாட்டில் எதையோ கொண்டுபோய் எரித்தார்களாமே! என்ன அக்கிரமம்? உன் விஷயத்தில் அவர்கள் இப்படி நடப்பது வெகு அநியாயம்! துரைசானியிடம் படித்த படிப்பால் சின்ன ராணிக்கு மட்டும் இதில் எல்லாம் ஒரு பயமும் தெரியவில்லை. ஆனால் சாஸ்திரிகளை வரவழைத்து அதற்குப் பரிகாரம் செய்த பிறகுதான் என் மனம் நிம்மதியடைந்தது. அப்பா! நீ கல்கத்தாவுக்குப் புறப்பட்டுப் போய்விடு. இங்கே இருந்தால் என்ன செய்துவிடுவார்களோ என்று எனக்கு நடுக்கமாகவே இருக்கிறது."

அவளுடைய உண்மையான கவலை என் மனத்தை இளக்கிற்று.

"அவ்வளவு பணத்தையும் உன் அறையில் வைப்பது சரியல்ல என்று நான் அப்போதே சொல்லவில்லையா? அதுவும் எந்த நிமிஷம் அவர்களுக்குத் தெரிந்துவிடுமோ? பணமா பெரிது? என்னவோ யார் கண்டார்கள்..." என்று அவள் கவலைப்படவே, அவள் மனச் சமாதானத்துக்காக நான் பணத்தை உடனே கஜானாவில் கொண்டு போய் வைத்துத் தக்க காவலுடன் கல்கத்தாவுக்கும் அனுப்பி விடுவதாகச் சொன்னேன். இருவரும் சேர்ந்து என் படுக்கை அறைக்குச் சென்றோம். பக்கத்து அறைக் கதவு மூடியிருந்தது. நான் தட்டியதும், தான் புடைவை கட்டிக் கொண்டிருப்பதாக விமலா பதில் சொன்னாள்.

"என்ன, சின்ன ராணி இவ்வளவு சீக்கிரம் புடைவை கட்டிக்கொண்டு தயாராகிறாள்?" என்றாள் மதனி.

வந்தேமாதரக் கூட்டம் ஏதாவது உண்டோ? அம்மா, திருடர்கள் ராணியே! கொள்ளையடித்துக்கொண்டு வந்த சொத்தைக் கணக்குப் பார்த்துக்கொண் டிருக்கிருயா?'' என்ருள் வேடிக்கையாக.

''பணத்தைப் பிறகு எடுத்துக்கொண்டு போக ஏற்பாடு செய்கிறேன்'' என்று சொல்லிவிட்டு நான் வெளியே வந்தேன்.

அங்கே போலீஸ் இன்ஸ்பெக்டர் ஒருவர் என்னைப் பார்க்க வேண்டும் என்று காத்துக்கொண் டிருந்தார்.

''கொள்ளைக்காரர்கள் சங்கதி ஏதாவது தெரிந்ததா?'' என்று கேட்டேன்.

'ஒரு பேர்வழிமேல் சந்தேகம் இருக்கிறது'' என்ருர்

''யார் அது?''

''காவற்காரன் காஸிம்.''

'காஸிமா? அவன்தானே காயம் அடைந்தது?''

''அது ஒன்றும் இல்லை. ஏதோ காலில் கொஞ்சம் பேருக்குப் பட்டிருக்கிறது. தானேகூடச் செய்துகொண் டிருக்கலாம்.''

''எனக்குத் தோன்றவில்லை. அவன் நிரம்ப நம்பிக்கையுள்ளவன் ஆயிற்றே!''

''தங்களுக்கு அவன்மேல் நம்பிக்கை என்ருல் அதற்காக அவன் திருடவில்லை என்று சொல்ல முடியுமா? இருபது வருஷம் நம்பிக்கையாக இருந்து பிறகு திடீரென்று மாறியவர்களை நான் கண்டதில்லையா?''

''அப்படியே இருந்தாலும் அவனை ஜெயிலுக்கு அனுப்ப என்ஞல் முடியாது. ஆஞல் பணம் முழுவதையும் திருடாமல் அவன் எதற்காகப் பாக்கி வைக்க வேண்டும்?''

''நம்மை ஏமாற்றுவதற்காகத்தான் ஐயா! நீங்கள் என்ன வேண்டுமாஞலும் சொல்லுங்கள். அவன் பெரிய பேர்வழியாகத்தான் இருக்க வேண்டும். அவன் காவலில் பிசகில்லை. இருந்தாலும் பக்கத்தில் நடக்கும் கொள்ளை

களில் எல்லாம் அவனுக்கும் சம்பந்தம் இருக்கிறது என்பதில் எனக்குச் சந்தேகம் இல்லை.''

பிறகு அந்த இன்ஸ்பெக்டர் இருபது முப்பது மைல் களுக்கு அப்பால் நடக்கும் கொள்ளைகளில் தான் இருக்கும் இடத்தில் இருந்துகொண்டே எவ்வாறு ஒருவன் சம்பந் தப்பட முடியும் என்பதை எடுத்துரைக்கத் தொடங் கினார்.

''காஸிமை இங்கே அழைத்துக்கொண்டு வந்திருக் கிறீர்களா?'' என்று கேட்டேன்.

''இல்லை, அவனை லாக்கப்பில் வைத்திருக்கிறோம். மாஜிஸ்திரேட் விசாரணை செய்ய வேண்டும்.''

''அவனை நான் பார்க்க வேண்டும்'' என்றேன். அவனை அடைத்திருந்த அறைக்குப் போய்ப் பார்த்தவுடன் அவன் என் காலில் விழுந்து, ''ஆண்டவன் மேல் ஆணை! நான் ஒன்றும் செய்யவில்லை'' என்று அழுதான்.

''எனக்கு உன்மேல் சந்தேகம் இல்லை, காஸிம்! பயப் படாதே! நீ குற்றம் செய்யவில்லை என்றால் உன்னை அவர் கள் ஒன்றும் செய்ய முடியாது'' என்று அவனைச் சமாதா னப்படுத்தினேன்.

ஆயினும் அவனால் திருட்டு நடந்ததைப்பற்றித் தெளி வாக ஒன்றும் சொல்ல முடியவில்லை. நானூறு ஐந்நூறு பேர்கள் துப்பாக்கி, கத்திகளுடன் வந்ததாகப் பெரிய கதை கட்டிவிட்டான். மனத்திலிருந்த கலவரத்தினாலோ தான் காவல் இருந்தும் பயனில்லாமல் போனதனாலோ ஏன் அவ்வாறு கூறினானோ தெரியவில்லை. எல்லாம் ஹரீச குண்டனின் வேலைதான் என்றும் சொன்னான். ஹரீச குண்டனின் ஏஜெண்டான ஏகராமின் குரல் கேட்ட தாகக் கூடச் சாதித்தான்.

''காஸிம்! நீ அளக்கும் மூட்டையில் பிறரையும் இழுக்காதே. ஹரீசகுண்டன் இந்த வழக்கில் சம்பந்தப் பட்டவனா இல்லையா என்பதை நிரூபிக்கும் பொறுப்பு உன்னுடையதல்ல'' என்று அவனை எச்சரித்துவிட்டு வந்தேன்.

வீட்டுக்குத் திரும்பிவந்து குருதேவருக்குச் சொல்லி அனுப்பினேன். "மனச்சாட்சியைத் தள்ளிவிட்டு இப்படித் 'தேசம் தேசம்' என்று சொல்லுவதில் நன்மை ஒன்றும் விளையப்போவதில்லை. நாட்டில் பயங்கரமான அக்கிரமச் செயல்கள் எல்லாம் இனி நடக்கும்" என்றார் குருதேவர், கவலையுடன்.

"யார் செய்திருப்பார்கள் என்று நினைக்கிறீர்கள்?"

"என்னை ஒன்றும் கேட்காதே. எங்கும் அக்கிரமம் நிறைந்துவிட்டது. எல்லோரையும் இப்போதே அனுப்பிவிடு."

"இன்னும் ஒரு நாள் இருக்கும்படி அனுமதித்திருக்கி றேன். அடுத்த நாள் போய்விடுவார்கள்."

"இன்னொரு விஷயம். விமலாவையும் கல்கத்தாவுக்கு அழைத்துக்கொண்டு போய்விடு. இங்கே இருந்துகொண்டு வெளியுலகை அவள் சரியாகப் பார்க்க முடியாது. விஷயங் களையும் மனிதர்களையும் உள்ளபடி அறிய அவளுக்குத் தெரியவில்லை. அங்கே போய் உலகம் என்றால் என்ன என்பதை நன்றாகப் பார்த்துத் தெரிந்துகொள்ளட்டும்."

"அதைத்தான் நானும் யோசித்தேன்."

"அப்படியானால் தாமதம் செய்யாதே, நிகில்! உலகம் சீர்படவேண்டுமானால் உலகிலுள்ள எல்லா ஜாதியின ரும் ஒன்று சேர்ந்தால்தான் முடியும். அரசியல் விவகாரங் களுக்காக மனச்சாட்சியையே விற்பது, தேசம் தேசம் என்று கூத்தாடுவது போன்ற விஷயங்களினால் பயனில்லை. மேல்நாட்டார் இதை உள்ளூற ஒப்புக்கொள்ளவில்லை என்பது எனக்குத் தெரியும். ஆனால் அதற்காக இந்த விஷ யத்தைப்பற்றி நமக்குப் போதிக்க அங்கே ஒருவருக்கும் அதிகாரம் இல்லை. சத்தியத்துக்காக உயிரை விடுபவர்கள் சிரஞ்சீவிகள் ஆகியிருக்கிறார்கள். அப்படியே தேசம் முழு வதும் உண்மைக்காகப் பிராணனை விட்டால் அதுவும் என்றும் சாசுவதமாகவே விளங்கும். பாபம் தலை விரித் தாடும் இந்தப் பாரத தேசத்தில் அந்தச் சத்திய உணர்ச்சி உண்மையாக இருக்கட்டும். அந்நிய தேசங்களிலிருந்து

வந்த என்ன பயங்கரமான பாபங்கள் எல்லாம் நம்மைப் பற்றிக்கொண் டிருக்கின்றன!"

அன்றைப் பொழுதெல்லாம் விசாரணைக் குழப்பத்திலேயே சென்றுவிட்டது. இரவு படுக்கச் சென்ற போது எனக்கு மிகவும் களைப்பாக இருந்தது. ஆகவே மதனியின் பணத்தைக் கஜானுவுக்கு நாளைக்கு அனுப்பலாம் என்று இருந்துவிட்டேன். நடு இரவில் திடீரென்று விழித்துக்கொண்டேன். அறை இருட்டாக இருந்தது. யாரோ விம்முவது போன்ற சப்தம் கேட்டது. யார் அழுதுகொண் டிருப்பார்கள்? மழை பெய்யும்போது காற்று அடிப்பதுபோல் விம்மி அழும் சப்தம் இடையிடையே கேட்டுக்கொண் டிருந்தது. அறை நடுவிலிருந்தே அழுகைச் சப்தம் வருவதுபோல் இருந்தது. நானோ தனியாக இருந்தேன். சில நாட்களாக விமலா இவ்வறையில் படுப்பதில்லை. நான் எழுந்து வெளித் தாழ்வாரத்துக்குச் சென்றதும் அங்கே விமலா தரையில் குப்புறப் படுத்துக் கொண்டிருப்பதைக் கண்டேன்.

எழுத்தில் எழுத முடியாத விஷயங்கள் உண்டு. உலகின் நடுவே இருந்து அதன் துன்பங்களையெல்லாம் தானே வாங்கி அநுபவிக்கும் அந்தச் சர்வேசுவரன்தான் அவற்றை அறிவார். ஆகாயம், நக்ஷத்திரங்கள், இரவு எல்லாம் ஒரே நிச்சப்தமாக இருந்தபோது தூக்கமற்ற அவ்வழுகை!

இத்தகைய துன்பங்களைப் புத்தகங்களில் கூறியிருப்பதை ஆதாரமாக வைத்துக்கொண்டு நல்லது என்றோ கெடுதல் என்றோ சொல்லுகிறோம். ஆனால் இந்த நள்ளிரவில், தாங்க முடியாமல் உள்ளத்தைப் பீறி வரும் துயரத்துக்கு என்ன பெயர் கொடுப்பது? அந்த நிசி வேளையில் அவ்வுருவத்தைக் காண என் மனம் திகில் அடைந்தது.

"அவளைப் பற்றித் தீர்மானிப்பதற்கு நான் யார்?" என்று நான் எனக்குள் கூறிக்கொண்டேன்! பரம்பொருளே! உன்னைப்பற்றியும், பிறப்பு, இறப்பு இவைகளின் ரகசியத்தையும் நான் எவ்வாறு அறிவேன்!

பேசாமல் திரும்பிப் போய்விடலாம் என்று ஒரு கணம் நினைத்தேன். என்னால் அப்படிச் செய்ய முடிய

வில்லை. விமலாவின் அருகில் உட்கார்ந்து அவள் தலையில் கையை வைத்தேன். என் கை பட்டதும் அவள் உடல் உணர்ச்சியற்று இருப்பதுபோல் தோன்றியது. ஆனால் மறு கணமே அது துவண்டு கொடுத்தது. அவள் கண்களி லிருந்து கண்ணீர் பெருகிற்று. நான் மெதுவாக அவள் நெற்றிக்குக் கையைக் கொண்டு வந்தேன். இருந்தாற் போல் அவள் என் கால்களை இழுத்துத் தன் மார்போடு அணைத்துக்கொண்டாள். அவள் இழுத்து அணைத்துக் கொண்ட வேகத்தைப் பார்த்தபோது எங்கே அவள் இருதயமே பிளந்துவிடுமோ என்ற அச்சம் எனக்கு உண் டாயிற்று.

# விமலா

கல்கத்தாவிலிருந்து அமூல்யன் இன்று காலை வர வேண்டும். அவன் வந்தவுடன் தெரிவிக்கும்படி வேலைக்காரர்களிடம் சொல்லியிருந்தேன். இருந்தாலும் என்னால் சும்மா இருக்க முடியவில்லை. கடைசியில் அவன் வரவை எதிர்பார்த்து, டிராயிங் ரூமில் காத்துக்கொண்டிருந்தேன்.

நகைகளை அவனிடம் கொடுத்து விற்கும்படி சொன்ன போது எனக்கு என்னைப்பற்றிய நினைவு மட்டுந்தான் இருந்தது. சின்னஞ் சிறு பையன் ஒருவன் அவ்வளவு விலைபெற்ற நகைகளை விற்கச் சென்றால் உடனே எல்லோரும் சந்தேகிக்க மாட்டார்களா? இந்த எண்ணம் அப்போது எனக்கு உதிக்கவே இல்லை. ஸ்திரீகள் இவ்வளவு கையால் ஆகாதவர்களாக இருப்பதனால்தான் பிறரை ஆபத்துக்கு உள்ளாக்கவேண்டியிருக்கிறது, நாம் இறக்கும்போது உடன் இருப்பவர்களையும் நம்முடன் இழுத்துச் செல்லுகிறோம்.

நீரில் மூழ்குபவன் மற்றவர்களைக் காப்பாற்றுவது போல் நானும் அமூல்யனைப் பார்த்துக்கொள்வதாகப் பெருமையுடன் கூறினேன் அல்லவா? ஆனால் அவனைக் காப்பாற்றுவதற்குப் பதிலாக அவனுக்கு நாசத்தையே உண்டுபண்ணிவிட்டேன். 'தம்பி! உன் அக்காவின் அழகைப் பார்த்தாயா? என் பாபச் செயல்களின் பாரம் தாங்காமல் நானே தவிக்கும்போது என் ஆசீர்வாதத்தினால் உனக்கு என்ன பயன்?'

பிளேக் நோயைப் போல் பாவமும் மனிதனைச் சில சமயம் பற்றிக்கொள்ளுகிறது என்று தோன்றுகிறது. எங்கிருந்தோ விஷக் கிருமிகள் தோன்றி ஒரே இரவில் மரணம் ஏற்பட்டுவிடுகிறது. நோயுற்றவனை மற்றவர்களை விட்டுத் தனியே ஏன் வைக்கக்கூடாது? அது எவ்வளவு பயங்கரமாகப் பரவிவிடும் என்பது எனக்குத் தெரியும்.

அது நெருப்புப்போல் உலகம் முழுவதும் பற்றிக் கொண்டுவிடும்.

மணி ஒன்பது அடித்தது. அமூல்யனுக்கு ஏதேனும் கஷ்டம் நேர்ந்திருக்குமோ, போலீஸாரின் கையில் சிக்கிக் கொண்டிருப்பானோ என்றெல்லாம் யோசனையில் ஆழ்ந் தேன். யாருடைய நகைகள், அவனுக்கு எப்படிக் கிடைத் தன என்றெல்லாம் போலீஸில் ஒரே அமர்க்களப்பட்டுக் கொண்டிருக்கும். கடைசியில் நான்கு பேர்கள் அறிய நான் உண்மையைக் கூறவேண்டி வரும்.

பெரிய ராணி அம்மா! நான் வெகு காலமாக உன் னைப் பழித்துவந்தேன். இப்போது உன் காலம் வந்திருக் கிறது. பொதுஜனம், உலகம் என்பவைகளின் பெயரால் நீ என்மீது பழிக்குப் பழி வாங்கிக்கொள்ளலாம். தெய் வமே! இந்தச் சமயம் என்னைக் காப்பாற்றிவிடு. என் ஓர்ப் படியின் முன் இனி நான் என் பெருமையை விட்டுவிடுகி றேன்.

பின்னும் பொறுக்க முடியாமல் என் ஓர்ப்படியினி டம் சென்றேன். அவள் தாழ்வாரத்தில் உட்கார்ந்து வெற்றிலை போட்டுக்கொண் டிருந்தாள். பக்கத்தில் அவள் வேலைக்காரி தாகோவும் உட்கார்ந்திருந்தாள். அவளைப் பார்த்தவுடன் எனக்கு ஒரு கணம் தயக்கமாக இருந்தது. ஆனால் மறுநிமிஷமே சமாளித்துக்கொண்டு என் ஓர்ப் படியின் காலில் விழுந்து நமஸ்கரித்தேன்.

“சின்ன ராணி, என்ன சமாசாரம்? திடீரென்று என்ன இவ்வளவு மரியாதை வந்துவிட்டது?” என்றாள் அவள்.

“இன்று என் பிறந்த நாள், மன்னி. நான் தங்களுக்கு எவ்வளவோ வருத்தம் உண்டாகும்படி நடந்திருக்கிறேன். இனிமேல் அப்படி நடக்காதபடி எனக்கு உங்கள் ஆசீர் வாதத்தை அளியுங்கள். என் மனம் மிகவும் குறுகியது” என்று கூறி மறுபடியும் நமஸ்கரித்துவிட்டு, நான் வேக மாகப் போவதற்குக் கிளம்பினேன். என்னை அவள் கூப் பிட்டாள்.

"அடி என் தங்கமே! இன்றுதான் உன் பிறந்த நாள் என்று இதுவரையிலும் நீ என்னிடம் சொல்லவில்லையே! இன்று மத்தியான்னம் நீ கட்டாயம் என்னுடன் சேர்ந்து சாப்பிடவேண்டும்" என்றாள்.

தெய்வமே! இன்றே நிஜமாக என் பிறந்த நாளாக இருக்கட்டும். நான் மீண்டும் பிறக்க முடியாதா? பிறந்து புனித வாழ்க்கை நடத்துவதற்குக் கடவுள் அருள் புரிவாரா? நான் திருந்த இன்னும் ஒரு சந்தர்ப்பம் கிடைக்குமா?

நான் டிராயிங் ரூமுக்குச் சென்றபோது ஸந்தீப் அங்கே இருந்தார். எனக்குச் சொல்ல முடியாத வெறுப்பு உண்டாயிற்று. காலை வெளிச்சத்தில் அவர் முகத்தை நேரே பார்த்தபோது அதில் அரிய மேதையின் பிரகாசம் ஒன்றும் என் கண்ணுக்குத் தென்படவில்லை.

"நீங்கள் சற்று இங்கிருந்து போகிறீர்களா?" என்றேன். ஸந்தீப் ஒரு புன்னகை புரிந்தார். "அமூல்யன் இல்லாததனால் முக்கிய விஷயமான பேச்சைப் பேச இப்போது என் முறை வந்து விட்டதல்லவா?"

என் விதி என்னை மீண்டும் பற்றிக்கொள்ளுவதாக இருந்தது. நான் அளித்த உரிமையையே நான் எப்படி மறுபடியும் மறுப்பது?

"நான் கொஞ்சம் தனியாக இருக்க விரும்புகிறேன்" என்றேன்.

"ராணி! மற்றொருவர் இருப்பதனால் உங்கள் தனிமை கெட்டுப் போய்விடுமா? பெருங்கூட்டத்துள் ஒருவனாக என்னையும் எண்ணிவிடாதீர்கள். ஆயிரக் கணக்கான ஜனங்கள் சுற்றிலும் இருந்தாலும் ஸந்தீப் எப்போதும் தனிதான்" என்றார்.

"தயவு செய்து இன்னொரு சமயம் வாருங்கள். இன்று காலை நான்..."

"அமூல்யனுக்காகக் காத்துக்கொண் டிருக்கிறீர்களா?"

மிக்க வெறுப்புடன் நான் போவதற்குத் திரும்பி னேன். அப்போது ஸந்தீப் தம் ஆடைக்குள்ளிருந்து என் நகைப் பெட்டியை வெளியே எடுத்து மேஜைமீது பொத்தென்று வைத்தார். எனக்கு உண்டான திகைப்பு இவ்வளவு என்று சொல்ல முடியாது.

''ஆனால் அமூல்யன் போகவே இல்லையா?' என்று ஆச்சரியத்தோடு கேட்டேன்.

''எங்கே போகவில்லையா என்று கேட்கிறீர்கள்?''

''கல்கத்தாவுக்கு.''

''இல்லையே!'' என்றார் ஸந்தீப்.

''ஹா! அப்படியானால் யாவற்றையும் மீறி என் ஆசிர்வாதம் பலித்துவிட்டது. அமூல்யனுக்கு இனிமேல் பயம் இல்லை. அவன் மட்டும் சௌக்கியமாக இருந்தால் உண்மையான குற்றவாளியாகிய என்னைக் கடவுள் தண்டிக்கட்டும்; பாதகம் இல்லை.''

என் முகத்தில் ஏற்பட்ட மாறுதலைக் கண்டு ஸந்தீப் என்னை இகழ்ச்சியுடன் நோக்கினார். ''என்ன அவ்வளவு சந்தோஷம்? ராணி! இந்த நகைகள் அவ்வளவு விலை உயர்ந்தனவா? அப்போது எப்படி அவைகளைப் பாரத மாதாவுக்கு அளிப்பதாகச் சொன்னீர்கள்? நீங்கள் ஏற் கனவே அவைகளைக் கொடுத்தாயிற்றே! மறுபடியும் எடுத்துக்கொள்வதாக இருக்கிறீர்களா?''

கர்வம் லேசில் குன்றாது. கடைசிவரையில் தலை தூக் கியே நிற்கும். அந்த நகைகளை நான் சிறிதும் பொருட் படுத்தவில்லை என்று ஸந்தீபுக்குக் காட்ட வேண்டாமா?

''தங்களுக்கு அவைகள்மேல் ஆசை இருந்தால் எடுத்துக்கொள்ளலாமே'' என்றேன்.

''இன்று வங்காளத்திலுள்ள செல்வம் முழுவதும் கிடைத்தாலும் என் ஆசை அடங்காது. பேராசையைக் காட்டிலும் சக்தி வாய்ந்தது வேறொன்று உண்டா? இந்திரனுடைய ஐராவதம்போல், உலகிலுள்ள மகா வீரர்களின் யானை அல்லவா அது? அப்படியானால் இந்த நகைகள் என்னுடையவை என்று சொல்லுங்கள்!''

இவ்வாறு கூறிவிட்டு ஸந்தீப் நகைப் பெட்டியை எடுத்து மீண்டும் தம் ஆடைக்குள் வைத்துக்கொண்டார். அதே சமயத்தில் அமூல்யன் உள்ளே ஓடிவந்தான். அவன் கண்கள் பள்ளத்தில் விளங்க அவன் உதடுகள் உலர்ந்து போயிருந்தன. அவன் இளமை ஒரே நாளில் வாடிப் போய்விட்டதுபோல் தோன்றிற்று. அவனை இந்நிலையில் காண என் உள்ளம் வேதனையுற்றது.

"என் பெட்டி எங்கே? என் டிரங்கிலிருந்து நகைப் பெட்டியை எடுத்தீர்களா?" என்று கேட்டுக்கொண்டே அவன் என்னைப் பாராமல் ஸந்தீபை நோக்கிச் சென்றான்.

"உன் நகைப்பெட்டியா?" என்றார் ஸந்தீப், பரிகாசமாக.

"டிரங்கு என்னுடையது அல்லவா?"

ஸந்தீப் சிரித்தார். "என்னுடையதென்றும் உன்னுடையதென்றும் நீ செய்திருக்கும் பிரிவுகள் அவ்வளவு தெளிவாக இல்லை. அமூல்யா! கடைசியில் நீ ஓர் ஆசாரியனாகப் போகிறாய் என்று நினைக்கிறேன்" என்றார்.

அமூல்யன் முகத்தில் கையை வைத்துக்கொண்டு ஒரு நாற்காலியில் சாய்ந்துவிட்டான். நான் அருகில் சென்று அவன் தலையில் என் கையை வைத்தேன்.

"அமூல்யா, என்ன சிரமம் ஏற்பட்டது?" என்றேன்.

அவன் எழுந்து நின்றுகொண்டு, "உங்கள் நகைகளை நானே என் கையால் உங்களிடம் திருப்பிக் கொடுக்க வேண்டும் என்று நினைத்திருந்தேன். ஸந்தீப் பாபுவுக்கு அது தெரியும். அதற்காக என்னை முந்திக்கொண்டு விட்டார்" என்றான்.

"நகைகள் எப்படியோ போகட்டும்; எனக்கு ஒன்றும் கவலை இல்லை" என்றேன்.

"போகட்டுமா? எங்கே போவது?" என்றான் அச் சிறுவன் திகைப்புடன்.

"அந்த நகைகள் என்னுடையவை. ராணி அவைகளை எனக்கு அளித்துவிட்டாள்" என்றார் ஸந்தீப்.

"ஐயையோ! கூடாது!" என்று அமூல்யன் கூவினான்.

"அப்படிச் செய்யவேண்டாம். அக்கா, நான் உங்களுக்காக அல்லவா கொண்டுவந்தேன்? அவைகளை ஒருவருக்கும் நீங்கள் கொடுக்கலாகாது!"

"அப்பா! நீ கொடுத்தால் நான் சந்தோஷமாகப் பெற்றுக்கொள்கிறேன். ஆனால் அவைகளின் மேல் ஆசை வைத்திருப்பவர்கள் தங்கள் ஆசையை நிறைவேற்றிக்கொள்ளட்டுமே!"

அமூல்யன் ஸந்தீபை விழுங்கிவிடுபவன் போல் நோக்கினான்.

"ஸந்தீப் பாபு! தூக்கில் இடுவதைப் பற்றிக்கூட நான் சிறிதும் அஞ்சாதவன் என்பது உங்களுக்குத் தெரியும். நீங்கள் மட்டும் தைரியமாக அந்த நகைப்பெட்டியை எடுத்துக்கொள்வதாக இருந்தால்..."

பரிகாசமாகச் சிரித்துக்கொண்டே ஸந்தீப், "அமூல்யா, உனக்கு நான் பயந்தவன் அல்ல என்பதை இதற்குள் நீயும் அறிந்துகொண்டிருக்கலாமே!" என்றார். பிறகு என்னை நோக்கி, "ராணி, இந்த நகைகளை நான் எடுத்துக்கொண்டு போக இன்று வரவில்லை. உங்களிடம் அவைகளைக் கொடுக்கவே வந்தேன். நான் அளித்த பரிசை நீங்கள் அமூல்யனிடமிருந்து வாங்கிக்கொள்வது சரியா? அதைத் தடுப்பதற்காகவே முதலில் நகைகள் என்னுடையவை என்று ஸ்திரப்படுத்திக்கொள்ளும்படி ஆயிற்று. எனக்குச் சொந்தமான இந்த நகைகளை இப்போது நான் உங்களுக்குப் பரிசாக அளிக்கிறேன். இதோ இருக்கின்றன; எடுத்துக்கொள்ளுங்கள். உங்கள் விவகாரத்தை எப்படியோ பார்த்துக்கொள்ளுங்கள். நான் போகிறேன். என்னை விலக்கிவிட்டு நீங்கள் இருவரும் சேர்ந்து என்ன என்னவோ ரகசியம் பேசினீர்கள். ஏதாவது விபரீதமாக நடந்தால் இனிமேல் என்னைக் குற்றம் சொல்லாதீர்கள்" என்றார்.

'அமூல்யா, உன் பெட்டி முதலியவற்றை உன் இடத்துக்கு அனுப்பிவிட்டேன். உன் சாமான்கள் ஒன்றையும் இனிமேல் என் அறையில் வைக்காதே!" இவ்

வாறு கடைசியாக உத்தரவு செய்துவிட்டு, ஸந்தீப் வேகமாக அவ்விடத்தை விட்டு வெளியே சென்றார்.

"அமூல்யா! நகைகளை விற்கும்படி உன்னை அனுப்பியது முதல் எனக்கு மனநிம்மதி இல்லை" என்றேன்.

"ஏன் அக்கா அப்படி?" என்றான் அமூல்யன்.

"அவைகளால் உனக்கு ஏதாவது துன்பம் விளையுமோ, நீ திருடியதாகச் சந்தேகித்தால் என்ன செய்கிறது என்று பயந்தேன். அந்த ஆறாயிரம் ரூபாய் போனால் போகட்டுமே; நீ என் பொருட்டு இன்னும் ஒரு காரியம் செய்ய வேண்டும். நீ உன் வீட்டுக்கு உன் அன்னையிடம் போய்ச் சேர்."

அமூல்யன் ஒரு சிறு மூட்டையை வெளியே எடுத்து, "இதோ அந்த ஆறாயிரம் ரூபாய்" என்றான்.

"இது எப்படிக் கிடைத்தது?"

"சவரன்களாகக் கொண்டுவர வேண்டும் என்று பார்த்தேன், கிடைக்கவில்லை. நோட்டுக்கள்தாம் கிடைத்தன" என்று அவன் நான் கேட்டதற்குப் பதில் கூறாமலே சொன்னான்.

"உண்மையைக் கூறு அமூல்யா! எங்கிருந்து இந்தப் பணம் உனக்குக் கிடைத்தது?"

"அதைச் சொல்ல முடியாது" என்றான் அமூல்யன்.

என் கண்களுக்கு எல்லாம் இருண்டு போய்விட்டது போல் தோன்றிற்று. "என்ன பயங்கரமான காரியம் செய்தாய்? அமூல்யா! ஆனால் அந்தப் பணம்..."

"தவறான வழியில் கிடைத்தது என்று நீங்கள் சொல்லுவீர்கள் என்று தெரியும். வாஸ்தவம்! நானே அதை ஒப்புக்கொள்ளுகிறேன். ஆனால் அந்தப் பிழைக்குத் தக்க பதில்தான் செய்தாய்விட்டதே. ஆகவே அந்தப் பணம் எனக்குச் சொந்தமானதுதான்."

எனக்கு அதற்குமேல் அதைப்பற்றிக் கேட்க விருப்பம் இல்லை. என் உடலிலுள்ள ரத்தக்குழாய்களெல்லாம் இறுகிவிட்டன. என் அங்கமெல்லாம் குன்றிவிட்டது.

"அமூல்யா! அதைத் எடுத்துக்கொண்டு போய் எடுத்த இடத்திலேயே வைத்துவிடு" என்று கெஞ்சினேன்.

"அது மிகக் கஷ்டமாயிற்றே!"

"ஒன்றும் கஷ்டம் இல்லை. என்னை நீ முதலில் பார்த்தது கெட்ட வேளை என்று நினைக்கிறேன். என்னைப் போல் ஸந்தீப் பாபுகூட உனக்கு இவ்வளவு தீங்கு செய்ய முடியவில்லையே."

ஸந்தீபின் பெயரைக் கேட்டவுடன் வாளால் குத்துண்டவன் போன்ற உணர்ச்சி அவனுக்கு உண்டாயிற்று.

'ஸந்தீப் பாபுவா? நீங்கள் அல்லவா அம்மனிதன் எப்படிப்பட்டவன் என்பதை நான் அறியும்படி செய்தீர்கள்?" என்றான் அமூல்யன்.

"நீங்கள் கொடுத்த சவரன்களிலிருந்து ஒரு தம்பிடிகூட அவர் செலவழிக்கவில்லை என்பது உங்களுக்குத் தெரியுமா? இங்கிருந்து நேராகத் தம் அறைக்குச் சென்று அந்தச் சவரன்கள் அவ்வளவையும் கீழே கொட்டி அழகு பார்த்துக்கொண்டிருந்தார். 'இவை சவரன்கள் அல்ல; சக்தியாகிய தாமரைமலரின் இதழ்கள்! சொர்க்கத்தில் வாசிக்கும் குழல்களிலிருந்து எழும் இசைத் தாரைகள் ஒன்று சேர்ந்து இறுகிச் சொர்ணமாய் இருக்கின்றன! எனக்கு இவைகளை ரூபாய்களாக மாற்ற மனம் இல்லை. சௌந்தரிய தேவதையின் கழுத்தை அலங்கரிப்பதற்கு ஆவல் கொண்டுள்ளவை போல இவை தோன்றுகின்றன. பையா, அமூல்யா! இவைகளைச் சாதாரணக் கண்களோடு பார்க்காதே! இவைகள் ஸ்ரீதேவியின் புன்னகை ஒளி அல்லவா! அந்த முரட்டு மானேஜரிடம் இவைகளை எப்படிக் கொடுப்பேன்? முடியாது; அவன் பொய்தான் கூறியிருக்க வேண்டும். படகு கவிழ்ந்து போகும்படி செய்தவனை இன்னும் போலீஸார் கண்டுபிடிக்கவில்லை. அதிலிருந்து மானேஜர் ஏதோ பயன் பெறப் பார்க்கிறான். அவனிடமிருந்து அந்தக் கடிதங்களைத் திருப்பிவிட வேண்டும்' என்றார்.

"அதற்கு என்ன செய்வது?' என்று கேட்டேன். 'பயமுறுத்தியோ பலவந்தமாகவோ வாங்க வேண்டும்' என்று

சொன்னார். அந்தச் சவரன்களைத் திருப்பிக் கொடுத்து விடுவதாக இருந்தால் நான் அப்படிச் செய்வதாகச் சொன்னேன். 'அதைப்பற்றி அப்புறம் யோசித்துக் கொள்வோம்' என்றார். அந்த மானேஜரை நான் எப்படியெல்லாம் பயமுறுத்தி அந்தக் கடிதங்களை வாங்கி எரித்தேன் என்பதைச் சொன்னால் அதுவே ஒரு பெரிய கதையாகும். அன்றிரவே நான் ஸந்தீபிடம் சென்று, 'இனிமேல் நமக்குப் பயமில்லை. அந்தச் சவரன்களை என்னிடம் கொடுத்தால் நாளை என் அக்காவிடம் அவைகளைக் கொடுத்து விடுகிறேன்' என்றேன்.

" 'உனக்குப் பைத்தியமா அமூல்யா! உன் அருமைச் சகோதரியின் சேலைக்குள் நாடு முழுவதுமே மறைந்து விட்டதா? வந்தேமாதர மந்திரத்தை ஜபித்து அப்பேயை விரட்டிவிடு' என்றார்.

"அக்கா! ஸந்தீபின் சக்திதான் உங்களுக்கு நன்றாகத் தெரியுமே! சவரன்கள் அவரிடமே இருந்துவிட்டன. நானும் 'வந்தே மாதர'த்தை உருப்போட்டுக்கொண்டு இரவு முழுவதும் ஏரிப் படிகளிலேயே கிடந்தேன். நகைகளை விற்கும்படி நீங்கள் என்னிடம் கொடுத்தபோது நான் மறுபடியும் ஸந்தீபிடம் சென்றேன். அவருக்கு என் மேல் கோபம் என்று தெரிந்தது. ஆனால் அதை அவர் காட்டிக்கொள்ளவில்லை. 'என் பெட்டியில் எங்கேயாவது நான் அவைகளைப் பத்திரப்படுத்திவைத்திருந்தால் பார்த்து எடுத்துக்கொள்' என்று சொல்லிச் சாவிகளை என்னிடம் எறிந்தார். அந்தச் சவரன்களை எங்கும் காணவில்லை. 'எங்கே வைத்திருக்கிறீர்கள்? சொல்லுங்கள்' என்று கேட்டேன்.

" 'உனக்கு இப்போது உள்ள பைத்தியம் எப்போது தெளிகின்றதோ அப்போது சொல்லுகிறேன்' என்று பதில் சொன்னார்.

"அவரைக் கொஞ்சமும் அசைக்க முடியாது என்று தெரிந்ததும் நான் வேறு வழிகளைக் கையாளும்படி ஆயிற்று. ஆறாயிரம் ரூபாய் நோட்டுக்களைக் கொண்டு வந்து கொடுத்துப் பதிலுக்கு அந்தச் சவரன்களை அளிக்

கும்படி கேட்டேன். கொடுப்பதாகச் சொல்லி அறைக்குள் சென்றவர் என் பெட்டியைத் திறந்து அதிலிருந்து நகைப் பெட்டியை எடுத்துக்கொண்டு வேறு வழியாக உங்களிடம் வந்துவிட்டார். அதை நான் கொண்டுவந்து கொடுப்பது அவருக்கு இஷ்டமில்லை. இப்போது தைரியமாக அதைத் தம்முடைய பரிசு என்று கூறிக் கொள்கிருர். அவரால் நான் பறிகொடுத்தது எவ்வளவு என்று சொல்லுவேன்! அவரை நான் மன்னிக்க முடியுமா? அக்கா, இனிமேல் அவர் என்னை ஒன்றும் செய்ய முடியாது. உங்களால்தான் அவர் சக்தி முறிந்து போயிற்று.''

''அப்படியானல் அமூல்யா! என் ஜன்மம் சபலமாயிற்று. இன்னும் செய்ய வேண்டியது எவ்வளவோ இருக்கிறது. அவர் சக்தி குறைந்தது என்ருல் மட்டும் போதாது. அதன் சின்னங்களே இல்லாமல் துடைக்க வேண்டும். இனியும் தாமதம் செய்யாமல் உடனே போய் இந்தப் பணத்தை எடுத்த இடத்திலேயே வைத்துவிடப்பா! இதைச் செய்ய முடியாதா?''

''அக்கா! உங்கள் ஆசீர்வாதத்தால் எல்லாம் சாத்தியமாகும்.''

''நானும் சேர்ந்து இந்தப் பாவத்துக்குத் தக்க பரிகாரம் தேடுகிறேன். நான் ஸ்திரீயாகையால் வெளியே போய் ஒன்றும் செய்ய முடியாதவளாக இருக்கிறேன். இல்லாவிட்டால் நானே போவேன். என் பாவத்தை உன்மேல் சுமத்தவேண்டி இருப்பதுதான் எனக்கு வாய்த்திருக்கும் பெரிய தண்டனை என்று சொல்லவேண்டும்.''

''அக்கா! அப்படிச் சொல்லவேண்டாம். நான் சென்ற வழி உங்கள் வழி அல்ல, அதிலுள்ள சிரமங்களையும் ஆபத்துக்களையும் அறிந்தே நான் அவ்வழியைப் பின்பற்ற ஆவல் கொண்டேன். இப்போது உங்கள் வழியில் செல்லும்படி நீங்கள் அழைக்கிறீர்கள். அது இன்னும் ஆயிரம் மடங்கு அபாயகரமாகவும் சிரமமாகவும் இருந்தாலும் தங்கள் பாத தூளியைச் சிரமேல் தரித்து அவைகளை யெல்லாம் கடந்து செல்வேன். இந்தப்

பணத்தை எடுத்த இடத்திலேயே மீண்டும் வைத்துவிட வேண்டும் என்பதுதானே தங்கள் ஆக்ஞை?''

''என் ஆக்ஞை அல்ல, அமூல்யா! அது தெய்வத்தின் ஆக்ஞையாகும்.''

''அதென்னவோ எனக்குத் தெரியாது. தெய்வத்தின் ஆக்ஞை என்று உங்கள் வாயிலிருந்து வந்தால் எனக்குப் போதும், அக்கா! என்னை எதற்கோ அழைத்தீர்களே! அது இல்லாமல் போகமாட்டேன். போவதற்கு முன் உங்கள் பிரசாதத்தை அளியுங்கள். பிறகு முடியுமானால் இன்று மாலையே என் காரியத்தை முடித்துவிடுகிறேன்'' என்றான் அமூல்யன்.

''ஆகட்டும்'' என்று நான் புன்னகையுடன் கூறிய போதே என் கண்களில் நீர் நிறைந்தது.

அமூல்யன் சென்றதும் திடீரென்று என் மனத்தில் கவலை தோன்றிற்று. தாய்க்கு ஒரே பிள்ளையான இந்தச் சிறுவனுக்கு என்ன ஆபத்தான வேலையைச் சொல்லி அனுப்பிவிட்டேன்! தெய்வமே! நான் செய்த பாவத்துக்கு இவ்வளவு பெரிய தண்டனையா? அந்தத் தண்டனையை ஊரில் உள்ளவர்கள் எல்லாரும் சேர்ந்து அநுபவிக்கும்படி செய்யாமல் நான் மட்டும் அநுபவிக்கலாகாதா? தெய்வமே! இந்தக் குற்றமற்ற சிறுவன் உன் கோபத்துக்கு ஆளாகாமல் இருக்கும்படி கிருபை செய்!

''அமூல்யா!'' என்று அவனைக் கூப்பிட்டேன். என் குரல் மிகவும் மெதுவாக இருந்ததால் அவன் காதுக்கு எட்டவில்லை. கதவின் அருகில் சென்று மீண்டும் கூப்பிட்டேன். அவன் போய்விட்டான்.

''யாரடா அங்கே?'' என்று வேலைக்காரனைக் கூப்பிட்டேன்.

''என்ன அம்மா!''

''அமூல்ய பாபுவிடம் போய் நான் கூப்பிட்டதாகச் சொல்.''

வாஸ்தவத்தில் என்ன நடந்தது என்பதையும், அமூல்யன் யார் என்பதையுமே அந்த ஆள் அறிந்துகொள்ள

வில்லையோ என்னவோ? அவன் போய் உடனே ஸந்தீ புடன் திரும்பி வந்தான்.

"நீங்கள் என்னை அனுப்பிய நிமிஷமே மறுபடியும் என்னைக் கூப்பிடுவீர்கள் என்று எனக்குத் தோன் றிற்று" என்றார் ஸந்தீப்; "சந்திரனின் ஆகர்ஷண சக்தியே கடல் பொங்குவது, வடிவது இரண்டுக்கும் காரணமாக இருக்கிறது. நீங்கள் கூப்பிட்டு அனுப்புவீர்கள் என்ற நிச்சயத்தினால் நான் வெளியிலேயே காத்துக்கொண் டிருந் தேன். உங்கள் ஆளைக் கண்டதும் அவன் கூறுவதற்கு முன்னாலேயே, 'இதோ நான் அங்கேதான் வந்துகொண் டிருக்கிறேன்' என்று சொல்லிவிட்டேன். அந்த வடக் கத்திப் பயல் நிரம்ப ஆச்சரியம் அடைந்துவிட்டான்; எனக்கு ஏதாவது மந்திரம் தெரியுமோ என்று பிர மித்துப் போய் அவன் என்னை வெறித்துப் பார்த்தான். ராணி! உலகில் உள்ள எல்லாச் சண்டைகளுமே உண்மையில் மந்திரதேவதைகளுக்குள் ஏற்படும் சண்டை கள் என்றுதான் சொல்லவேண்டும். ஒரு மந்திர சக்தியை வெல்ல மற்றொரு மந்திர சக்தி. சப்தமில்லாத அஸ்திரங் கள் கண்ணுக்குத் தெரியாதவற்றைத் தாக்குகின்றன. கடைசியில் எனக்கு எதிராளியாக உங்களை நான் கண் டேன். வீர ராணியாகிய உங்கள் தூணியில் நிறைய அம்புகள் இருக்கின்றன என்று தெரியும். இவ்வுலகில் நீங்கள் ஒருவர்தாம் உங்கள் இச்சைப்படி ஸந்தீபை அனுப்பவும் மீண்டும் கூப்பிடவும் தைரியம் உள்ளவர் ஆனீர்கள். உங்கள் வேட்டை இலக்கு இப்போது உங்கள் காலடியிலேயே கிடக்கிறது. அதை என்ன செய்வ தாக இருக்கிறீர்கள்? விட்டுவிடப் போகிறீர்களா, கூண்டில் அடைத்து வைப்பீர்களா? ராணி, நான் முன்பே எச்சரிக்கை செய்துவிடுகிறேன். மிருகத்தைக் கொல்லுவதைப் போலவே கட்டிவைப்பதும் கஷ்டந்தான். உங்கள் மந்திர சக்தியைப் பிரயோகிப்பதற்கு இன்னும் ஏன் தாமதம்?" என்றார்.

தமக்குத் தோல்வி கிட்டிவிட்டது என்பதை ஸந்தீப் உணர்ந்திருக்க வேண்டும். அதனால்தான், பதில் கூறு வதற்குக் காத்திருக்காமல் ஏதோ விடாமல் பேசிக்

கொண்டு காலதாமதம் செய்துகொண் டிருந்தார்; நான் அமூல்யனைத்தான் அழைத்து வரும்படி ஆளை அனுப்பி னேன் என்பது அவருக்குத் தெரியும். ஆள் அமூல்யனின் பெயரையே கூறியிருப்பான். அப்படி இருக்கும்போது அவர், வேண்டும் என்றே இந்தச் சூழ்ச்சி செய்திருக்கிறார். 'நான் அமூல்யனைத்தான் கூப்பிட்டேன்' என்பதைச் சொல்ல இடம் கொடுக்காமல் இருக்க அவர் இப்போது முயன்றுகொண் டிருந்தார். ஆனால் அவர் தந்திரம் பலிக்க வில்லை. அவருடைய பலக்குறைவு எனக்கு நன்றாகத் தெரிந்தது. இனிமேல் துளிகூட அவருக்கு இடம் கொடுக்கக்கூடாது.

"ஸந்தீப் பாபு! நிறுத்தாமல் நீங்கள் இப்படிச் சொற்பொழிவு ஆற்றும் ரகசியம் என்ன? இவைகளை முன்னாலேயே தயார் செய்துகொள்ளுகிறீர்களா?" என்றேன்.

ஸந்தீபின் முகம் உடனே சிவந்தது.

"பேசுவதே தொழிலாகக் கொண்டவர்கள் எந்த விஷயத்தைக் குறித்தும் பேசுவதற்கென்று தயார் செய்தி ருக்கும் ஒரு புத்தகம் வைத்துக்கொண் டிருக்கிறார் களாமே! நீங்களும் அப்படி ஏதாவது புத்தகம் வைத்திருக் கிறீர்களா?" என்றேன்.

ஸந்தீப் பற்களைக் கடித்துக்கொண்டார்.

"கடவுள் எவ்வளவோ ஜாலங்களை ஸ்திரீகளாகிய உங்களுக்கு அளித்திருக்கிறார். அவை போதா என்று ஆடையாபரணங்கள் வேறு. ஆனால் எங்களை அடியோடு சக்தியற்றவர்கள் என்று நினைத்துவிடாதீர்கள்" என்றார்.

"நீங்கள் போய் உங்கள் புத்தகத்தை எடுத்துப் பாருங்கள், ஸந்தீப் பாபு! உங்கள் பேச்சு முழுவதும் தவறாக இருக்கிறது. உருப்போட்டு ஒப்பிப்பதில் இந்தக் கஷ்டந்தான்" என்றேன்.

ஸந்தீபுக்குக் கோபம் தாங்க முடியாமல் போயிற்று. "நீங்களா! நீங்களா என்னை இப்படி அவமதித்துப் பேசு

கிறீர்கள்? உங்களைப்பற்றி எனக்குத் தெரியவேண்டியது இன்னும் ஏதாவது உண்டா?'' அவரால் அதற்குமேல் பேச முடியவில்லை.

மந்திர சக்தி வாய்ந்த ஸந்தீப் தம் மந்திரம் பலிக்காத சமயங்களில் அடியோடு சக்தியற்றவர் ஆகிவிடுவார். அரசனைப் போன்றவர் இப்போது வெறும் நாடோடியின் நிலைமைக்கு வந்துவிட்டார். அவர் பலஹீனத்தைக் காண்பதில்தான் எனக்கு என்ன ஆனந்தம்! அவர் கண்டபடி முரட்டுத்தனமாகப் பேசப் பேச என் உள்ளம் சந்தோஷத்தால் பூரித்தது. பாம்புபோல் என்னை இறுகச் சுற்றியிருந்த அவர் பிடிப்புத் தளர்ந்தது. நான் விடுதலை அடைந்துவிட்டேன்; தப்பிவிட்டேன். என்னை அலக்ஷ்யம் செய்து அவமதித்துப் பேசுங்கள். அது உங்கள் உண்மைக் குணத்தைத்தான் காட்டும். என்னைப் பொய்யாக மட்டும் ஸ்தோத்திரம் செய்யாமல் இருந்தால் போதும்!

இந்தச் சமயத்தில் என் கணவர் உள்ளே வந்தார். முன்போல் வெகு லாகவமாகச் சமாளித்துக்கொள்ள ஸந்தீபால் இப்போது முடியவில்லை. என் கணவர் அவரை வியப்புடன் நோக்கினார். சில தினங்களுக்கு முன் இவ்வாறு நடந்திருந்தால் நான் மிகவும் அவமானம் அடைந்திருப்பேன். ஆனால்—என் கணவர் எப்படி வேண்டுமானாலும் நினைத்துக்கொள்ளட்டும்—இன்று எனக்கு மிகவும் திருப்தியாக இருந்தது. பலம் குறைந்த என் எதிரியுடன் முழுவதும் போர்புரிந்து தீர்த்துவிடுவது என்று நிச்சயித்தேன்.

நாங்கள் இருவரும் ஏதோ ஒரு மாதிரியாகப் பேசாமல் இருப்பதைக் கண்டு என் கணவர் சற்றுத் தயங்கினார். பிறகு ஒரு நாற்காலியில் உட்கார்ந்துகொண்டு, "ஸந்தீப், உன்னைப் பார்க்க வேண்டும் என்று தேடினேன். நீ இங்கே இருப்பதாகச் சொன்னார்கள்'' என்றார்.

"ஆம், நான் இங்கேதான் இருக்கிறேன்'' என்று ஸந்தீப் அழுத்திச் சொன்னார். "ராணி இன்று அதிகாலையில் என்னை வரும்படி சொல்லியனுப்பினாள். சாதாரணத் தொண்டனாகிய நான் உடனே எல்லா வேலை

களையும் விட்டுவிட்டு அவள் உத்தரவை நிறைவேற்ற வந்தேன்.''

''நான் நாளைக்குக் கல்கத்தாவுக்குப் போகிறேன். நீயும் என்னுடன் வரவேண்டும்.''

''ஏன்? நான் எதற்கு வர வேண்டும்? நான் என்ன, உன் வேலைக்காரர்களுள் ஒருவனா?''

''சரி! அப்படியானால் நீ கல்கத்தாவுக்குப் புறப்பட்டுப் போகிறாய்; நான் உன் பின்னால் வருகிறேன் என்று தான் வைத்துக்கொள்.''

''எனக்கு அங்கே ஒரு வேலையும் இல்லையே.''

''அதனால்தான் அங்கே போக வேண்டும் என்கிறேன். உனக்கு இங்கே வேலை மிதமிஞ்சிப் போய்விட்டது.''

''எனக்கு இவ்விடத்தை விட்டுக் கிளம்புவதாக உத்தேசம் இல்லை.''

''ஆனால் நான் உன்னைக் கிளப்புவதாக உத்தேசித் திருக்கிறேன்.''

''பலவந்தமாகவா?''

''ஆம், பலவந்தமாகத்தான்.''

''நல்லது; அப்படியானால் நான் புறப்படுகிறேன். ஆனால் உலகில் கல்கத்தாவும் உன் ஜமீனுந்தான் உள்ளனவா? வேறு எவ்வளவோ இடங்கள் இருக்கின்றனவே?''

''நீ இருப்பதைப் பார்த்தால் என் ஜமீனைக் காட்டிலும் உனக்கு வேறு போக்கிடமே உலகில் இல்லை என்றே தோன்றுகிறது.''

ஸந்தீப் எழுந்து நின்றார். ''சில சமயம் மனிதனுக்கு உலகம் முழுவதும் ஒரு சிறிய இடத்தில் அடங்கிவிடுவது உண்டு. அப்படியே இந்த டிராயிங் ரூம்தான் உலகம் என்று நான் நினைத்தேன். அதனால்தான் இங்கேயே ஸ்திரமாகத் தங்கிவிட்டேன்.''

இவ்வாறு கூறிவிட்டு அவர் என் பக்கம் திரும்பி, ''ராணி! உங்களைத் தவிர வேறு ஒருவருக்கும் இந்தச்

சொற்களின் அர்த்தம் விளங்காது. ஒருவேளை உங்களுக்கே விளங்காமல் இருந்தாலும் இருக்கலாம். நான் உங்களை வணங்குகிறேன். என் உள்ளத்தில் உங்களைப் பூஜித்துக்கொண்டே செல்கிறேன். உங்களைப் பார்த்தது முதல் என்னுடைய தாரக மந்திரமானது மாறிவிட்டது. 'வந்தே மாதரம்' என்பது போய் 'வந்தே பிரியாம். வந்தே மோகினீம்' என்று ஆகிவிட்டது. தாய் சம்ரக்ஷிப்பாள். காதலியோ, நாசத்தை உண்டுபண்ணுபவள் ஆவாள். ஆனால் அவ்வாறு நாசத்தை அடைவதும் இனிமையாகவே இருக்கும். உங்கள் பாதசரத்தின் ஒலி, ஊழிக்கால நடனம்போல் என் உள்ளத்தில் சப்திக்கும்படி செய்தீர்கள். 'ஸுஜலாம் ஸுபலாம்' என்று வர்ணிக்கும்படி விளங்கிய இந்த வங்காளத்தையே என் கண்களுக்கு வேறு விதமாகத் தோன்றும்படி செய்துவிட்டீர்கள். என் அன்பே! உனக்கு இரக்கம் இல்லை. கிண்ணத்தில் விஷத்தை நிரப்பி எடுத்துக்கொண்டு நீ என்னை அணுகினாய். துடித்து உயிர் விடுவதா, மரணத்தையே வென்று உயிர் வாழ்வதா? எப்படி ஆனாலும் நான் அவ்விஷத்தைக் குடித்தே தீருவேன்.

"ஆம், அன்னையின் காலம் கடந்துவிட்டது. என் அன்பே! நேர்மை, சத்தியம், பரலோகம் எல்லாம் இல்லாமல்செய்துவிட்டாய். கடமைகள் யாவும் அர்த்தமில்லாமல் ஆகிவிட்டன. ஒழுக்கம், கட்டுப்பாடு யாவும் தம் கட்டுக்களை அறுத்தெறிந்துவிட்டன. அன்பே! இந்த நாட்டுக்கு வெளியே உன் மிருதுவான பாதம் பட்ட இடங்களில் எல்லாம் நெருப்பு வைக்கவும் எரிந்து போன அந்தச் சாம்பல் குவியலில் நடனம் செய்யவும் நான் சித்தமாக இருக்கிறேன். 'இவர்கள் நல்லவர்கள், இவர்கள் சாந்தமானவர்கள், இவர்கள் எல்லாருக்கும் நன்மையைச் செய்பவர்கள்!' இவற்றில் எல்லாம் என்ன இருக்கிறது! ஆம், இந்த என் சத்தியமான அன்பைத் தவிர உலகில் வேறு எதுவும் நிஜம் அல்ல. நான் உன்னைப் போற்றி வணங்குகிறேன். உன்னிடத்திலுள்ள பக்தியும் அன்பும் என்னைக் குரூரமாக்கிவிட்டன. உன் வழிபாட்டினால் சகலத்தையும் அழிக்கத் துடித்துக்கொண் டிருக்கும் அனலானது என்னுள்ளே மூண்டுவிட்டது. எனக்கு நேர்மை இல்லை; நம்பிக்கை

இல்லை. யாரை உலகில் யாவற்றுக்கும் மேல் உயர்வாக உணர்ந்தேனோ அவனைத்தான் நான் நம்புகிறேன்.''

ஆகா! எப்படிப் பேசினார் அவர்! ஒரு கணத்துக்கு முன்புதான் மனப்பூர்வமாக அவரை வெறுத்தேன். ஆனால் வெறும் சாம்பல் என்று நான் எண்ணியது தக தகவென்று ஜொலிக்கும் கனலாக அல்லவோ இருக்கிறது; அவர் உணர்ச்சி வேகம் உண்மை என்பதில் சந்தேகம் இல்லை. ஆகா! கடவுள் எதற்காகப் புருஷனை இவ்வாறு நல்லது, கெட்டது இரண்டையும் சேர்த்துப் படைத்தார்? தம்முடைய அமானுஷ்யமான சக்தியைக் காட்டுவதற்கா? சில நிமிஷங்களுக்கு முன்பு மகா வீரன் என்று எனக்குத் தோன்றிய ஸந்தீப், கேவலம் நாடக மேடையில் நடிக்கும் ஒரு போலி வீரனே என்று தோன்றியது! ஆயினும் அதுவும் சரியல்ல; நாடக மேடையில் நடிக்கும் நடிகரிடத்திலும் சில வேளைகளில் வீரம் மறைந்திருக்கலாம்.

ஸந்தீபிடம் எவ்வளவோ கீழ்த்தரமான உணர்ச்சிகளும் பொய்யும் மிருகத்தன்மையும் காணப்பட்டன. ஆயினும் நமக்கு விளங்காத விஷயங்களும் எவ்வளவோ அவரிடம் இருந்தன என்பதையும் ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும். பொதுவாக எல்லார் செய்தியுமே அப்படித்தான் இருக்கிறது. மனிதனே மிக்க அதிசயமானவன். என்ன மாயமான காரியத்தை அவன் நிறைவேற்றிக்கொண்டிருக்கிறானோ அது அந்தப் பரமேசுவரனுக்குத்தான் தெரியும். இதன் நடுவில் நாம் அகப்பட்டுக்கொண்டு துன்பப்படுகிறோம். சிவன்தான் சங்கார கர்த்தா. அவர் எப்போதும் பேரின்பத்தில் இருப்பவர். நம்முடைய பந்தங்களை அவர் துண்டித்துவிடுவார்.

எனக்குள் இருவர் வாசம் செய்கிறார்கள் என்றே எனக்கு அடிக்கடி பட்டுக்கொண்டிருக்கிறது. ஸந்தீப், சங்காரமூர்த்தியாக விளங்கும்போது அவற்றுள் ஒருத்திக்குப் பயத்தினால் பின்னடையத் தோன்றுகிறது. மற்றொருத்திக்கு அதுவே மிக்க இஷ்டமானதாக இருக்கிறது. முழுகும் கப்பல் தன்னைச் சுற்றி நீந்திக்கொண்டிருப்பவர்களையும் சேர்த்து இழுத்துக்கொண்டு முழுகுகிறதல்லவா? அதைப்போலவே ஸந்தீபும் ஒரே அடியாகச்

சங்கரிப்பவராகவே இருக்கிறார். கண்டவுடனேயே அவர் நம் உள்ளத்தைப் பற்றிக்கொண்டு விடுகிறார். பிறகு தான் அவரிடம் அச்சம் ஏற்படுகிறது. ஒரு நொடிப் பொழுதில் நல்ல காற்று, வெளிச்சம். நன்மை என்று வாழ்க்கையில் நாம் போற்றி வந்தது, நம் தினசரிக் கவலை கள் யாவற்றையும் லகுவாகத் துறந்து மண்ணோடு மண்ணாக அழிந்துபோகும்படி ஆகிவிடுகிறது.

ஏதோ ஓர் உலகத்தினின்றும் ஸந்தீப் தூதாக அனுப் பப்பட்டிருக்கிறார் என்றே தோன்றுகிறது. கெட்ட மந்தி ரங்களை ஜபித்துக்கொண்டு அவர் உலாவி வரும்போது இளைஞர்கள் அனைவரும் அவரை வந்து சூழ்ந்துகொள் கிறார்கள். நாட்டின் இருதயத் தாமரையில் வீற்றிருக்கும் அன்னையோ மனம் உடைந்து அழுதுகொண் டிருக்கிறாள். ஏனெனில் அவளுடைய பொக்கிஷ அறையைத் திறந்து அதில் அவர்கள் தங்கள் களியாட்டத்தை நடத்திக் கொண்டிருக்கிறார்கள். அவர்களுக்கென்று அவள் சேமித்து வைத்திருக்கும் மதுவைக் குப்பையில் கொட்டி அவள் வெகு காலமாகக் காப்பாற்றி வைத்திருந்த பாத்தி ரங்களையும் அவர்கள் உடைத்தெறிகிறார்கள். எனக்கு அவளிடம் அநுதாபம் அதிகந்தான். ஆனாலும் அவர்கள் வெறி என்னையும் பற்றிக்கொள்ளாமல் விடவில்லை.

சத்தியமே அதிலுள்ள நம் நம்பிக்கையைச் சோதிப் பதன் பொருட்டு இவ்வாறு செய்திருக்கிறதோ என்று கூடத் தோன்றுகிறது. உன்மத்தமே தெய்விக வேஷம் தரித்து ஆடிப் பாடிக்கொண்டு பிரயாணிகளை நோக்கி, "மூடர்களே! பயனற்ற தியாகவழியைப் பின்பற்றுகிறீர் களே. அவ்வழியோ வெகு தூரமாகவும் தாமதமாகவும் உள்ளது. ஆகவே தேவராஜன் என்னை உங்களிடம் அனுப்பியிருக்கிறார். சௌந்தரியமும் காமவேகமும் படைத்த நான் உங்களை ஏற்றுக்கொள்கிறேன். என் னுடைய ஆலிங்கனத்தில் நீங்கள் ஜன்ம ஸாபல்யத்தை அடைவீர்களாக!" என்று கூறுகிறது.

சற்று நேரம் கழித்து ஸந்தீப் மறுபடியும் என்னை நோக்கி, "ராணி, நான் உங்களை விட்டுச் செல்லும் காலம் வந்துவிட்டது. அது நல்லதுதான். நீங்கள் அருகில்

இருப்பதனால் ஆகும் காரியம் முடிந்துவிட்டது. இனிமேல் இங்கே தாமதித்தால் அக்காரியம் மெள்ளக் கெட்டுப் போய்விடும். பேராசையினால் உலகில் மிக உயர் வானதை நாம் இழிவாக்கிவிட்டால் சகலமும் தொலைந்து போகும் அல்லவா? ஒரு கண நேரத்தில் முடிவற்றதாகத் தோன்றுவது காலத்தை வளர்த்தும்போது அற்பமாகி விடுகிறது. இறுதியற்று விளங்கிய நம் கணப் பொழுதை நாம் கெடுத்துவிடுவதாக இருந்தோம். அது தெய்வாதீன மாக உங்களால் தப்பிற்று. உங்கள் புனிதமான வழி பாட்டை நீங்கள்தாம் காப்பாற்றினீர்கள். அப்படியே உங்களைப் பூஜிப்பவனையும் காப்பாற்றி விட்டீர்கள். இன்று இவ்விடமிருந்து செல்லும்போது உங்களைப் பூஜித் ததுதான் யாவற்றிலும் சிறந்ததாக எனக்கு விளங்கு கிறது. ராணி, நானும் இன்று உங்களை விடுதலை செய்து விடுகிறேன். என் மண்கோவில் இனியும் உங்களைத் தாங்க முடியாது. எந்த நிமிஷம் அது வெடித்துவிடுமோ என்று இருக்கிறது. இன்று உங்களுடைய பெரிய உருவத்தைப் பெரிய கோவிலில் வைத்துப் பூஜிக்கும் பொருட்டுச் செல்கிறேன். தூரத்தில் இருந்துகொண்டு தான் உங்களை உண்மையாக அடைய முடியும். இங்கே உங்கள் அநுக்கிரகம் மட்டுந்தர்ன் கிடைத்தது. அங் கேயோ உங்கள் வரப்பிரசாதமே எனக்குக் கிடைக்கும்."

என் நகைப்பெட்டி மேஜைமீது கிடந்தது. நான் அதைத் தூக்கிப் பிடித்துக்கொண்டு, "இந்த நகைகளை நான் வழிபடும் தெய்வத்துக்கு அளிக்கும்படி உங்களை நியமிக்கிறேன். உங்கள் மூலமாக அவைகளை அர்ப் பணம் செய்துவிட்டேன்" என்றேன். என் கணவர் மௌனமாக இருந்தார். ஸந்தீப் அறையை விட்டுச் சென்றார்.

அமூல்யனுக்காகக் கொஞ்சம் பர்பிகள் தயார் செய்ய நான் உட்கார்ந்ததும் அங்கே என் ஓர்ப்படி வந்து சேர்ந்தாள்.

"அடி **அம்மா!** என்ன இது! உன் பிறந்த நாளுக்கு நீயே பக்ஷணங்கள் செய்துகொள்ள வேண்டுமா?" என்றாள்.

"வேறு ஒருவருக்காகவும் நான் செய்யக் கூடாதா?" என்று கேட்டேன்.

"ஆனால் நீ இன்று பிறரை அழைத்து விருந்து செய்வதா? நாங்கள் அல்லவா உனக்கு விருந்து செய்ய வேண்டும்? ஏதாவது தயார் செய்யலாம் என்று நான் இப்போது தான் நினைத்தேன். அதற்குள் இந்தச் செய்தி வந்து என்னை ஒரே அடியாகக் கலக்கிவிட்டது. ஐந்நூறு, அறுநூறு கொள்ளைக்காரர்கள் சேர்ந்து கஜானாவுக்குள் புகுந்து ஆறுயிரம் ரூபாயைக் கொள்ளையடித்துக்கொண்டு போய்விட்டார்களாம். அடுத்தபடியாக நம் வீட்டையே கொள்ளையடிப்பார்கள் என்று சொல்லுகிறார்கள்."

இதைக் கேட்க எனக்கு அப்பாடா என்று இருந்தது. கடைசியில் நம் பணந்தானே கொள்ளை போயிற்று? உடனே அமூல்யனை வரவழைத்து அந்த நோட்டுக்களை என் கணவரிடம் கொடுத்துவிடும்படி சொல்ல வேண்டும் என்று நினைத்தேன்.

என் முகத்தில் ஏற்பட்ட மாறுதலைக் கண்டதும் என் ஓர்ப்படி, "நீ அதிசயமான பெண் அம்மா! பயம் என்பதே உனக்குக் கிடையாதா?" என்றாள்.

"நம் வீட்டை எதற்குக் கொள்ளையடிக்கப் போகிறார்கள்? நான் அதை நம்பவில்லை" என்றேன்.

"நம்பவில்லையா? நம் கஜானாவை மட்டும் கொள்ளையடிப்பார்கள் என்று யார் நினைத்தார்கள்?"

நான் ஒன்றும் பதில் கூறாமல் தேங்காய்த் துருவலைப் போட்டுக் கிளறிக்கொண்டிருந்தேன்.

என்னைச் சிறிது நேரம் வெறிக்கப் பார்த்துவிட்டு அவள், "சரி, நான் போகிறேன். நிகிலைப் போய்ப் பார்த்து உடனே என் பணத்தைக் கல்கத்தாவுக்கு அனுப்பும் வழியைச் செய்ய வேண்டும்" என்றாள்.

அவள் சென்றதும் நான் பட்சணத்தை அப்படியே போட்டுவிட்டு என் அறைக்குள் சென்று கதவைத் தாழிட்டுக்கொண்டேன். சாவிக் கொத்துக்களுடன் என் கணவரின் சட்டை, ஸ்டாண்டில் தொங்கிக்கொண்டிருந்தது.

அவருக்கு அவ்வளவு மறதி! இரும்புப் பெட்டியின் சாவியை எடுத்து என் மடிக்குள் வைத்துக்கொண்டேன்.

அந்தச் சமயம் கதவைத் தட்டும் சப்தம் கேட்டது. "நான் புடைவை கட்டிக்கொண் டிருக்கிறேன்" என்றேன்.

"ஒரு நிமிஷம் முன்புதானே பட்சணம் பண்ணிக் கொண்டிருந்தாள். இதற்குள் இப்போது வெகு அவசர மாகப் புடைவை கட்டிக்கொண் டிருக்கிறுளாம்! அடுத்த படியாக என்ன செய்வாளோ! ஏதாவது வந்தே மாதரம் மீட்டிங் இருக்கும்" என்று என் ஓர்ப்படி கூறுவது கேட்டது. "என்னடி அம்மா! நீதான் கள்ளர்கள் ராணி ஆயிற்றே! திருட்டுச் சொத்தைக் கணக்குப் பார்த்துக் கொண்டிருக்கிருயா?" என்ருள்.

அவள் சென்ற பிறகு நான் எப்படி இரும்புப் பெட்டி யைத் திறந்தேனோ, தெரியாது. எல்லாம் ஒரு கனவு என்ற பிரக்ஞை எங்கோ ஒரு மூலையில் பதுங்கிக் கிடந் தது. இரும்புப் பெட்டியின் உள் அறையைத் திறந்ததும் முன்போலவே அந்தச் சவரன்கள் அங்கே இருந்தால் ? ஆனுல் அந்தோ! அங்கே ஒன்றையும் காணவில்லை. ஒரே சூனியமாக இருந்தது.

நான் மறுபடியும் பொய்யாகப் புடைவையைக் கட்டிக் கொண்டு கூந்தலையும் அநாவசியமாக அவிழ்த்து மீண்டும் கட்டிக்கொள்ள வேண்டியதாயிற்று. நான் வெளியே வந்ததும் என் ஓர்ப்படி, "இன்று எவ்வளவு தடவைதான் நீ புடைவையை மாற்றிக் கட்டிக்கொள்ளப் போகிருய்?" என்று பரிகசித்தாள்.

"என் பிறந்த நாள் அல்லவா?" என்றேன்.

"ஏதோ ஒரு சாக்கு. அலங்காரத்தில் ஆசையுள்ள வர்கள் எவ்வளவோ பேர்களை என் காலத்தில் பார்த் திருக்கிறேன். நீ அவர்களுக்கெல்லாம் மேலே போய் விட்டாயே!"

அமூல்யனை அழைத்து வருவதற்கு ஆளைக் கூப்பிட்ட போது ஒருவன் ஒரு காகிதத்துண்டைக் கொண்டுவந்து

என்னிடம் கொடுத்தான். அது அமூல்யனிடமிருந்து வந்திருந்தது.

"அக்கா! நீங்கள் இன்று மத்தியான்னம் வரும்படி அழைத்தீர்கள். ஆனால் நான் தாமதிப்பதற்கில்லை. முதலில் உங்கள் ஆக்ஞையைச் செய்து முடித்துவிட்டுப் பிறகு பிரசாதம் வாங்கிக்கொள்ள வருகிறேன். வருவதற்குக் கொஞ்சம் தாமதமானாலும் ஆகலாம்" என்று எழுதியிருந்தான்.

அந்தப் பணத்தை அவன் யாரிடம் கொடுக்கச் செல்கிறான்? இன்னும் வேறு என்ன சங்கடத்தில் அச்சிறுவன் மாட்டிக்கொள்ளப் போகிறானோ தெரியவில்லையே! 'அடி துரதிருஷ்டக்காரி! நீ அவனை அம்புபோல் விடலாமே ஒழிய அது குறி தவறினால் உன்னால் அவனை மீண்டும் அழைத்துக்கொள்ள முடியுமா?'

இந்தத் திருட்டுக்கு மூலகாரணம் நான்தான் என்பதை உடனே வெளியிட்டு ஆகவேண்டும். ஆனால் ஸ்திரீகள் சுற்றிலும் உள்ளவைகளை நம்பியே உயிர் வாழ்பவர்கள். அவைகள்தாம் அவர்கள் உலகம். அந்த நம்பிக்கைக்குத் துரோகம் ஏற்பட்டதென்று தெரிந்தால் அப்புறம் அவர்களுக்கு உலகில் இருக்க இடம் இல்லாமல் போய்விடும். பிறகு அவர்கள் எதை உடைத்து எறிந்தார்களோ அதன் உடைந்த துண்டுகளின் மீதுதான் நிற்க வேண்டும். அந்தத் துண்டுகளின் கூரிய முனைகள் அவர்கள் கால்களைக் குத்திக் கிழித்தாலும் அவர்கள் என்ன செய்ய முடியும்? பாவத்தைச் செய்வது எளிதாகத்தான் இருக்கிறது! அதற்குப் பரிகாரம் தேடுவதுதான் ஸ்திரீக்கு நிரம்பக் கஷ்டமானது.

சில காலமாக என் கணவரைக் கண்டு பேசுவதே எனக்கு முடியாமல் போய்விட்டது. அப்படி இருக்க இந்தப் பயங்கரமான செய்தியை நான் எப்படி அவர் முன் கொண்டு செல்வேன். இன்று அவர் சாப்பிட வந்த போது ஏறக்குறைய மணி இரண்டு ஆகிவிட்டது. ஏதோ ஞாபகத்தில் அவர் சரியாகச் சாப்பிடவே இல்லை. அவரைச் சாப்பிடும்படி தூண்டும் உரிமையையும் நான்

இழந்துவிட்டேன். என் கண்களில் துளித்த நீரைத் துடைத்துக்கொள்ளும் பொருட்டு நான் முகத்தை வேறு பக்கம் திருப்பிக்கொள்ளும்படி ஆயிற்று.

"உள்ளே போய்ச் சிறிது நாழிகை படுத்துக்கொள்ளுங்கள்; மிகவும் களைப்படைந்திருக்கிறீர்கள்" என்று அவரிடம் சொல்ல வேண்டும்போல் எனக்கு மிகவும் ஆவலாக இருந்தது. நான் தொண்டையைக் கனைத்துக்கொண்டு மெதுவாகக் கிளம்பியபோது ஓர் ஆள் வந்து போலீஸ் இன்ஸ்பெக்டர் பஞ்சுவை அழைத்துக்கொண்டு வந்திருப்பதாகத் தெரிவித்தான். அதைக் கேட்டதும் இன்னும் அதிகக் கவலை கொண்ட முகத்துடன் என் கணவர் பாதிச் சாப்பாட்டில் எழுந்து சென்றார்.

சற்றுப் பொறுத்து என் ஓர்ப்படி வந்து, "நிகில் வந்த போது நீ ஏன் எனக்குச் சொல்லி அனுப்பவில்லை?" என்று குறை கூறினாள். "அவன் வருவதற்கு நாழிகையானதால் அதற்குள் ஸ்நானம் செய்துவிட்டு வரலாம் என்று போனேன். இவ்வளவு சீக்கிரத்தில் எப்படிச் சாப்பிட்டான்?" என்று கேட்டாள்.

"ஏன், உங்களுக்கு எதற்காவது அவரைப் பார்க்க வேண்டுமா?"

"நீங்கள் இருவரும் சேர்ந்து நாளை கல்கத்தாவுக்குப் போகிறீர்களாமே? அது என்ன சமாசாரம்? எப்படி இருந்தாலும் நான் இங்கே தனியாக இருக்கமாட்டேன். பெரியவள் தன் தெய்வங்களை விட்டு விட்டு எங்கும் போகமாட்டாள். கொள்ளை, கொள்ளை என்று எங்கே பார்த்தாலும் அமர்க்களப்பட்டுக்கொண்டிருக்கும் போது நான் பயந்து செத்துப்போய்விடுவேன். நீங்கள் நாளைக்குப் போவது நிச்சயந்தானா?"

"நிச்சயந்தான்" என்றேன். அச்செய்தியை நானும் அப்போதுதான் கேட்டேன். மேலும் நாளைக்குள் நாங்கள் போனாலும் இருந்தாலும் ஒன்றுதான் என்று நினைக்கும்படி எங்கள் நிலைமை ஆகாது என்று யார் கண்டார்கள்? அதற்குப் பிறகு, எங்கள் வீடு, வாழ்க்கை எல்

லாம் எப்படி இருக்கும் என்பதும் என் அறிவுக்கு எட்டவில்லை. எல்லாம் ஒரே குழப்பமாக இருந்தது.

இன்னும் சில மணி நேரத்தில் என் விதி வெட்ட வெளிச்சம் ஆகிவிடும். இந்தக் காலத்தை ஓடாமல் சற்று நிறுத்தி வைத்துக்கொள்ள ஒருவரும் இல்லையே? அப்போது என் சக்திக்கு எட்டியபடி கூடிய மட்டும் ஒழுங்காக விஷயங்களைத் திருத்தி அமைப்பேனே! பூமிக்குள் போட்ட விதை வெகு காலமாக அதற்குள்ளேயே கிடப்பதனால் அது முளைத்து வெளியில் வரும் என்பதையே நாம் மறந்துவிடுகிறோம். ஆனால் முளை வெடித்து வெளியே வந்ததும் அது எவ்வளவு வேகமாக வளருகிறது! எதனாலாவது அதன் வளர்ச்சியைத் தடுக்க முடியுமா?

நான் இனிமேல் எதைப்பற்றியும் நினைக்காமல் மௌனமாக இருப்பேன். வரும் கஷ்டம் எப்போது வேண்டுமானாலும் வரட்டும். நாளைக்கு மறு நாள் பகிரங்கம், சிரிப்பு, அழுகை. கேள்விகள், சமாதானங்கள் எல்லாம் கிளம்பி ஓய்ந்துவிடும்!

ஆனால் அன்புடனும் பக்தியுடனும் விளங்கும் அமூல்யனின் முகத்தை என்னால் மறக்க முடியவில்லையே! விதி தன்னை ஓங்கி அறையும் மட்டும் அவன் மனம் ஒடிந்து காத்துக்கொண்டிருக்கவில்லை. நேரே ஆபத்துக்களின் நடுவில் புகுந்துவிட்டான். என் துன்பத்தின் மத்தியிலும் நான் அவனை வணங்குகிறேன். அச்சிறுவனே என் தெய்வம்! விளையாட்டாக அவன் என் பாரத்தைக் குறைத்துவிட்டான். எனக்கு விதிக்கப்பட்டிருக்கும் தண்டனையைத் தன் தலையில் ஏற்றுக்கொண்டு அவன்தான் என்னைக் காப்பாற்றப் போகிறான். ஆனால் என் தெய்வத்தின் இந்தப் பயங்கரமான கிருபையை நான் எவ்விதம் தாங்குவேன்?

குழந்தாய் அமூல்யா! உன்னை வணங்குகிறேன். தம்பி! இதோ உன்னை நமஸ்கரிக்கிறேன். நீ புனிதமானவன். அழகு வாய்ந்தவன். உனக்கு என் நமஸ்காரம். அடுத்த ஜன்மத்தில் நீ என் குழந்தையாகப் பிறக்க வேண்டும். அதுதான் என் பிரார்த்தனை.

நான்கு பக்கங்களிலிருந்தும் என்ன என்னவோ வதந்திகள் கிளம்பின. போலீஸ்காரர்கள் வருவதும் போவதுமாக இருந்தனர். வீட்டில் வேலைக்காரருக்குள் ஒரே அமளியாக இருந்தது.

என் வேலைக்காரி க்ஷேமா என்னிடம் வந்து, "அம்மா, என் சங்கிலியையும் வளைகளையும் தயவுசெய்து உங்கள் இரும்புப் பெட்டியில் வைத்துக்கொள்ளுங்கள்" என்ருள். 'இச்சங்கடங்கள் எல்லாம் அம்மாவிஞல்தான் விளைந்தன; அவளும் அவைகளில் அகப்பட்டுக்கொண்டு திண்டாடுகிருள்' என்று நான் யாரிடம் சொல்லுவேன்? க்ஷேமாவின் நகைகளையும், தாகோவின் பணத்தையும், நான் பார்த்துக்கொள்ளுவதாகக் கூற வேண்டியதாயிற்று. பால்காரி வேறு ஒரு பெட்டியைக் கொண்டு வந்து என் அறையில் வைத்துவிட்டுச் சென்ருள். அதில் ஒரு பஞரஸ் புடைவையும் இன்னும் சில சாமான்களும் இருந்தன. "உங்கள் கல்யாணத்தில் இவைகள் எனக்குக் கிடைத்தன" என்று அவள் என்னிடம் சொன்ஞள்.

நாளைக்கு க்ஷேமா, தாகோ, இந்தப் பால்காரி முதலியவர்கள் எதிரில் என் இரும்புப் பெட்டி திறந்து பார்க்கப்படும்போது ..... ஐயோ! அதைப்பற்றி நான் ஏன் நினைக்கவேண்டும்? அதற்குப் பதிலாக அடுத்த வருஷம் இந்த மாசி மாதம் மூன்ரும் தேதி எப்படி இருக்கும் என்பதைப்பற்றி நினைத்துக்கொண்டிருந்தால் போகிறது. என் குடும்ப வாழ்க்கையில் ஏற்பட்ட ரணங்கள் எல்லாம் அப்போதும் ஆருமலே பச்சையாக இருக்குமா?

சிறிது நேரம் கழித்து வருவதாக அமூல்யன் எழுதியிருக்கிருன். ஒன்றும் செய்யாமல் இப்படித் தனியாக யோசித்துக்கொண்டிருக்க முடியாது. பக்ஷணத்தை யாவது செய்து முடிப்போம். நிறையச் செய்தாகிவிட்டது. இருந்தாலும் இன்னும் செய்துகொண்டேதான் இருக்க வேண்டும். யார் அவைகளைத் தின்னப் போகிருர்கள்? வேலைக்காரர்கள் எல்லாருக்கும் பங்கிட்டுக் கொடுத்து விடுகிறேன். இன்றிரவே கொடுத்துவிட வேண்டும்.

இன்றுடன் என் காலம் ஆகிவிடும். நாளைத்தினம் என் வசத்தில் இல்லை.

நான் மேலும் விடாமல் பர்பிகள் செய்துகொண்டிருந்தேன். ஒவ்வொரு சமயம் மாடியில் என் அறைப் பக்கமாக ஏதோ சத்தம் கேட்டதுபோலத் தோன்றிற்று. ஒருவேளை என் கணவர், 'இரும்புப் பெட்டியின் சாவியைக் காணவில்லை' என்று சொல்ல, என் ஓர்ப்படி, வேலைக்காரர்கள் எல்லாரையும் கூப்பிட்டு அதைத் தேடும்படி சொல்லியிருப்பாளோ? சீ! இந்தச் சத்தத்தையெல்லாம் நான் கவனிக்கக்கூடாது. கதவைச் சாத்திவிடுகிறேன்.

அப்படிச் செய்யும்பொருட்டு நான் எழுந்ததும் தாகோ இரைக்க இரைக்க ஓடிவந்து, "அம்மா! அம்மா!" என்று கத்தினாள்.

"பேசாமல் போ! என்னைத் தொந்தரவு செய்யாதே!" என்று கடுமையாகக் கூறினேன்.

"பெரிய ராணி உங்களைக் கூப்பிடுகிறார்கள். அவர்கள் மருமான் கல்கத்தாவிலிருந்து ஒரு யந்திரம் வாங்கிக் கொண்டு வந்திருக்கிறான். அது மனிதர்களைப் போலவே பேசுகிறது. ரொம்ப ஆச்சரியமாக இருக்கிறது. நீங்களும் வந்து பாருங்களேன்!" என்றாள்.

எனக்கு அழுவதா சிரிப்பதா என்று தெரியவில்லை. வேண்டாத நாடக மேடைப் பாட்டுக்களைத் திருப்பித் திருப்பிப் பாடிக்கொண்டிருக்கும் கிராமபோனும் இந்தச் சமயத்தில் வந்து சேரவேண்டுமா? யந்திரம் மனிதனைப் போல் பேசவும் பாடவும் ஆரம்பித்தால்தான் என்ன பயங்கரமாக இருக்கிறது?

அந்தி மயங்கும் நேரம் ஆகிவிட்டது. அமூல்யன் வந்தால் உடனே தெரிவிக்காமல் இருக்கமாட்டான். என்றாலும் என்னால் காத்துக்கொண்டிருக்க முடியவில்லை. ஓர் ஆளைக் கூப்பிட்டு, "போய் அமூல்ய பாபுவை நேரே இங்கே வரச்சொல்" என்றேன். அவன் சிறிது நேரம் கழித்துத் திரும்பி வந்து, "அமூல்யன் போனவன் இன்னும் வரவில்லை" என்று தெரிவித்தான். "போய்விட்டானா?"

அந்தக் கடைசி வார்த்தை என் காதில் அழுகுரல்போல் ஒலித்தது. அமூல்யன் போய்விட்டான். அஸ்தமிக்கும் சூரியனிடமிருந்து வரும் ஒளிபோல் அவன் தோன்றி, பிறகு உடனே அடியோடு மறைந்துவிட்டான். நடக்கக் கூடியவையும் கூடாதனவுமான ஆபத்துக்கள் எல்லாம் என் மனத்தில் எழுந்தன. அவனை யமன் வாசலுக்கு அனுப்பியவள் நான் அல்லவா? ஆனால் அவன் அஞ்சாமல் இருந்தால்? அது அவன் உயர்வைத்தான் காட்டும். இப்படியெல்லாம் நடந்த பிறகு நான் எப்படித் தனியாக உயிர் வாழ்வேன்?

அமூல்யன் எனக்கு அளித்த அந்தத் துப்பாக்கியைத் தவிர அவன் ஞாபகார்த்தமாக வேறு ஒன்றும் என்னிடம் இல்லை. தெய்வமே அளித்த அடையாளமாக அது எனக்குத் தோன்றிற்று. தெய்வம் இச்சிறுவன் வடிவத்தில் தோன்றி, என் வாழ்க்கையை அதன் அடிவேர் மட்டும் மாசு படுத்திய பெரிய குற்றத்தைக் களைவதற்கு வேண்டிய உதவி செய்து பிறகு மறைந்துவிட்டது. ஆகா! அவன் அருமையாக அளித்த துப்பாக்கி! மானத்தைக் காப்பாற்றும் கருவி அல்லவா அது?

பெட்டியைத் திறந்து அந்தத் துப்பாக்கியைத் தொட்டுப் பக்தியுடன் கண்களில் ஒற்றிக்கொண்டேன். அச்சமயம் பூஜாக் கிருகத்தினின்றும் மணி அடித்தது. நான் கீழே விழுந்து நமஸ்கரித்தேன்.

சாயங்காலம் நான் செய்த பக்ஷணங்களை வீட்டில் உள்ளவர்கள் எல்லோருக்கும் பரிமாறிச் சாப்பிடச் செய்தேன். "பிறந்த நாள் விருந்து அதிசயமாக இருக்கிறதே! தானே ஒண்டியாகப் பக்ஷணங்களைச் செய்து எல்லோருக்கும் விருந்திடுவது!" என்றாள் என் ஓர்ப்படி. பிறகு, "நாங்களும் ஏதாவது செய்ய வேண்டாமா?" என்றவள் அந்தக் கிராமபோனை முடுக்கி, கல்கத்தா நடிகைகளுடைய கீச்சுக் குரல் சங்கீதத்தை வீடு முழுவதும் நிரப்பி விட்டாள்.

விருந்து முடிவதற்கு வெகு நேரம் ஆகிவிட்டது. கடைசியில் என் கணவரைப் பார்த்து நமஸ்கரிக்க வேண்

டும் என்று திடீரென்று எனக்கு ஓர் ஆவல் பிறந்தது. நான் அவர் அறைக்குச் சென்று பார்த்தபோது அவர் தூங்கிக்கொண் டிருந்தார். அன்று முழுவதும் வேலை அதிக மாக இருந்ததனுல் அவர் மிகவும் களைத்திருந்தார். மெது வாகக் கொசுவலை நுனியைத் தூக்கி அவர் பாதத்தின் அருகில் தலையை வைத்தேன். மயிர் கால்களில் பட்டதோ என்னவோ, சட்டென்று தூக்கத்தில் கால்களை நகர்த்திக் கொண்டார்.

நான் வெளியே தாழ்வாரத்தில் வந்து உட்கார்ந்து கொண்டேன். தூரத்தில் இலைகள் எல்லாம் உதிர்ந்து குச்சியாகப்போன ஓர் இலவ மரம் தென்பட்டது. அதன் பின்னுல் இளம் பிறைச்சந்திரன் வானத்தில் அஸ்தமித் துக்கொண்டிருந்தான். திடீரென்று ஆகாயத்திலுள்ள நக்ஷத்திரங்கள் எல்லாம் என்னைக் கண்டு பயப்படுவது போன்ற ஓர் உணர்ச்சி எனக்கு உண்டாயிற்று. உலகம் முழுவதுமே என்னை ஏசுவதுபோல இருந்தது. ஏன்? நான் தனியாக இருந்ததனுல் அல்லவா?

பிரபஞ்சத்தில் மனிதன் தனியாக இருப்பது போன்ற அதிசயம் வேறு ஒன்றும் இல்லை. உறவினர்கள் எல்லாரும் ஒவ்வொருவராக இறந்த பின்னரும் ஒருவன் தனியாக இருப்பது என்பது இல்லை. மரணத் திரைக்குப் பின்னுல் இருந்து அவனுக்குத் துணை ஏற்படுகிறது. ஆனுல் உற வினர் இருந்தும் இல்லாததற்குச் சமமாக உற்ற துணை எதுவும் இல்லாதவனை உலகமே கண்ணுல் பார்க்க அஞ்சு கிறது.

நான் எங்கே இருக்கிறேனே அவ்விடத்தில் உண்மை யில் நான் இல்லை என்றுதான் கூறவேண்டும். என்னைச் சுற்றிலும் இருப்பவர்களை விட்டு நான் வெகு தூரத்தில் இருக்கிறேன். தாமரை இலையிலுள்ள பனித்துளிபோல் நான் ஒரு பெரிய அகன்ற தனிமை வாழ்க்கையையே நடத்துகிறேன். புருஷர்களிடம் மாறுதல் ஏற்பட்டால் ஏன் அது பூர்ண மாறுதலாக இருப்பதில்லை? என் உள்ளத்தை நான் பார்க்கும்போது முன்பு இருந்தன வெல்லாம் இப்போதும் அப்படியே இருப்பதைக் காண்கிறேன். ஆனுல் அவை பழையபடி இல்லாமல்

தாறுமாருக இருக்கின்றன. ரத்தின மாலையில் பதிக்கப் பட்டிருந்த ரத்தினங்கள் யாவும் தரையில் உதிர்ந்து கிடக்கின்றன. அப்படியே என் இருதயமும் வெடித்துக் கொண்டிருக்கிறது.

உயிரை விட்டுவிட வேண்டும் என்று எனக்குத் தோன்றுகிறது. ஆனாலும் என் உள்ளத்திலோ எல்லாம் ஜீவனோடு விளங்குகின்றன. நான் இறந்தாலும் அத்துடன் எல்லாம் அற்றுப்போகும் என்பதில்லை. இன்னும் அதிகமாக வருந்தக் காரணம் மரணத்தில்தான் இருக்கும். எது அற்றுப் போகவேண்டுமோ அது இந்தப் பிறவியிலேயேதான் அற்றுப்போக வேண்டும். வேறு வழி இல்லை.

கடவுளே! இந்த ஒரு முறை மட்டும் என்னை மன்னித்துவிடும். என் வாழ்க்கையின் செல்வமாக நீர் என் கைகளில் அளித்த யாவற்றையும் நான் ஒரு பெருஞ் சுமையாகச் செய்துகொண்டேன். அதை இனிமேல் தாங்குவதற்கும் என்னுல் முடியவில்லை. வேண்டாம் என்று விட்டுவிடுவதற்கும் சாத்தியமில்லை. தெய்வமே! வெகு காலத்துக்கு முன்பு செந்நிறமான வானில் நின்றுகொண்டு என்பொருட்டு வாசித்த அந்த வேணு கானத்தை மீண்டும் ஒரு முறை வாசிப்பாயாக. என் கஷ்டங்கள் எல்லாம் தீரட்டும். உன் குழலின் இசையைத் தவிர வேறு எதுவும் உடைந்ததை ஒன்று சேர்க்கவும் மாசு பட்டதை மீண்டும் புனிதமாகவும் முடியாது. உன் சங்கீதத்தால் என் குடும்ப வாழ்க்கையை மீண்டும் புதிதாகச் செய்ய வழி ஒன்றும் எனக்குத் தெரியவில்லையே!

தரையில் படுத்துக்கொண்டு உரக்க விம்மி அழுதேன். எங்கிருந்தாவது சிறிது தயை, மன்னிப்பதன் ஏதாவது ஒரு சிறு அடையாளம், முடிவைப்பற்றிய ஏதாவது நம்பிக்கை ஏற்படுமா என்று பிரார்த்தித்தேன். "தெய்வமே! உன் ஆசீர்வாதம் கிட்டும் அளவும், அன்னம், தண்ணீர் இல்லாமல் இங்கேயே படுத்திருப்பேன்!" என்று பிரதிக்ஞை செய்துகொண்டேன்.

திடீரென்று காலடிச் சத்தம் கேட்டது. "கடவுள் மனிதன் முன் பிரசன்னமாவதில்லை' என்று யார் சொன்னார்கள்? நிமிர்ந்து பார்த்தால் எங்கே அந்தப் பிரமை நீங்குமோ என்று அஞ்சியே நான் தலை தூக்கிப் பார்க்காமல் இருந்தேன். தெய்வமே! வா! என் தலைமீது உன் பாதம் படட்டும். வந்து என் துடிக்கும் இருதயத்தின்மேல் உன் காலை வைப்பாயாக. அந்த க்ஷணமே என் உயிரும் போகட்டும்.

அவர் வந்து என் தலை மாட்டில் உட்கார்ந்து கொண்டார். யார்? என் கணவர்! அவர்தாம் என்று அறிந்ததும் நான் அப்படியே மூர்ச்சித்துவிடுவேன் என்று தோன்றிற்று. உடனே என் வேதனையெல்லாம் கண்ணீராக மாறி என் உள்ளத்தைப் பீறிக்கொண்டு வந்தது. அவருடைய கால்களை என் மார்போடு அணைத்துக் கொண்டேன். ஐயோ! அவைகளின் அடையாளம் எப்போதும் அங்கேயே ஏன் இருக்கலாகாது?

அவர் அன்புடன் என் தலையைத் தடவினார். அவர் ஆசீர்வாதத்தைப் பெற்றுவிட்டேன். இனிமேல் நாளைக்கு எனக்கு ஏற்படப்போகும் அவமானத்தை ஏற்றுக் கொண்டு அதை என் தெய்வத்தின் பாதத்தில் மனதாரச் சமர்ப்பிப்பேன்.

ஆயினும் என் உள்ளத்தைத் துன்புறுத்திக்கொண்டிருப்பது என்னவென்றால் ஒன்பது வருஷங்களுக்கு முன் மணமாகி இந்த வீட்டுக்கு வந்தபோது என்னை வரவேற்ற சங்கீதம் இந்த வாழ்க்கையில் இனிமேல் ஒரு போதும் எனக்குக் கிட்டாதே என்பது தான். என்ன கடினமான தவம் செய்தால் மீண்டும் நான் மணக்கோலத்துடன் அதே மணப்பலகையில் என் இடத்தில் உட்காருவது சாத்தியமாகும்? எவ்வளவு வருஷங்கள், எவ்வளவு யுகங்கள் சென்றால் ஒன்பது வருஷங்களுக்கு முன் இருந்த அந்த நாளை நான் மீண்டும் காண முடியும்?

கடவுள் இல்லாததைச் சிருஷ்டிப்பார். ஆனால் அவர் கூட அழிந்துபோனதை மீண்டும் புதிதாகச் சிருஷ்டிக்கும் ஆற்றல் உடையவராக இருப்பாரா?

# நிகிலேசன்

இன்று நாங்கள் கல்கத்தாவுக்குப் போகிறோம். சுகங்களையும் துக்கங்களையும் நாம் சேர்த்துக் குவித்துக் கொண்டே போனால் அவை நம்மை அதிகம் பாதிக்கத் தான் செய்யும். அவைகளைச் சேர்ப்பதும் நம்முடையன ஆக்கிக்கொள்வதும்' இரண்டும் நிஜமாகா. வீட்டு யஜமானனாகிய நான் ஒரு பொய்யான நிலைமையில் இருக்கிறேன். உண்மையில் வாழ்க்கைப் பாதையில் நான் ஒரு வழிப்போக்கன் போன்றவனே! ஆகையால்தான் உண்மையான வீட்டு யஜமானனுக்கு அடிக்கடி துன்பம் ஏற்படுகிறது. கடைசியில் மரணத்தின் எல்லையற்ற துன்பமும் உண்டாகிறது.

என் அன்பே! நம்முடைய சேர்க்கையானது போகும் வழியில் ஏற்பட்டதே! நாம் இருவரும் ஒரே வழியில் சென்ற வரையில் அது சரியாக இருந்தது. இனியும் நாம் அதை விடாமல் பற்றிக்கொள்ள முயன்றால் அது நமக்குச் சிரமமாகத்தான் முடியும். அதன் பந்தங்களை நாம் இப்போது விட்டுச் செல்லுகிறோம். மேற்கொண்ட பிரயாணத்தை நாம் தொடங்கியாகி விட்டது. போகும் போது ஒருவரை ஒருவர் பார்ப்பது அல்லது இருவர் கரங்களும் ஸ்பரிசிப்பது ஆகிய இவைகளை மட்டும் செய்ய முடிந்தால் போதுமானது. அதற்குப் பிறகு? முடிவற்ற விசுவ வாழ்க்கையுடன் கூடிய விரிந்த உலகத்து வழிதான் இருக்கிறதே!

என் கண்ணே! கடைசியில் உன்னை இழந்ததில் எனக்குப் பெரும் குறை ஒன்றும் ஏற்படவில்லையே! உற்றுக் கேட்கும்போதெல்லாம் புல்லாங்குழலின் இசை என் காதில் விழுந்துகொண்டே இருக்கிறது. பிரிவு என்னும் குழலினின்றும் இசைத்தாரைகள் பெருகிய வண்ணம் இருக்கின்றன. தேவியின் அமிருத பானம் எங்கேயாவது வற்றிவிடுமா? சில சமயம் நாம் அதைப் பானம் பண்ணும்போது அவள் கிண்ணத்தை

உடைத்துவிடுகிருள். அதைக் குறித்து நாம் துயரம் அடைவதைக் காண அவள் புன்னகையே பூக்கிருள். ஆனல் உடைந்த கிண்ணத்தை நான் குனிந்து எடுக்கப் போவதில்லை. உள்ளம் அதிருப்தி கொண்டாலும் அதை அப்படியே விட்டுப் பேசாமல் மேலே செல்வேன்.

என் மதனி வந்து, "எதற்கு இருக்கிற புஸ்தகங்களை எல்லாம் கட்டி அனுப்புகிருய்?" என்று கேட்டாள்.

"எதற்கா? அவைகளின்மேல் எனக்கு இன்னும் அபிமானம் குறையாத காரணத்தால்தான்" என்றேன்.

"இன்னும் வேறு எவைகளிலாவது இந்த அபிமானம் இருக்கக்கூடாதா? நீ இனிமேல் இங்கே திரும்பி வரப் போவதே இல்லையா?"

"நான் வந்து போய்க்கொண்டுதான் இருப்பேன். ஆனல் இனிமேல் இங்கேயே அடைந்து கிடக்க மாட்டேன்?"

"ஓகோ! அப்படியானல் என் அறைக்குச் சற்று வா. எவ்வளவு சாமான்களின்மேல் எனக்கு இன்னும் தீராத பாசம் இருக்கிறது என்று பார்!" என்று கூறி விட்டு அவள் என் கையைப் பிடித்து அழைத்துக்கொண்டு. போய்விட்டாள்.

அவள் அறையில் எவ்வளவோ பெட்டிகளும் மூட்டைகளும் பிரயாணத்துக்கு என்று கட்டப்பட்டுச் சித்தமாக இருந்தன. ஒரு பெட்டியைத் திறந்து அவள், "பார், இதில்தான் என் வெற்றிலைப்பெட்டி இருக்கிறது. இந்தப் பாட்டிலில்தான் நான் தேய்த்துக் குளிக்கும் வாசனைப் பொடியை வைத்திருக்கிறேன். இந்தத் தகரச் சிமிழ்களில் பாக்கு, ஏலக்காய், லவங்கம் முதலிய சாமான்கள். சீட்டுக் கட்டுகளையும் சொக்கட்டான் ஆடும் பலகையையுங் கூட நான் மறக்கவில்லை. உங்கள் இருவருக்கும் ஒழியவில்லை என்ருல் நான் வேறு எவர்களையாவது சிநேகம் செய்துகொண்டு விளையாடுவேன். இந்தச் சீப்பு உனக்கு ஞாபகம் இருக்கிறதா? நீ வாங்கிய சுதேசிச் சீப்புத்தான் இது.." என்று அடுக்கிக்கொண்டே போனுள்.

"அதெல்லாம் சரிதான், மன்னி! நீங்கள் எதற்கு இவைகளையெல்லாம் மூட்டை கட்டியிருக்கிறீர்கள்?"

"ஆனால் நானும் உங்களுடன் வரவில்லை என்று நினைத்தாயா?"

"நீங்களும் வருவதா? என்ன வேடிக்கை!"

"பயப்படாதே! உன்னை நான் ஒன்றும் உபத்திரவம் செய்ய மாட்டேன். சின்ன ராணியோடும் சண்டைபோடு வேன் என்ற பயம் வேண்டாம். எப்போதோ ஒரு நாள் சாக வேண்டும். கங்கைக் கரையில் பிராணனை விடுவதே நல்லது. இந்த ஊர்ச் சுடுகாட்டில் மொட்டை ஆலமரத் தின் கீழே வைத்து எரிக்கப்படுவதை நினைக்கவே பயமாக இருக்கிறது. அதனால்தான் இவ்வளவு நாள் நான் சாகா மல் பிராணனை வைத்துக்கொண் டிருக்கிறேன்."

கடைசியாக வீடு என்பதன் உண்மையான ஒலி என் காதில் கேட்டது. எனக்கு ஆறு வயசாக இருந்தபோது என் மதனி கல்யாணமாகி இந்த வீட்டுக்கு வந்தாள். மெத்தையில் ஒரு மூலையில் உட்கார்ந்துகொண்டு நாங்கள் இருவரும் மத்தியான்னம் எல்லாம் விளையாடிக்கொண் டிருப்போம். நல்ல உப்புக்காரமர்கத் துவையல் செய்யும் படி கூறி மாமரத்தினின்றும் மாங்காய்களை அவளிடம் பறித்துப் போடுவேன். அவள் வைத்துக்கொண் டிருந்த பொம்மையின் கல்யாணத்துக்காக ஸ்டோர் ரூமிலிருந்து எல்லாச் சாமான்களையும் நான் கொண்டுவந்து கொடுப் பது வழக்கம். அவைகளை நான்தான் எடுக்கலாம். வேறு யாராவது எடுத்தால் பாட்டியின் தண்டனைக்கு ஆளாக வேண்டியதுதான். மன்னிக்கு ஏதாவது வேண்டும் என்று தோன்றினால் என்னைத்தான் அண்ணவிடம் தூதாக அனுப்புவது வழக்கம். ஏனென்றால் நான் கேட்டால் அவர் இல்லை என்று சொல்ல மாட்டார். அந்த நாளில் எனக்கு ஜுரம் வந்தால் டாக்டர்கள் கொஞ்சங்கூட இரக்கம இல்லாமல் வெறுங் கஞ்சியில் போட்டுவிடுவார்கள். வேறு ஒன்றையும் சாப்பிட விடமாட்டார்கள். அப்போது மதனிதான் எனக்குத் துணையிருப்பாள்; அத்துடன் ரகசியமாகத் தின்பண்டங்களும் கொண்டுவந்து கொடுப்

பாள். ஒரு நாள் அவள் அப்படிக் கொண்டுவருவது பாட்டிக்குத் தெரிந்துவிட்டது. அன்று அவளுக்கு என்ன வசவுகள் கிடைத்தன!

நாங்கள் பெரியவர்கள் ஆன பிறகு எங்கள் சுக துக்கங்களை ஒருவருக்கொருவர் சொல்லிக்கொண்டதனால் இன்னும் நெருங்கிய நட்புடையவர்கள் ஆகிவிட்டோம். எங்களுக்குள் தான் என்ன சண்டை! சில சமயம் பணம், அதிகாரம் இந்தக் கவலையில் பொறாமையும் சந்தேகமும் தோன்றி எங்கள் அன்பில் பிளவை உண்டாக்கிவிடும். விமலா வந்து சேர்ந்த பிறகு அந்தப் பிளவுகள் இனி ஒரு போதும் ஒன்றுசேராவோ என்றுகூடத் தோன்றிற்று. ஆனால் மேலே இருந்த புண்களைக் காட்டிலும் உள்ளே அவைகளைக் குணமாக்குவதற்கு வேண்டிய சக்தி பலமாக இருந்தது.

ஆகவே குழந்தைப் பருவம் முதல் இது வரையிலும் எங்களுக்குள் உண்மையான நட்பு வளர்ந்துகொண்டே வந்தது. அதன் இலைகள் அடர்ந்த கிளைகள் இந்த வீட்டின் ஒவ்வோர் அறையிலும் தாழ்வாரத்திலும் நீண்டு, பரவி இருந்தன. தன் சாமான்கள் எல்லாவற்றுடனும் மதனி இந்த வீட்டை விட்டுக் கிளம்பத் தயாராக இருப்பதைப் பார்த்ததும் நான் மிகவும் அலண்டு போய்விட்டேன்.

ஒன்பதாவது வயசில், விவாகமாகி வந்தது முதல் ஒரு நாள் கூட விட்டுச் செல்லாதிருந்த அந்த வீடு, வெகு நாளிலிருந்து ஏற்பட்ட தன் தினசரிப் பழக்கங்கள், ஆகிய எல்லாவற்றையும் விட்டொழித்து எங்கேயோ போவதற்கு அவள் தீர்மானித்ததன் காரணம் எனக்குத் தெளிவாக விளங்கிற்று. ஆனால் ஏதாவது உபயோக மற்ற காரணத்தைக் கூறினாலும் கூறுவாளே தவிர வாஸ்தவத்தைக் கூற அவளால் முடியுமா?

பிரபஞ்சத்தில் இந்த உறவு ஒன்றுதான் அவளுக்கு மிஞ்சுகிறது. மக்கட் பேறும் அற்று விதவையும் ஆகும் துர்ப்பாக்கியம் பெற்ற அவளும் அதைத் தன் உள்ளத்து அன்பையெல்லாம் சேர்த்துப் போற்றி வந்தாள். இப்போது, கட்டிப் புறப்படுவதற்குத் தயாராக இருந்த அவள் மூட்டை முடிச்சுகளின் மத்தியில் நின்றபோது

தான் என் பிரிவை அவள் எவ்வளவு பொறுக்காமல் இருந்திருக்கிருள் என்பதை உணர்ந்தேன். பணவிஷயமாக அவள் விமலாவுடன் சச்சரவு செய்ததெல்லாம் வெறும் அற்பத்தனத்தினுல் அல்ல. 'எங்கிருந்தோ வந்த ஒருத்தி எங்கள் இருவருக்கும் நடுவில் புகுந்து எங்கள் உறவின் பாத்தியதையை அவமதித்து அதன் பிணைப்பு நெகிழ்ந்து போகும்படி செய்வதா?' என்ற அவள் நினைவு தான் அதற்குக் காரணம் என்பதும் எனக்கு உடனே புலப்பட்டது. அவள் உள்ளம் எவ்வளவு துன்புற்ற போதிலும் அதை வாய்விட்டுக் கூறுவதற்கு அவளுக்கு அதிகாரம் இல்லாமல் போய்விட்டதல்லவா?

எனக்கும் மதனிக்கும் இருந்த பாந்தவ்யம் சாதாரண உறவு முறையில் இருந்து மட்டும் ஏற்பட்டதல்ல; அதைக் காட்டிலும் அதிகம் ஆழமானது என்பதை விமலாவும் நன்கு உணர்ந்திருந்தாள். சிறு பருவம் முதல் ஏற்பட்டிருந்த இந்த உறவைக் கண்டு அவளுக்குப் பொருமை உதித்தது.

வேரூன்றிய அந்த அன்பு இப்போது என் உள்ளத்தில் புகுந்து வேதனையை உண்டாக்கிற்று. ஒரு பெட்டியின்மீது உட்கார்ந்தேன். "மதனி, முன்பெல்லாம் நாம் இருவரும் இருந்தோமே; அப்படி இருக்கும் நாள் இப்போது இருக்கக்கூடாதா என்று தோன்றுகிறது" என்றேன்.

"அப்பா! வேண்டாம்" என்ருள் அவள் ஒரு பெருமூச்சுடன். "அந்த வாழ்க்கை மீண்டும் வேண்டவே வேண்டாம். இந்த ஜன்மத்துக்கு இத்துடன் போதும். இந்த அநுபவம் இனிமேல் பொறுக்க முடியாது."

"துன்பத்தை அநுபவித்துப் பிறகு அதிலிருந்து விடுதலை அடைவது அந்தத் துன்பத்தைக் காட்டிலும் மேலானது" என்றேன்.

"அதெல்லாம் புருஷர்களாகிய உங்களுக்கு; சுதந்தரம் உங்களுக்குத்தான் ஏற்பட்டது. ஆனல் ஸ்திரீகளாகிய நாங்களோ பிறரைப் பந்தமாக்கி வைத்திருப்போம். நாங்களே அந்தப் பந்தத்துக்கு ஆளாகி இருப்பதை

விரும்புவோம். இல்லை, அப்பா, எங்களுடைய பிணைப்பி லிருந்து நீங்கள் விடுதலை பெறுவது என்பது முடியாது. நீங்கள் சிறகை விரித்துப் பறக்க வேண்டும் என்றால் எங்களையும் தூக்கிக்கொண்டுதான் போகவேண்டும். எங்களை விட்டுச் செல்லுவதற்கு இசைய மாட்டோம். அதனால்தான் நான் இந்த மூட்டைகளை எல்லாம் கட்டி விட்டேன். புருஷர்களைக் காற்றாடிபோல் தனியே பறக்க விடக்கூடாது.''

''நீ கூறுவது முற்றும் சரி'' என்றேன் சிரித்துக் கொண்டே. ''உங்கள் சுமையைத் தாங்குவதைப்பற்றி நாங்கள் ஒன்றும் குறை கூறவில்லை என்றால் அதற்குக் காரணம், ஸ்திரீகள் அவ்வாறு சுமந்து செல்வதற்குப் பதி லாக எவ்வளவோ நன்மை செய்கிறார்கள் என்பதுதான்.''

''சிறு சாமான்கள் சேர்ந்த மூட்டை யானதால் தான் நீங்கள் சுலபமாகத் தாங்கிச் செல்லுகிறீர்கள்'' என்றாள் மதனி; ''வேண்டாம் என்று நீங்கள் எதைத் தள்ள நினைத்தாலும் அது நிரம்பவும் லேசானதாயிற்றே என்று தோன்றுகிறது. ஆகவே பளு இல்லாமலே உங் களுக்குப் பளுவாக இருக்கிறோம்...அது போகட்டும். நாம் எப்போது புறப்படவேண்டும்?''

''இரவு 11-30 மணிக்கு ரெயில். இன்னும் வெகு நேரம் இருக்கிறது.''

''இதோ பார், தயவு செய்து நான் கூறப்போவதைக் கொஞ்சம் கேள். மத்தியான்னம் படுத்துக்கொண்டு நன் றாகத் தூங்கு. உனக்குத்தான் ரெயிலில் தூக்கமே வராதே! உன் முகத்தைப் பார்க்கவே முடியவில்லை. அவ்வளவு ஓய்ச்சலாகத் தெரிகிறது. போ, முதலில் ஸ்நானத்துக்கு'' என்றாள்.

நாங்கள் இருவரும் என் அறையை நோக்கிப் போய்க் கொண்டிருந்தபோது வேலைக்காரி க்ஷேமா வந்து வெகு பணிவாகத் தலைத் துணியை இன்னும் நன்றாக இழுத்து மூடிக்கொண்டு போலீஸ் இன்ஸ்பெக்டர் கைதி ஒருவனுடன் ஐயாவைப் பார்ப்பதற்கு வந்திருப்பதாகத் தெரிவித்தாள்.

"போலீஸ்காரர்கள் இப்படி எப்போது பார்த்தாலும் துரத்திக்கொண்டிருப்பதற்கு ஐயா என்ன திருடரா, கொள்ளைக்காரரா? 'ஸ்நானம் செய்துகொண்டிருக்கிறார்' என்று போய் இன்ஸ்பெக்டரிடம் சொல்லு" என்று மதனி இரைந்தாள்.

"போய் என்ன சமாசாரம் என்று விசாரிக்கிறேன். ஏதாவது அவசரமாக இருக்கலாம்" என்றேன்.

"கூடாது" என்றாள் மதனி; "நேற்றிரவு சின்ன ராணி பர்பிகள் பண்ணிக் குவித்துக்கொண்டிருந்தாள் நீ வரும் வரையிலும் பேசாதிருக்க அந்தப் பர்பியிலே கொஞ்சம் இன்ஸ்பெக்டருக்கு அனுப்புகிறேன்." இவ்வாறு கூறிவிட்டு அவள் என்னை அறைக்குள் தள்ளிவிட்டுக் கதவைச் சாத்திக்கொண்டு போய்விட்டாள்.

இப்படிப்பட்ட கொடுமை உலகில் எங்கேயாவது உண்டா? அதை எதிர்க்க என்னால் முடியவில்லை. இன்ஸ்பெக்டர் பக்ஷணங்களைத் தின்றுகொண்டுதான் இருக்கட்டுமே. காரியத்தை உடனே கவனிக்கவில்லை என்றால் என்ன குடி முழுகிப் போய்விடும் என்று எண்ணிக் கொண்டேன்.

சில தினங்களாக யார் யாரையோ அரெஸ்டு செய்த வண்ணம் போலீஸ் வேலை வெகு மும்முரமாக நடந்து கொண்டிருந்தது. ஒவ்வொரு நாளும் யாராவது குற்றமற்றவன் ஒருவன் என் ஆபீஸ் ரூமுக்கு அழைத்துவரப்படுவான். அதைப்போல் இன்றும் அப்படி யாராவது வந்திருக்கலாம் என்று நினைத்தேன். அவ்வாறெனில் இன்ஸ்பெக்டர் மாத்திரம் பக்ஷணங்களைக் குஷியாகத் தின்றுகொண்டிருப்பானேன்? அது கூடாது என்று எண்ணிக் கதவைப் பலமாகத் தட்டினேன்.

"உனக்குப் பைத்தியம் பிடிக்கப் போகிறது என்றால் வேகமாகத் தலையில் கொஞ்சம் தண்ணீரைக் கொட்டிக் கொள்ளேன்! மூளையின் உஷ்ணம் சற்றுக் குறையும்" என்றாள் மதனி வெளியிலிருந்து.

"இருவருக்கும் பக்ஷணம் அனுப்புங்கள். திருடன் என்று வந்திருப்பவனுக்குத்தான் நிரம்பக் கொடுக்க

வேண்டும். அவனுக்கு நிறையக் கொடுத்துச் சாப்பிடச் சொல்லுங்கள்'' என்று இரைந்து கத்தினேன்.

நான் விரைவாக ஸ்நானம் செய்துவிட்டு வெளியே வந்ததும் விமலா வெறுந் தரையில் உட்கார்ந்திருக்கக் கண்டேன். செருக்கும் ரோசமும் கொண்ட என் பழைய விமலாவா இது? என் அறைக்கு வெளியே தரையில் உட்கார்ந்துகொண்டு என்னிடம் என்ன யாசிக்க வேண்டும் என்று காத்துக்கொண் டிருக்கிறாள்? என்னைக் கண்டதும் அவள் எழுந்து நின்றுகொண்டு கீழ் நோக்கிய பார்வையுடன். "உங்களுடன் ஒரு வார்த்தை பேசவேண்டும்" என்றாள் மெதுவாக.

"உள்ளே வாயேன்" என்றேன்.

"ஏதாவது முக்கிய காரியமாகப் போகிறீர்களா?"

"ஆமாம். ஆனால் என்ன? நீ கூறுவதைக் கேட்டு விட்டு "

"இல்லை; உங்கள் காரியத்தை முதலில் முடித்து விட்டு வாருங்கள் சாப்பாடானதும் நம் விஷயத்தைப் பற்றிப் பேசலாம்" என்றாள் விமலா.

நான் டிராயிங் ரூமுக்குச் சென்று பார்த்தபோது இன்ஸ்பெக்டரின் பக்ஷணத் தட்டுக் காலியாக இருந்தது. அவர் அழைத்துக்கொண்டு வந்த பேர்வழி இன்னும் தின்று முடிக்கவில்லை. அவனைக் கண்டு, "நீயா அமூல்யா?" என்றேன் ஆச்சரியத்துடன்.

வாய் நிறையப் பக்ஷணத்துடன், "ஆம், நான்தான்" என்றான் அமூல்யன். "நான் வேண்டிய அளவு தின்றாகி விட்டது. மீதியைக் கையில் எடுத்துக்கொண்டு போக லாமோ இல்லையோ?" என்று கேட்டுவிட்டுப் பாக்கி யிருந்த பர்பிகளைத் தன் சவுக்கத்தில் வைத்து மூட்டை கட்டத் தொடங்கினான்.

"என்ன இது?" என்று நான் இன்ஸ்பெக்டரை வெறித்துப் பார்த்தேன்.

அந்த மனிதர் சிரித்துக்கொண்டு, "என்ன, இதா? இன்னும் திருடனைக் கண்டுபிடிக்கும் வழி ஒன்றும் காண

வில்லை என்பதுதான். திருட்டோ முன்னிலும் பெரிய மர்மமாகிக்கொண் டிருக்கிறது'' என்றார். பிறகு அவர் ஒரு துணி முடிப்பை அவிழ்த்து ஒரு கட்டு நோட்டுகளை எடுத்தார்.

''மகாராஜா! இதோ உங்களுடைய ஆறாயிரம் ரூபாய்'' என்றார்.

''எங்கிருந்து இது கிடைத்தது?'' என்றேன்.

''அமூல்ய பாபுவிடமிருந்து. நேற்று மாலை அவர் உங்கள் சக்வா ஆபீஸ் மானேஜரிடம் சென்று பணம் அகப்பட்டுவிட்டது என்று சொன்னாராம். திருட்டுப் போனபோது இருந்ததைக் காட்டிலும் சொத்து அகப்பட்டுவிட்டது என்று கேட்டபோதுதான் மானேஜர் இன்னும் அதிகக் கலவரம் அடைந்துவிட்டார். தாமே பணத்தைக் களவாடிவிட்டு ஏதோ பொய்க் கதை ஜோடித்துவிட்டதாகச் சந்தேகம் ஏற்பட்டுவிடுமோ என்று அவர் பயந்துவிட்டார். தாகசாந்தி செய்துகொள் ளும் வியாஜமாக அமூல்ய பாபுவைக் காத்திருக்கும்படி செய்துவிட்டுப் போலீஸ் ஸ்டேஷனுக்கு வந்தார். நான் உடனே போய் அமூல்ய பாபுவை அழைத்துக்கொண்டு போய் இன்று காலை முழுவதும் விசாரித்துப் பார்த்தேன். பணம் எங்கிருந்து கிடைத்தது என்பதைப்பற்றி அவர் ஒன் றும் சொல்லமாட்டேன் என்கிறார். 'உண்மையைக் கூறும் வரையில் வெளியே விடமுடியாது' என்று எச்சரித்தேன். 'அப்படியானால் ஏதாவது பொய்தான் சொல்லவேண்டும்' என்றார். 'அப்படியேதான் சொல்லுங்கள்' என்றதற்கு ஏதோ புதருக்குள்ளிருந்து அகப்பட்டதாகச் சொன்னார். 'இப்படிப் பொய் கூறிவிட்டுத் தப்பிவிட முடியாது. எங்கே, எந்தப் புதர், எதற்காக அங்கே போனீர் என்ற விவரங்களையும் கூறி ஆகவேண்டும்' என்றேன். 'அதைப் பற்றிக் கவலை வேண்டாம். அந்த விவரங்களை யெல்லாம் இட்டுக் கட்டுவதற்கு வேண்டிய பொழுது இருக்கிறது'' என்றார்.''

''அது கிடக்கட்டும், இன்ஸ்பெக்டர்வாள்! அமூல்ய பாபுவைப் போன்ற மரியாதையுள்ள ஓர் இளைஞரை

எதற்காகப் பிடித்துத் தொந்தரவு செய்துகொண் டிருக்கிறீர்கள்?"

"அவரைத் தொந்தரவு செய்யவேண்டும் என்ற எண்ணம் எனக்கு இல்லை. அவர் மதிப்புள்ளவர் என்பது மட்டும் அல்ல. என் பள்ளித் தோழன் நிவாரண்பாபுவின் மகன் என்றும் தெரியும். மகாராஜா, நிஜமாக என்ன நடந்திருக்கும் என்பதைக் கூறட்டுமா? திருடியது யார் என்பது அமூல்யனுக்குத் தெரியும். அந்தப் பேர்வழியை மறைப்பதற்காகத் தம்மீது சந்தேகம் ஏற்படட்டும் என்று அவர் நினைக்கிறார். இம்மாதிரியான தீரச் செயல்களில் தான் அவருக்கு உத்ஸாகம்" என்று கூறிவிட்டு இன்ஸ்பெக்டர் அமூல்யனை நோக்கி, "அப்பா, நானும் ஒரு காலத்தில் பதினெட்டு வயசு இளைஞனாக ரிப்பன் காலேஜில் படித்தது உண்டு. ஜட்கா வண்டிக்காரன் ஒருவனைக் கான்ஸ்டேபிள் கையில் சிக்காமல் காப்பாற்ற முயன்றதில் நானே ஜெயிலுக்குப் போவதாக இருந்தேன். ஏதோ கொஞ்சம் தப்பிற்று" என்றார். என்னை நோக்கி மறுபடியும், "மகாராஜா! நிஜமான திருடன் ஒருவேளை தப்பித்துக்கொண்டாலும் கொள்ளலாம். இதற்கெல்லாம் மூலஸ்தானம் யார் என்பது எனக்கு நன்றாகத் தெரியும்" என்றார்.

"யார் அது?" என்று கேட்டேன்.

"மானேஜரும் காவற்காரன் காசிமும் சேர்ந்து செய்த வேலைதான் இது" தாம் அவ்வாறு நினைத்ததற்குக் காரணங்களை யெல்லாம் கூறிவிட்டு ஒரு வழியாக இன்ஸ்பெக்டர் சென்ற பிறகு நான் அமூல்யனிடம், "பணத்தை எடுத்தது யார் என்று மட்டும் கூறினால் அதனால் ஒருவருக்கும் தீங்கு நேராது என்று உறுதி மொழி அளிக்கிறேன்" என்றேன்.

"நான்தான் எடுத்தேன்" என்றான் அமூல்யன்.

"அதெப்படி இருக்க முடியும்? ஆயுத பாணிகளான கொள்ளைக்காரர்கள் என்று சொன்னார்களே!"

"நான் மட்டுந்தான். வேறு ஒருவரும் இல்லை" என்றான் அமூல்யன். அவன் அப்புறம் கூறியது மிகவும்

அதிசயமாக இருந்தது. மானேஜர் இரவு சாப்பிட்டு விட்டுத் தாழ்வாரத்தில் அப்போதுதான் வாயைச் சுத்தம் செய்துகொண்டு இருந்தாராம். அங்கே வெளிச்சம் இல்லாமல் கொஞ்சம் இருட்டாகவும் இருக்கவே அமூல்யன் தன் சட்டைப்பைகள் இரண்டிலும், குண்டுகளோடு கூடியதாக ஒன்றும், குண்டுகள் இல்லாத ஒன்றுமாக இரண்டு துப்பாக்கிகளை வைத்துக்கொண்டு முகமூடி அணிந்து மானேஜர் முன் சென்று முகத்துக்கு நேராக வெளிச்சத்தைக் காட்டிக் குண்டில்லாத வெறும் துப்பாக்கியை வெடித்தானும். மானேஜர் அப்படியே மூர்ச்சித்து விழுந்துவிட்டாராம். அந்தச் சத்தத்தைக் கேட்டுச் சில ஆட்கள் ஓடிவந்ததும் அமூல்யன் மற்றொரு வெறும் வெடியைச் சுட்டானும். அவர்கள் உடனே ஓடி ஒளிந்து விட்டார்கள். அப்போது காவல் புரிந்துகொண் டிருந்த காசிம் ஒரு பெரிய தடியைச் சுழற்றிக்கொண்டு ஓடி வரவே அமூல்யன் அவன் கால்களைக் குறிவைத்து நிஜமாகவே சுட்டுவிட்டான். காசிம் காயத்துடன் கீழே விழுந்துவிட்டான். இதற்குள் மயக்கம் தெளிந்து வெட வெட என்று நடுங்கிக்கொண் டிருந்த மானேஜரை மிரட்டி அமூல்யன் இரும்புப் பெட்டியைத் திறந்து ஆறுயிரம் ரூபாயை எடுத்துக் கொடுக்கச் செய்தான். பிறகு அங்கிருந்த குதிரை ஒன்றில் ஏறிச் சிறிது தூரம் சென்ற பிறகு குதிரையை அப்படியே விட்டுவிட்டு நடந்து மெதுவாக இங்கே வந்து சேர்ந்துவிட்டான்.

"எதற்காக இப்படியெல்லாம் செய்தாய் அமூல்யா?" என்று கேட்டேன்.

"அவசியமான காரணத்தோடுதான், மகாராஜா!" என்றுன் அமூல்யன்.

"ஆனுல் பணத்தை ஏன் திருப்பிக் கொடுத்துவிட முயன்ருய்?"

'நான் யாருடைய கட்டளையின்பேரில் அப்படிச் செய்தேனே அவளே வரட்டும். அவள் முன்னிலையில் நான் எல்லாவற்றையும் ஒன்று விடாமல் சொல்லிவிடுகிறேன்."

"அந்த அவள் யார்?"

"என் அக்கா சின்ன ராணியேதான்."

நான் விமலாவைக் கூப்பிட்டு அனுப்பினேன். அவள் ஒரு வெண்மையான சால்வையால் முக்காடிட்டுக்கொண்டு வெறும் காலுடன் தயங்கிய வண்ணம் வந்து சேர்ந்தாள். இவ்வாறு விமலாவை இதற்கு முன் நான் பார்த்ததே இல்லை. காலை ஒளியையே அவள் தன் மேனியில் போர்த்துக்கொண்டு இருப்பதுபோல் தோன்றிற்று.

அமூல்யன் அவள் காலடியில் விழுந்து நமஸ்கரித்தான். பிறகு எழுந்து, "அக்கா! உங்கள் கட்டளையை நிறைவேற்றிவிட்டேன். பணத்தைத் திருப்பிக் கொடுத்துவிட்டேன்" என்றான்.

"அமூல்யா! நீ என்னைக் காப்பாற்றினாய்" என்றாள் விமலா.

"தங்கள் உருவத்தை மனத்தில் தியானித்த வண்ணம் நான் பொய்யே கூறவில்லை. என் வந்தே மாதரம் மந்திரத்தை இனி வேண்டாம் என்று உங்கள் கால் அடியிலேயே எறிந்துவிட்டேன். இங்கே வந்ததும் உங்கள் பிரசாதமும் கிடைக்கப் பெற்றேன்" என்றான் அமூல்யன்.

அவன் கடைசி வார்த்தைகள் இன்னவென்று விளங்காமல் விமலா அவனைப் பேசாமல் பார்த்துக்கொண்டிருந்தாள். அமூல்யன் தன் கைச் சவுக்கத்து முடிப்பை அவிழ்த்துப் பர்பிகளைக் காட்டினான். 'நான் எல்லாவற்றையும் தின்னவில்லை. நீங்கள் உங்கள் கைகளினால் எடுத்துக்கொடுத்த பிறகு அவைகளைத் தின்னலாம் என்று இருக்கிறேன்" என்றான்.

அங்கே எனக்கு ஒன்றும் காரியம் இல்லை என்று தெரிந்ததும் நான் அவ்விடத்தை விட்டுச் சென்றேன். எனக்குப் பெரியதாய்ப் பேசத்தான் தெரிந்தது. எவ்வளவு பேசியும் கடைசியில் என்னைப்போல் ஓர் உருவத்தை வைத்து அவர்கள் எரியிடுவதைக் காண்பதைத் தவிர வேறு பயன் இல்லை. வீணாக நாசம் அடையாமல் ஓர் ஆத்மாவையும் நேர்வழிக்குக் கொண்டுவர என்னால் முடியவில்லை. அவ்விதச் சக்தியுள்ளவர்கள் கையை அசக்கினாலும்

காரியம் சாதகமாகிவிடும். என் சொற்களுக்கு அவ்வாறு சாதிக்கும் திறமை இல்லை. நான் ஜொலிக்கும் தணல் அல்ல. அணைந்து போன கரித்துண்டுதான். என்னைக் கொண்டு தீபத்தை ஏற்ற முடியாது. என் தீப வரிசைகள் எல்லாம் ஏற்றப்படாமலே கிடந்தன. இதை என் வாழ்க்கையிலிருந்தே அறிந்துகொள்ளலாம்.

மெதுவாக மதனியின் அறைப்பக்கமே சென்றேன். நானும் மற்றோர் ஆத்மாவின் உள்ளத்தில் உண்மையான அன்பு உணர்ச்சியை எழுப்ப முடியும் என்பதை உணர்ந்து அநுபவிப்பது, அன்று எனக்கு மிகவும் அவசிய மாகத் தோன்றிவிட்டது. வாழ்க்கை தன்னுடனேயே நின்றுவிட்டால் அதைப்பற்றிச் சரியாக அறிவது சாத்தியம் அல்ல. அதை வெளியேதான் தேடிக் காண வேண்டும்.

மதனியின் அறையைத் தாண்டிச் சென்றபோது அவள் வெளியே வந்து, "இன்று நீ மறுபடியும் நேரம் கழித்துத்தான் வரப் போகிறாய் என்று பயந்தேன். நீ வருவது தெரிந்தவுடனேயே இலை போடச் சொல்லிவிட்டேன்; எல்லாம் தயாராகிவிட்டது" என்றாள்.

"அதற்குள் நம்முடன் கொண்டு போவதற்கு உங்கள் பணத்தை எடுத்து வைத்துவிட்டு வந்துவிடுகிறேன்" என்றேன்.

அப்படியே அறைக்குச் சென்றபோது, "திருட்டைப்பற்றி இன்ஸ்பெக்டர் ஏதாவது தகவல் கூறினாரா?" என்று அவள் கேட்டாள். அந்த ஆறாயிரம் ரூபாயும் திரும்பி வந்துவிட்டதென்று என்ன காரணத்தாலோ அவளிடம் கூற எனக்கு விருப்பம் இல்லை. "அதற்காகத்தான் இவ்வளவு அமர்க்களம்" என்றேன்.

உள்ளே போய் என் சாவிக் கொத்தை எடுத்துப் பார்த்ததும் இரும்புப் பெட்டிச் சாவியை அதில் காணவில்லை. எனக்குத்தான் என்ன மறதி! அன்று காலையில் தானே எவ்வளவோ பெட்டிகளைத் திறந்து பூட்டிக்கொண்டிருந்தேன்! அப்போதெல்லாம் இரும்புப் பெட்டிச் சாவி அதில் இல்லை என்பதை நான் கவனிக்கவே இல்லை.

"ஏன்? சாவி எங்கே போயிற்று?" என்றாள் மதனி. சட்டைப் பைகள் ஒவ்வொன்றிலும் கை விட்டுத் துழாவினேன். அவளுக்கு நான் என்ன பதில் சொல்லுவேன்? தேடின இடத்தையே திரும்பத் திரும்பத் தேடிக்கொண்டிருந்தேன். சாவியைத் தவறி எங்கும் வைத்திருக்க முடியாது என்று இருவர் மனத்திலும் பட்டது. யாரோ அதை வேண்டுமென்றே எடுத்திருக்க வேண்டும். யார் எடுத்திருப்பார்கள்? என்னைத் தவிர வேறு மனிதர் யார் அங்கே வந்திருக்கக்கூடும்?

"அது போனால் போகிறது. முதலில் சாப்பிடு. உனக்கு வர வர மறதி அதிகமாக இருப்பதைப் பார்த்துச் சின்ன ராணி சாவியைத் தன்னிடமே ஒருவேளை வைத்துக் கொண்டிருக்கிறாளோ என்னவோ!" என்றாள் மதனி.

எனக்கு மிகவும் கவலையாகப் போய்விட்டது. என்னிடம் சொல்லாமல் ஒரு நாளும் விமலா என் சாவியை எடுக்கும் வழக்கமே இல்லை. அன்று நான் சாப்பிடும் போது விமலா அங்கே வரவில்லை. அமூல்யனுக்குத் தன் அறையில் விருந்தளித்து உபசரித்துக்கொண் டிருந்தாள். மதனி அவளைக் கூப்பிட்டு அனுப்புவதையும் நான் வேண்டாம் என்று தடுத்துவிட்டேன்.

நான் சாப்பிட்டு முடிந்ததும் விமலா அங்கே வந்தாள். மதனியின் எதிரில் சாவியைப்பற்றி ஒன்றும் கேட்க வேண்டாம் என்று இருந்தேன். ஆனால் விமலாவைக் கண்டதும் மதனி உடனே, "ஏண்டி அம்மா! இரும்புப் பெட்டிச் சாவி எங்கே என்று உனக்குத் தெரியுமா?" என்று கேட்டுவிட்டாள்.

"என்னிடந்தான் இருக்கிறது" என்றாள் விமலா.

"நான் சொல்லவில்லையா?" என்றாள் மதனி பெருமிதத்துடன். "நம் சின்ன ராணி இந்தத் திருட்டுகளைப் பற்றியெல்லாம் கவலைப்படாதவள்போல் பாவனை செய்கிறாளே ஒழிய ரகசியத்தில் எவ்வளவோ ஜாக்கிரதையாகத்தான் இருக்கிறாள்."

விமலாவின் முகத் தோற்றம் என்னைச் சந்தேகத்தில் ஆழ்த்தியது. "சாவி இருந்தால் இருக்கட்டும். நான் சாயங்

காலம் பணத்தை எடுத்து வைத்துக்கொள்ளுகிறேன்'' என்றேன்.

''பார்த்தாயா! மறுபடியும் தள்ளிப் போடுகிருயே! மனத்தில் தோன்றியபோதே உடனே செய்துவிடுவது தான் நல்லது'' என்ருள் மதனி.

''நான் பணத்தை இரும்புப் பெட்டியிலிருந்து எடுத்தாயிற்று'' என்ருள் விமலா.

அதைக் கேட்டு நான் திடுக்கிட்டேன்.

''பின் அதை எங்கே வைத்திருக்கிருய்?'' என்று மதனி கேட்டாள்.

''நான் செலவழித்துவிட்டேன்'' என்ருள் விமலா.

''இதென்ன கூத்து? அவ்வளவு பணத்தையும் எப்படிச் செலவழித்தாய்?''

விமலா அதற்கு ஒன்றும் பதில் கூறவில்லை. நானும் அவளை மேலே ஒன்றும் கேட்கவில்லை. மதனி ஏதோ சொல்ல வந்தவள் சொல்லாமல் அடக்கிக்கொண்டாள். ''சரி; போனல் போகிறது'' என்ருள். கடைசியில் என்னை நோக்கி, ''என் கணவர் பணம் வைத்திருந்தால் நானும் இப்படித்தான் செய்வது வழக்கம். அவர் கையில் இருந்தால் பிரயோஜனம் இல்லை என்று எனக்குத் தெரியும். அவரைச் சுற்றிக்கொண்டிருப்பவர்கள் ஒரு நிமிஷத்தில் அடித்துக் கொண்டு போய்விடுவார்கள். நீயும் ஏறக்குறைய அப்படித்தான் அப்பா! பணத்தைச் செலவழிக்க உங்களுக்குத் தான் எவ்வளவு வழிகள் இருக்கின்றன! நாங்களோ திருடிக்கொண்டுபோய்த்தான் அதைக் காப்பாற்ற வேண்டும். சரி, போய்ப் படுத்துக்கொள்'' என்ருள்.

இவ்வாறு கூறிவிட்டு மதனி என்னை என் அறைக்கு அழைத்துச் சென்ருள். எனக்கு எங்கே போகிறேன் என்றே தெரியவில்லை. நான் படுத்துக்கொண்டதும் அவள் என் பக்கத்தில் உட்கார்ந்துகொண்டு விமலாவை நோக்கி ஒரு புன்னகையுடன் ''அம்மா கண்ணே! வெற்றிலை பாக்கு இருந்தால் கொஞ்சம் கொடேன். என்ன இல்லையா? பெரிய துரைசானியாகிவிட்டாய. யாரை

யாவது போய் என் அறையிலிருந்து எடுத்துக் கொண்டு வரச் சொல்லு'' என்றாள்.

''நீங்கள் சாப்பிட்டாய்விட்டதா?'' என்று நான் பரிவுடன் விசாரித்தேன்.

''ஓ! நான் சாப்பிட்டு எவ்வளவோ நாழிகை ஆயிற்றே!'' என்றாள் அவள். அது வெறும் பொய் என்று எனக்குத் தெரியும்.

அவள் என் பக்கத்தில் உட்கார்ந்துகொண்டு என்ன என்னவோ வம்பு அளந்துகொண் டிருந்தாள். வேலைக் காரி விமலாவிடம் வந்து, ''இலையில் சாப்பாடு பரிமாறி ஆறிப் போய்க்கொண் டிருக்கிறது'' என்று சொன்னாள். அது விமலாவின் காதில் விழுந்தது போலவே தோன்ற வில்லை.

''இன்னும் சாப்பிடவில்லையா? ரொம்ப அழகாக இருக்கிறது! வெகு நேரம் ஆய்விட்டதே!'' என்று சொல்லிக்கொண்டே மதனி விமலாவை அழைத்துப் போய்விட்டாள்.

இரும்புப் பெட்டியிலிருந்து விமலா பணத்தை எடுத் ததற்கும் அந்த ஆறாயிரம் ரூபாய் திருட்டுப் போனதற் கும் ஏதோ சம்பந்தம் இருந்ததென்று எனக்குப் பட் டது. ஆனால் அதைப்பற்றித் தெரிந்துகொள்ளவும் எனக்கு அவா இல்லை. நான் அதைப்பற்றிக் கேட்கப் போவதே இல்லை.

தெய்வம் நம் வாழ்க்கையை அமைக்கும்போது அது அரைகுறையாகவே இருக்கிறது. அதைப் பூர்த்தி செய்து நமக்குப் பிடித்த உருவத்தில் கடைசி யாக அதை நாமே அமைத்துக்கொள்ள வேண்டும் என்பதுதான் அதன் நோக்கம். நான்முகன் படைத்த வழியிலேயே என் வாழ்க்கையை அமைக்கும்போது அதில் ஓர் உயர்ந்த கருத்தை வெளியிடவேண்டும் என்ற அவா எனக்கு எப்போதும் உண்டு. இந்த முயற்சியில் நான் என் வாழ்நாள் முழுவதையும் செலவழித்து வருகிறேன். ஆசை ஆவலாதிகளுக்கே இடம் கொடாமல் நான் எவ்வ ளவு சிரமப்பட்டிருக்கிறேன், எவ்வளவு தூரம் ஒவ்வொரு

சமயமும் என் மனத்தை அடக்கிவந்திருக்கிறேன் என்பது சர்வாந்தர்யாமியான அந்த ஈசனுக்குத்தான் தெரியும்.

நம் வாழ்க்கை நமக்கு முற்றும் சொந்தமல்ல என்பதுதான் ஒரு கஷ்டம். அதைத் தம் இஷ்டம்போல் அமைக்க விரும்பும் ஒருவர் தம் சுற்றுவட்டத்திலுள்ளவைகளின் உதவியால்தான் அவ்வாறு செய்ய முடியும். இல்லாவிட்டால் அவர் விருப்பம் நிறைவேறாது. ஆகவே இவ்வேலையில் விமலாவையும் சேர்த்துக்கொள்ள வேண்டுமென்று நான் அல்லும் பகலும் கனவு கண்டுகொண்டிருந்தேன். அவளை என் முழு மனத்துடன் நேசித்தேன். அந்தத் தைரியத்தில் என் காரியம் வெற்றி பெறாமல் இருக்க முடியாது என்று உறுதியாக நம்பிவிட்டேன். பிறகுதான் தங்கள் ஜீவிய அமைப்பின் வேலையில் சுற்றுவட்டத்தில் இருப்பவர்களையும் சர்வ சாதாரணமாகத் தம்முடன் சேர்த்துக்கொள்ளுபவர்கள் மனித வர்க்கத்தில் ஒரு வகையினர், நான் வேறு வகையினன் என்பதை அறிந்தேன். என்னிடம் அத்தகைய ஜீவசக்தி இருந்ததானாலும் அதை மற்றொன்றுக்கு அளிக்க எனக்கு வல்லமை இல்லை. என்னிடம் உள்ளதை எல்லாம் நான் எவர்களுக்கு அளித்தேனோ அவர்கள் எல்லாவற்றையும் எடுத்துக்கொண்டபோது என்னையும் சேர்த்து எடுத்துக் கொள்ளவில்லை.

இது என்ன சோதனை! எனக்கு ஒரு துணை வேண்டும் என்று நான் கஷ்டப்படும்போது 'எனக்கு நானே கதி' என்று ஆய்விட்டதே! ஆயினும் இந்தச் சோதனையில் நான் வெற்றி பெறுவேன் என்று சபதம் செய்கிறேன். இந்த வாழ்க்கைப் பிரயாணத்தின் முடிவுவரையிலும் முள் அடர்ந்த என் பாதையில் நான் தனியாகவே செல்வேன்.

என்னிடம் ஒருவிதமான கொடுமை இருந்தது என்று எனக்கு வெகுநாளாகச் சந்தேகம் உண்டு. விமலாவுக்கும் எனக்கும் உள்ள உறவைக் குற்றம் குறைவு என்பதே இல்லாமல் நிரூபித்துவிடவேண்டும் என்ற என் ஆவலில் ஒரே மூர்க்கத்தனந்தான் காணப்பட்டது. ஆனால் மானிட வாழ்க்கை நம் இஷ்டம்போல் நிரூபிப்பதற்காக ஏற்பட்டதல்ல. நற்குணத்தைத் தகுந்த சாதன

மாக நினைத்து நாம் அவ்வாறு செய்ய முயன்றாலோ அது தன் இயற்கையையே இழந்து நம்மைப் பழி வாங்கி விடுகிறது.

என்னை அறியாமலே என்னிடம் இருந்த இந்தக் கொடுமைதான் என்னையும் விமலாவையும் கொஞ்சம் கொஞ்சமாகப் பிரித்துவிட்டது என்பதை இவ்வளவு நாளாகநான் உணரவில்லை. என்னுடைய நிர்ப்பந்தத்தினால் விமலாவின் வாழ்க்கை ஓட வழியில்லாமல் தடைப்பட்டு அடியில் கரை சரிந்துபோன ஆற்றுவெள்ளம்போல் தடுமாறிவிட்டது. சில விஷயங்களில் நான் கண்டிப்பாக அவள் அபிப்பிராயங்களுக்கு விரோதமாக இருந்ததால் என்னிடம் உண்மையைக் கூற முடியாமல் அவள் இந்த ஆறாயிரம் ரூபாயையும் திருட வேண்டியதாயிற்று. என்னைப்போல், ஓர் எண்ணம் தோன்றிவிட்டால் அதையே பிடிவாதமாகப் பிடித்துக்கொள்ளுபவர்கள், தாம் கூறுவதை ஒப்புக்கொள்ளுவோரிடம் மனம் ஒத்துப் போய்விடுவார்கள். ஆனால் அதற்கு விரோதமாக இருப்பவர்களோ எம் போன்றவர்களை ஏமாற்றி வேறு விதமாகப் பழக முடியாது. ஒன்றுக்கும் மசியாத இதுபோன்ற பிடிவாதந்தான் மிக எளிய இயல்புடையவர்களையும் நேரான வழியைக் கைவிடும்படி செய்கிறது. நம் காரியங்களுக்குத் துணைவியாக வேண்டும் என்ற முயற்சியில் மனைவியின் இயல்பைக் கெடுத்துவிடுகிறோம்.

மறுபடியும் நான் வாழ்க்கையைப் புதிதாக ஆரம்பிக்க முடியாதா? அப்போது எளிய சுபாவமுடையவர்களின் வழியை அநுசரிப்பேனே! என் வாழ்க்கைத் துணைவிக்கு என் எண்ணங்களால் விலங்கிட்டதுபோல் செய்யாமல் என் பிரேமையின் இசைக் குழலை ஊதி, ''என்மீது உனக்குக் காதல் உண்டா? காதல் உண்டெனில் அதன் மூலம் நீ உன் விஷயத்தில் உண்மையாக நடந்துகொள்வாய்! என் யோசனைகள் அப்படியே இருக்கட்டும். உன் விஷயத்தில் தெய்வம் கொண்ட சங்கல்பமே நிறைவேறட்டும்!' என்று அல்லவா சொல்வேன்! ஆயினும் எங்களுக்குள் இருக்கும் விரோதமெல்லாம் ஒன்று சேர்ந்து வெளித்தோன்றும் இந்தத் திறந்த

வாய் கொண்ட ரணத்தை இயற்கைகூட ஆற்றுவது சாத்தியமா? எந்தத் திரைக்குப் பின் இருந்து இயற்கைச் சக்திகள் சப்தம் இல்லாமல் தம் வேலையைச் செய்கின்றனவோ அந்தத் திரை நடுவே கிழிந்து தொங்குகிறது. ரணங்களுக்குப் பஞ்சு வைத்துக் கட்டவேண்டும். எங்கள் அன்பினுல் ரணத்தை மூடிக் கட்டினுல் பிறகு அது வடுவில்லாமல் ஆறிப்போகும் நாள் வராதா? ஆனுல் அதற்குக் காலம் மீறிப்போய்விட்டதோ? ஒருவர் மீது ஒருவர் கொண்ட தப்பெண்ணத்திலேயே எவ்வளவோ காலம் சென்றுவிட்டதே! ஒருவரைப்பற்றி ஒருவர் அறிந்து கொள்வதற்கே இவ்வளவு நாள் ஆனுல் திருத்திக்கொள்வதற்கு இன்னும் எவ்வளவு காலம் வேண்டியிருக்குமோ! கடைசியில், ரணம் நன்ருக ஆறிவிட்டாலுந்தான் என்ன? அதனுல் ஏற்பட்ட அதிர்ச்சி என்றைக்காவது மீண்டும் சரியாகுமா?

கதவருகே ஏதோ சப்தம் கேட்டதுபோல் தோன்றிற்று. நான் திரும்பிப் பார்த்தபோது திறந்த கதவின் வழியே விமலா திரும்பிப் போய்க்கொண்டிருப்பதைக் கண்டேன். உள்ளே வரலாமா வேண்டாமா என்று யோசித்துக்கொண்டு அவள் கதவருகே சற்று நின்றுவிட்டுப் பிறகு திரும்பிப் போயிருக்கவேண்டும். நான் உடனே எழுந்து வாசற்படியருகே ஓடி, ''விமலா'' என்று கூப்பிட்டேன்.

அவள் அப்படியே நின்ருள்; திரும்பவில்லை. அவளை மெதுவாகக் கையைப் பிடித்து அறைக்குள் அழைத்து வந்தேன். அவள் ஒரு தலையணைமீது குப்புற விழுந்து விம்மி விம்மி அழத் தொடங்கினுள். நான் ஒன்றும் பேசாமல் அவள் கையைப் பிடித்தபடியே அவள் தலைமாட்டின் பக்கம் உட்கார்ந்திருந்தேன்.

தன் துயரத்தின் வேகம் கொஞ்சம் குறைந்ததும் விமலா எழுந்து உட்கார்ந்துகொண்டாள். அவளை இழுத்து என் மார்போடு அணைத்துக்கொள்ள முயன்றேன். அவளோ என் கைகளைத் தள்ளிவிட்டு என் காலடியில் விழுந்து நமஸ்கரித்தாள். நான் வேகமாகக்

கால்களை இழுத்துக்கொண்டேன். அப்படியும் அவள் விடாமல் அவைகளைத் தன் கைகளால் சேர்த்துத் தழுவிக்கொண்டு, "இல்லை, நீங்கள் இழுத்துக்கொள்ளக் கூடாது. என் பூஜையை ஏற்றுக்கொள்ளத்தான் வேண்டும்" என்று நெஞ்சடைத்த குரலில் கூறினாள்.

நான் அவள் இஷ்டப்படியே விட்டுவிட்டேன். அவளைத் தடுப்பதற்கு நான் யார்? அவள் தொழும் தெய்வம் நான்தானா? எனக்கு ஏன் அதைப்பற்றிக் கஷ்டம்?

# விமலா

ஆம்; அன்பு வெள்ளமானது பக்தி என்னும் கடலில் போய்ச் சேரும் பாக்கியத்தை அடைவதற்கு இதுதான் சமயம். அந்த நீலக் கடலில் சேற்றைப் போல் கலங்கி வரும்.ஆற்றுவெள்ளம் கலந்து எங்கேயோ மறைந்துவிடுகிறது.

இப்போது எனக்குப் பயமே இல்லை. என்னைப்பற்றியாவது பிறரைப்பற்றியாவது நான் அஞ்சவில்லை. நான் தீயில் அல்லவா முழுகி எழுந்திருக்கிறேன்! தீக்கு இரையாகக் கூடிய யாவும் எரிந்து சாம்பலாகிவிட்டன. மிஞ்சி நிற்பதோ அழிவற்றது. தன் துன்பக்கடலில் என் பாவங்களையெல்லாம் ஏற்றுக்கொண் டிருப்பவரின் சரணங்களில் என்னை அர்ப்பணம் செய்துவிட்டேன்.

நாங்கள் இன்றிரவு கல்கத்தாவுக்குப் போகிறோம். இதுவரையில் மன வேதனையில் ஆழ்ந்து கிடந்த நான் என் சாமான்கள் ஒன்றையும் கவனிக்காமல் இருந்துவிட்டேன். இப்போது அவைகளை ஒழுங்காக எடுத்துவைத்துப் பிரயாணத்துக்குத் தயாராகவேண்டும்.

சற்று நேரத்துக்கெல்லாம் என் கணவரும் வந்து என்னுடன் சாமான்களை எடுத்துவைக்கத் தொடங்கினார்.

"கூடாது; நீங்கள் போய்த் தூங்குவதாக அல்லவா சொன்னீர்கள்?" என்றேன்.

"நான் ஏதோ அப்படிச் சொல்லிவிட்டேன். ஆனால் தூக்கத்தை எங்கும் காணவில்லையே!" என்றார் அவர்.

"அதெல்லாம் முடியாது. நீங்கள் போய்ச் சற்று நேரமாவது படுத்துக்கொள்ளுங்கள்" என்றேன்.

"நீ எப்படித் தனியாக இவைகளை எடுத்து வைக்க முடியும்?"

"ஏன் முடியாது?"

"என்னுடைய உதவி இல்லாமல் நீ தானே செய்ய முடியும் என்று வேண்டுமானால் ஜம்பம் அடித்துக் கொள்ளலாம். எனக்கு என்னவோ நீ இல்லாவிட்டால் ஒன்றும் முடியாது. அந்த அறையில் தூக்கங்கூடத் தனியாக வர மாட்டேன் என்கிறது" என்று கூறிவிட்டு அவர் மறுபடியும் வேலையில் இறங்கி விட்டார்.

இதற்குள் ஓர் ஆள் வந்து ஸந்தீப் பாபு தாம் வந்திருப்பதைத் தெரிவிக்கும்படி கூறியதாகச் சொன்னான். அவர் யாரைப் பார்க்க வேண்டும் என்று சொன்னார் என்பதைக் கேட்க எனக்குத் தைரியமில்லை. மென்மையான இளஞ்செடியின் இலைகள்போல் வானம் சட்டென்று மூடிக்கொண்டதோ என்று தோன்றிற்று.

"விமலா! வா! போய் ஸந்தீப் என்ன சொல்லுகிறான் என்று கேட்போம். விடைபெற்றுச் சென்றவன் திரும்பி வந்திருப்பதால் ஏதாவது முக்கியமான சமாசாரமாகத்தான் இருக்கும்" என்றார் என் கணவர்.

வரவில்லை என்று கூறுவதற்கு எனக்குச் சங்கோசமாக இருந்ததால் பேசாமல் அவருடன் சென்றேன். ஸந்தீப் சுவரில் தொங்கிக்கொண்டிருந்த ஒரு படத்தைப் பார்த்துக்கொண்டு நின்றிருந்தார். எங்களைக் கண்டதும் அவர், "மறுபடியுமா இவன் வந்துவிட்டான் என்று யோசித்திருப்பீர்கள். பிரேத காரியங்கள் முழுவதையும் செய்து முடிக்கும் வரையில் ஆத்மாவுக்குச் சாந்தி கிடையாதென்று தெரியும் அல்லவா?" என்று கூறிவிட்டுத் தம் சட்டைப் பைக்குள் இருந்த சவுக்கத்தில் கட்டி இருந்த ஏதோ ஒரு சாமானை எடுத்து மேஜை மீது வைத்து அவிழ்க்கத் தொடங்கினார். அவைதாம் அந்தச் சவரன்கள்.

"என்னைத் தவறாக நினைத்துவிடாதே! நிகில்! உன் சகவாசத்தால் நான் திடீரென்று யோக்கியனாக மாறிவிட்டதாக எண்ணிவிட வேண்டாம். தவறான வழியில் கிடைத்த பணத்தைப் பச்சாத்தாபத்துடன்

திருப்பிக் கொடுக்கும் பேர்வழி அல்ல நான். ஆனாலும்...!'' அவர் மேலே சொல்லாமல் நிறுத்தினார். சற்றுப் பொறுத்து அவர் என் கணவர் பக்கம் திரும்பிக் கொண்டு என்னை நோக்கிக் கூறியதாவது: ''ராணி! இதுவரையிலும் நிம்மதியாக இருந்த என் மனத்தில் இவ்வளவு காலம் கழித்து இப்போது கொஞ்சம் பச்சாத்தாபம் ஏற்பட்டுவிட்டது. ஒவ்வோர் இரவும் தூக்கம் தூங்கி எழுந்த பிறகு மனத்துடன் மல்யுத்தம் செய்ய வேண்டியிருப்பதால் அதைக் கேவலம் மனப்பிரமை என்று நான் தள்ள முடியாது. அதன் கடனைத் தீர்க்காமல் நான்கூடத் தப்ப முடியாது. அதன் வசத்தில் அகப்பட்டுவிட்டதனால் என் செயலுக்குப் பரிகாரத்தைச் செய்துவிடுகிறேன். ராணி, இவ்வுலகில் உங்கள் ஒருவரிடமிருந்துதான் என்னால் ஒன்றையும் எடுத்துக்கொள்ள முடியாது. நான் நிர்க்கதியாகப் போகும் வரையிலும் உங்களை நான் விடவும் மாட்டேன். இவைகளைத் திரும்ப எடுத்துக்கொள்ளுங்கள்.'' இவ்வாறு கூறிவிட்டு அவர் தம் சட்டைக்குள்ளிருந்த நகைப்பெட்டியை எடுத்து மேஜைமீது வைத்துவிட்டு அங்கிருந்து வேகமாகச் சென்றார்.

''ஸந்தீப்! இங்கே வா, நான் சொல்வதைக் கேள்!'' என்று என் கணவர் கூப்பிட்டார்.

''எனக்குச் சாவகாசம் இல்லை, நிகில்!'' என்றார் கதவருகே சென்ற ஸந்தீப். ''இந்த முகம்மதியர்கள் இருக்கிறார்களே, அவர்கள் என்னை விலை மதிக்க முடியாத ஒரு ரத்தினமாக மதித்து என்னைக் கொள்ளையிட்டுத் தங்கள் பிரேத பூமியில் என்னை மறைத்து வைக்கப் போகிறார்களாம். ஆனால் நான் பிழைத்திருப்பது அவசியம் என்று எனக்குத் தோன்றுகிறது. வடக்கே போகும் ரெயில் கிளம்புவதற்கு இன்னும் இருபத்தைந்து நிமிஷங்களே இருக்கின்றன. அதற்குள் நான் போய்ச் சேரவேண்டும். இப்போது சத்தியாக நான் போய் வருகிறேன். அடுத்தபடி சரியான சந்தர்ப்பம் வாய்க்கும் போது நாம் நம் விஷயத்தை நேரில் பேசிக் கொள்வோம். என் வார்த்தையைக் கேட்பதாக இருந்தால்

நீயும் இவ்விடத்தை விட்டு இப்போதே புறப்பட்டுப் போய்விடுவதுதான் நல்லது. ராணி, துன்பத்துக்கும் விநாசத்துக்கும் அதிதேவதையான உங்களை மன்னிக்கிறேன்'' என்று கூறிவிட்டு ஸந்தீப் அங்கிருந்து ஒரே ஓட்டமாகச் சென்றுவிட்டார். நான் திகைத்து நின்றேன்.

இந்தச் சவரன்களும் நகைகளும் இவ்வளவு அற்பமாகவும் மட்டமாகவும் இதுவரையிலும் எனக்குத் தோன்றியதே இல்லை. சற்று நேரத்துக்கு முன்புதான் என்னுடன் ஊருக்கு என்ன கொண்டுபோவது, அதை எப்படிக் கட்டிக்கொண்டு போவது என்றெல்லாம் நான் வெகுவாக யோசித்துக்கொண்டிருந்தேன். இப்போதோ எதையும் கொண்டுபோகும் அவசியம் இல்லை என்றே தோன்றிற்று. புறப்பட்டுப் போவதுதான் எதையும் விட முக்கியமானதாக இருந்தது.

என் கணவர் தம் இடத்தை விட்டு எழுந்து என்னிடம் வந்து என் கையைப் பிடித்துக்கொண்டார். ''நாழிகை ஆகிவிட்டது. புறப்படுவதற்கு வேண்டியவைகளைச் சித்தம் செய்ய அதிக நேரம் இல்லை'' என்றார். அப்போது சந்திரநாத் பாபு திடீரென்று உள்ளே வந்தார். எங்கள் இருவரையும் சேர்ந்து கண்டதும் அவர் ஒரு நிமிஷம் தயங்கி நின்றார். பிறகு, ''தாயே! இச்சமயம் நான் வந்ததுபற்றி மன்னிக்க வேண்டும்'' என்று சொல்லிவிட்டு என் கணவரை நோக்கி, ''நிகில், முகம்மதியர்கள் மீறிக் கிளம்பிவிட்டார்கள். ஹரீசகுண்டனின் கஜானாவில் புகுந்து கொள்ளையடித்துக்கொண்டிருக்கிறார்கள். அது வேண்டுமானாலும் போகிறது. அந்த வீட்டு ஸ்திரீகளிடம் அவர்கள் செய்யும் அக்கிரமந்தான் சகிக்க முடியாமல் இருக்கிறது'' என்றார்.

''நான் இதோ போகிறேன்'' என்றார் என் கணவர்.

''நீங்கள் போய் என்ன செய்ய முடியும்?'' என்று நான் அவர் கையைப் பிடித்துக்கொண்டு வேண்டினேன்.

''நீங்களாவது அவரைப் போகவேண்டாம் என்று சொல்லக் கூடாதா?'' என்றேன் குருதேவரை நோக்கி.

"தாயே! வேறொன்றும் செய்வதற்குச் சாவகாசம் இல்லையே!" என்று அவர் பதில் உரைத்தார்.

"பயப்படாதே விமலா!" என்று கூறிவிட்டு என் கணவர் சென்றார்.

நான் ஜன்னலருகே சென்று பார்த்தபோது என் கணவர் கையில் ஆயுதம் ஒன்றும் இல்லாமல் குதிரைமீது அதிவிரைவாகச் செல்வதைக் கண்டேன். உடனே என் ஓர்ப்படி உள்ளே ஓடி வந்தாள். "என்னடி அம்மா இது! அவன் போகும்போது எப்படிப் பார்த்துக் கொண்டிருந்தாய்?" என்றாள்.

"போய் உடனே திவானை இங்கே வரச் சொல்' என்று ஓர் ஆளை ஏவினாள். நாங்கள் ஒருவரும் திவான் எதிரில் வருவதில்லை. ஆனால் அன்று அதையெல்லாம் என் ஓர்ப்படி சிறிதும் கவனிக்கவில்லை.

திவான் வந்ததும், "குதிரை மீது ஓர் ஆளை அனுப்பி மகாராஜாவை உடனே அழைத்து வரச் சொல்லுங்கள்" என்றாள்.

"தாயே! நாங்கள் எல்லோரும் அவரைப் போக வேண்டாம் என்று சொல்லிப் பார்த்தோம். ஆனால் அவர் கேட்கவில்லையே!" என்றார் திவான்.

"பெரிய ராணிக்கு உடம்பு சரியாக இல்லை; சாகக் கிடக்கிறாள் என்று சொல்லி அனுப்புங்கள்" என்றாள் என் ஓர்ப்படி ஒரே கவலையுடன்.

திவான் சென்றதும் அவள் என்னை நோக்கி வெறி கொண்டவள் போல், "அடி பாவி! ராக்ஷசி! நீ சாக முடியாதென்றால் அதற்காக அவனைச் சாக [illegible]க்க வேண்டுமா?" என்று இரைந்தாள்.

மாலை வெளிச்சம் மங்க ஆரம்பித்தது. பீர்க்க மரத்துக்குப் பின்னால் சூரியன் அஸ்தமிப்பது தெரிந்தது. இன்றும் அந்த அஸ்தமனக் காட்சி என் கண்முன் காண்பது போல இருக்கிறது. இரு பக்கத்திலும் இரண்டு பெரிய மேகங்கள்; இடையே கதிரவன் எரிந்த செந்நிறமான இறக்கைகளையுடைய ஒரு பெரிய பறவைபோல் காட்சி

யளித்தான். இரவைக் கடப்பதற்காகப் பகல் வெகு வேக மாகப் பறந்து செல்வதுபோல் எனக்குத் தோன்றியது.

வர வர இருட்டிக்கொண்டே இருந்தது. தூரத்தில் தீப்பிடித்த கிராமம் ஒன்றிலிருந்து ஒவ்வொரு சமயம் அடிவானத்துக்கு மேல் விட்டு விட்டு ஜ்வாலை தெரிவது போல், ஏதோ பெரும் சப்தம் ஒன்று விட்டு விட்டு அலை போல் மேல் எழும்பிக்கொண் டிருந்தது. சாயங்காலம்; தீபாராதனை சமயம்; ஆகையால் கோவிலிலிருந்து மணி ஓசை கேட்டது. என் ஓர்ப்படி அங்கே சென்று கூப்பிய கைகளுடன் தெய்வத்தைப் பிரார்த்தித்துக்கொண் டிருந் தாள் என்பதை அறிவேன். ஆனாலும் என்னால் மட்டும் அந்த ஜன்னலைவிட்டு ஓர் அடிகூட அப்பால் எடுத்து வைக்க முடியவில்லை.

வெளியில் இருண்டுகொண்டே வந்ததால் சாலை மரங்களோ அவைகளுக்கு அப்பாலுள்ள கிராமமோ தெளிவாகத் தெரியவில்லை. எங்கள் தோட்டத்தி லுள்ள குளத்து ஜலம் அந்தகனது கண்போல் பிரகாசமற்றுத் தென்பட்டது. அந்த அந்தி நேரத்தில் கோவில் கோபுரமானது கழுத்தை நீட்டி எதையோ பார்க்க முயன்றதுபோல் தோன்றிற்று.

இரவில் சப்தங்கள் என்ன என்னவோ விதமாகக் கேட்கின்றன. ஒரு குச்சி முறிந்த ஓசை கேட்டாலும் யாரோ உயிருக்குப் பயந்து ஓடுவதுபோலத் தோன்றி விடுகிறது. கதவை மூடும் சப்தந்தான் என்றாலும் திடுக்கிட்டுப் போன உலகத்தின் இருதயமே படீரென்று அடித்துக்கொண்டதோ என்ற சந்தேகம் எழுகின்றது. தூரத்தில் மரங்களினிடையே வெளிச்சம் தெரிவதுபோல் தோ[illegible]றி உடனே மறைந்துவிடும். அடிக்கடி குதிரை களி[illegible] குளம்புச் சப்தம் கேட்கும். யார் என்று பார்த்தால் குதிரைமீது அரண்மனையை விட்டுச் செல் பவர்களாக இருப்பார்கள்.

நான் மட்டும் இறந்துவிட்டால் இந்தக் கலவரமெல் லாம் அடங்கிவிடும் என்று எனக்கு விடாமல் தோன்றிக் கொண்டிருந்தது. நான் உயிரோடு இருக்கும் அளவும் என்

பாவங்கள் எங்கும் நாசத்தை விளைவித்துக்கொண்டே இருக்கும். அந்தச் சமயம் பெட்டியில் இருந்த கைத் துப்பாக்கி எனக்கு ஞாபகம் வந்தது. ஆனால் அதைப் போய் எடுத்து வர என் கால்கள் ஜன்னலை விட்டு அசைய மாட்டேன் என்றன. என் விதி எப்படி என்பதை நான் அறிந்துகொள்ள வேண்டாமா?

மணி பத்து அடித்தது. சற்று நேரம் கழித்துத் தூரத்தில் வெளிச்சம் தெரிந்தது. ஒரு ஜனக் கூட்டம் சாலை வழியே பாம்புபோல் வளைந்து அரண்மனைப் பக்கம் வருவதைக் கண்டேன்.

அந்தச் சத்தத்தைக் கேட்டுத் திவான் வாசலுக்கு ஓடினார். அப்போது ஓர் ஆள் குதிரைமீது வேகமாக வந்தான். "என்ன சமாசாரம், ஜடாதரா!" என்று திவான் அவனை வினவினார்.

"ஒன்றும் சுவாரஸ்யமில்லை" என்று அவன் பதில் சொன்னான். அந்த வார்த்தைகள் நான் நின்றிருந்த இடத்தில் எனக்கு நன்றாகக் கேட்டன. அடுத்தபடியாக ஏதோ மெதுவாகச் சொன்னது என் காதில் விழவில்லை.

ஆட்கள் ஒரு பல்லக்கையும் அதன் பின்னால் ஒரு நீண்ட பலகையையும் சுமந்துகொண்டு வந்தனர். பல்லக்கின் பக்கத்தில் டாக்டர் நடந்து வந்துகொண் டிருந்தார்.

"டாக்டர்! உங்களுக்கு என்ன தோன்றுகிறது?" என்று கேட்டார் திவான்.

"அதற்குள் ஒன்றும் சொல்ல முடியாது. தலையில் பட்டிருக்கும் காயம் பலமானது" என்றார் டாக்டர்.

"அமூல்ய பாபு?"

"அவன் மார்பில் குண்டு பட்டிருக்கிறது. இனி ஒன்றும் பிரயோஜனமில்லை; தீர்ந்து போயாற்று" என்றார் டாக்டர்!

முற்றும்

●

**சோறும் சொர்க்கமும்**

பி. எம். கண்ணன்

ஏழை மக்களுக்குச் சோறுதான் சுவர்க்கம். பஞ்ச காலத்தில் சோறில்லாமல் ஏழைமக்கள் திண்டாடுகின்றனர். பணக்காரர்கள் தங்கள் பாட்டில் இருக்கின்றனர். கொள்ளையும் கொலையும் தொடங்கிவிடும் நிலையில் இருக்கிறது. அமெரிககாவுக்குப் போயப் படித்துவந்த பணக்கார ரவி இந்த நிலையை எப்படிச் சமாளித்தான் என்பதை இந்த நாவலில் பாருங்கள்.

**காதல் தூங்குகிறது** ... ரூ. 4/-

கு. ராஜவேலு

(நாராயணசாமி ஐயர் பரிசுநாவல் 1950)

மதவெறி, அன்பு, தியாகம், மங்கை ஒருத்தியின் புரட்சிப் போக்கு எல்லாவற்றையும் இணைத்துப் பின்னின ஒரு ரசமான நாவல்.

**நிழலும் ஒளியும்** ... ரூ. 4/-

கி. சரஸ்வதி அம்மாள்

1948-ஆம் வருஷத்துக் கலைமகள் ரூ. 1000 பரிசுப்போட்டியில் முதற் பரிசு பெற்ற நாவல்.

---

**கலைமகள் காரியாலயம், மயிலாப்பூர், சென்னை.**